# தொல்காப்பியம்
## சொல்லதிகாரம்
## இளம்பூரணம்

காவேரிபாக்கம்
நமச்சிவாய முதலியார்
பதித்தது

1931
சென்னை
ஸி. குமாரசாமி நாயுடு
ஸன்ஸ்

காக்ஸ்டன்
பிரெஸ்

மூன்று
ரூபாய்

# பொருள் அடக்கம்

## சொல்லதிகாரம்



# முன்னுரை

தொல்காப்பியம் என்னும் நூல், எழுத்து சொல் பொருள் ஆகிய முப்பெரும் பகுதியினை யுடையது. இதனை, எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் பொருளதிகாரம் எனப் பிற்பட வழங்கலாயினர். இறையனார் களவியல் உரையுள், 'இதனைப் பொருட்பாலிற் கண்டு கொள்க' எனக் காணப்படுதலின், மேற்கூறிய பகுதிகள் எழுத்துப்பால், சொற்பால், பொருட்பால் என வழங்கி யிருந்ததுங் கூடுமென ஊகித்தற்கு இடமுண்டு.

தொல்காப்பியம் முழுமைக்கும் உரை கண்டார் இருவர் ஆசிரியர்; அவருள் முதன் முதலில் உரைகண்டவர் இளம்பூரண அடிகள்: இறுதியிற் கண்டவர் நச்சினார்க்கினியர். பேராசிரியர் என்பார் ஒருவரும் இவ்வாறே நூல் முழுமைக்கும் உரை கண்டனர் என்ப. அவற்றுள் மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் ஆகிய இந் நான்கிற்கும் உரை கிடைத்திருக்கின்றது.

தொல்காப்பியம் சொல்லதிகாரத்திற்குப் பல்லோர் பல திறப்பட உரை வகுத்துள்ளார்; அவருள்ளும் முதற்கண் உரை கண்டவர் இளம்பூரணரே யாவர்; பின்னர், கல்லாடனார், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் என்பவர்களும் உரை வகுத்தனர்; இவற்றுக்கெல்லாம் முதன்மையாக நிற்பது இளம்பூரணர் எழுதிய உரையேயாம்.

எழுத்ததிகாரத்திற்கும் இரண்டு உரைகள் உண்டு; ஒன்று இளம்பூரணரும் மற்றொன்று நச்சினார்க்கினியரும் எழுதியவை.

இச் சொல்லதிகாரம் நலம்பெற முடிவுபெறக் காரணமாயிருந்தவர் என்னுடன் தமிழ் பயின்றவராகிய அறிஞர் சே. சிவஞானம் பிள்ளை யவர்கள்; இவர் நல்ல ஏடு ஒன்றைத் தேடித் தந்து, என்னை அடிக்கடி ஊக்கிவந்தனர்.

இந்நூலை யான் அச்சிட முயன்ற காலத்து என்னுடனிருந்து சுவடிகளை ஒப்பிட்டுத் தூய்மைசெய்யத் தொடங்கினவர் செந்தமிழறிஞர் தி. த. கனகசுந்தரம் பிள்ளை யவர்கள்; இந்நூல் 64 - பக்கங்கள் முடியுமுன்னரே அவர் காலஞ்சென்றனர்; அதன் பொருட்டு யான் பெரிதும் கவல்கின்றேன்.

பின்னர் இந்நூல் வெளிவர என்னைப் பெரிதும் ஊக்கிவந்தவர் செந்தமிழறிஞர் எஸ். அநவரதவிநாயகம் பிள்ளை யவர்கள்; அதன் பொருட்டு அன்னார்க்கு நன்றி கூறுகின்றேன்.

மற்றும், இந்நூல் அச்சிடத் தொடங்கியதுமுதல் முடிவுகாறும் என்னுடனிருந்து, ஏடுகளை ஒப்புநோக்குதல் முதலிய செயல்களைச் சோர்வுபடாது செய்து வந்தவராகிய செல்வச் சிரஞ்சீவி, மு. எத்திராஜுலு நாயுடு அவர்கள் திறம் நன்கு பாராட்டற்பாலதாம்.

ஏதும் அறியாத இச் சிறியேனை இந் நன்முயற்சிக்கண் புகுத்தித் தோன்றாத் துணையாகவிருந்து அருள்புரியும் தணிகைப் பெருமானை என் மன மொழி மெய்களால் வாழ்த்தி வணங்குகின்றேன்.

'கடலகம்'
மயிலை, சென்னை.

கா. நமச்சிவாயன்.

# இளம்பூரண அடிகள்

## உரைத்திறம்

இவ் வுரையாசிரியராகிய இளம்பூரணரை இளம்பூரண அடிகள் என்றும் கூறுவது வழக்கு. இவர் தொல்காப்பியத்திற்கு முதற்கண் உரைகண்டவர் என்பதுபற்றிச் சேனாவரையர் முதலி-யோரும் இவரை உரையாசிரியர் என்றே சிறப்பித்துக் கூறுவர். இவரைப்பற்றிய செய்தி வேறு யாதும் புலப்படவில்லை.

இளம்பூரணர் நூலுக்கு உரை வகுக்குங்கால், முதலில் சூத்திரம் நுதலியதைத் தொகுத்துச் சுட்டி, பின்னர், சொற்-களையும் சொற்றொடர்களையும் பிரித்துக்காட்டி, என்பது என்று தொடங்கி, உரைவகுத்து, ஈற்றில் என்றவாறு என முடிப்பது பெருவழக்கு; சிறுபான்மை வேறு வகையாகவும் உரைப்பர். சில சூத்திரங்கள் நுதலியது இன்னதெனக் கூறாதுஞ் செல்லுவர். சில சூத்திரங்களுக்குப் பொழிப்புரையுங் கூறுவர்.

சிற்சில இடங்களில் சூத்திரங்களுக்கு முடிபு காட்டி, இலக்கணங் கூறுவர்; இன்றியமையாத சில சொற்களுக்குத் தனிப்பட உரையும் விரிப்பர்.

சில இடங்களில் கருத்துரை கூறிச்செல்வர்; சில சூத்தி-ரங்களின் பகுதியைப் பிரித்துக்காட்டி வரலாற்று முறையால் விளக்குவர்; சில இடங்களில் மிகப் பெருக்கமாகவும் உரை விரிப்பர்.

சில சூத்திரங்களுக்கு வரலாறு காட்டி உரை விரிப்பர்; சில சூத்திரங்களுக்கு முடிவிடங்களைத் தொகுத்துக்கூறி, மற்றப் பகுதிகட்கு வரலாற்றின் மூலமாக உரை விளக்குவர்.

சில இடங்களில் சில சூத்திரங்களை உடன்கூட்டி, 'உரை-யியைபு நோக்கி இவ்வாறு கூறப்பட்டது' என்பர்.

சில சூத்திரங்களில் மொழிகளை மாற்றியமைத்து முடி-விடங் கூறுமாற்றால் மற்றொருவர் கருத்தையுங் காட்டுவர்;

சில சூத்திரங்களின் ஒரு பகுதிக்குப் பொழிப்புக்கூறி, மற்றையவற்றிற்கு சொல்லாற்றல் தோன்றப் பொருள்விரிப்பர். சில சூத்திரங்களுக்கு வரலாறு காட்டி அதனையே உரையாகச் செய்வர்.

இனி, 'கல்வியின்றுகிய காரணம் வந்தவழிக் கண்டுகொள்க' (சூத் - 31) எனவும், 'அது பாடமறிந்து திருத்திக்கொள்க' (சூத் - 35) எனவும், 'வழக்குப் பெற்றுழிக் கொள்க' (சூத்-44) எனவும், 'முதல் சினையாவது வந்தவழிக் கண்டுகொள்க' (சூத் - 70) எனவும், 'வழக்குப் பெற்றவழிக் கண்டுகொள்க' (சூத்-83) எனவும், 'ஓகார ஈறும் ஏகார ஈறுமாய் வருவன விரவுப் பெயர் உளவேற் கண்டுகொள்க' (சூத் - 101) எனவும், 'இன்றிவர் என்பது இத்துணைவர் என்னும் பொருட்டுப் போலும்' (சூத் - 110) எனவும், 'செய்ம்மன என்பது இப்போது வழக்கரிது' (சூத் - 138) எனவும், 'உண்ணு வந்தான் என்பது இப்பொழுது வழக்கினுள் உண்ணுவந்தான் என நடக்கும்' (சூத் - 143) எனவும், 'இனிப் பலவினத்து எச்சம் அடுக்கி வருமாறு வழக்கினகத்துக் கண்டுகொள்க' (சூத்-145) எனவும், 'அன்னவழக்கு உள்வழி' (சூத் - 155) எனவும், 'அதற்கு மெய்யுரை வல்லோர்வாய்க் கேட்டுணர்க' (சூத் 223) எனவும், 'இதுவும் மெய்யுரை போலும் என்பது' (சூத் - 250) எனவும், அழான், புழான் என்பன அக்காலத்து அவை உண்மையான் ஆசிரியன் ஓதி முடிபு காட்டப்பட்டன' (சூத் - 257) எனவும் இவ்வுரையாசிரியரே கூறுவ்தனுல், இவர் காலத்திலேயே ஐயப்பாட்டிற்கு இடமான செய்திகள் பல இருந்திருத்தல் வேண்டுமெனத் தோன்றுகின்றது.

அன்றியும் ஒருவன் (4, 20, 29), ஒரு திறத்தார் (4, 41, 45, 259), ஒருவன் சொல்லுவது (6, 17), ஒருசார் ஆசிரியர் (17, 33, 43), என்பாரும் உளர் (24, 26), ஒரு கருத்து (51, 53, 252), இருதிறத்தார் ஆசிரியர் (92), ஒரு சாரார் (222, 259, 261), இப்பகுதியர் ஆசிரியர் (236), எனக்கூறுவதை நோக்கின், இவ்வுரையாசிரியருக்கு முன்பே தொல்காப்பியத்திற்குப் பல்லோர் உரை வழங்கிவந்ததென்பது நன்கு விளங்கும்.

# சொல்லதிகாரம்

## சேனவரையர் உரையாசிரியரை மேற்கோண்டும் மறுத்தும் கூறுமிடங்கள்

[சேனு : 1 — இளம்: 1]

உரையாசிரியரும் எழுத்தாதற்றன்மையொடு புணர்ந்து என்பார், 'எழுத்தொடு புணர்ந்து' என்றாராகலின், ஒருபுடை யொற்றுமையே கூறினர்.

[சேனு : 1 — இளம் : 1]

'என்ப' என்னும் முற்றுச்சொல்லினது பகரங்குறைத்து மன்னும் ஆரும் என இரண்டு இடைச்சொற்பெய்து விரித்தார் என்று உரையாசிரியர் கூறினரால் எனின்— என்மனர் என்பது இடர்ப்பட்டுழிச் சிறுபான்மை வாராது, நூலுள்ளும் சான்றோர் செய்யுளுள்ளும் பயின்று வருதலானும், இசைநிறை யென்பது மறுத்துப் பொருள் கூறுகின்றார் பின்னும் இசைநிறை யென்றல் மேற்கோண்மலைவாதலானும், அவர்க்கு அது கருத்தன்று என்க. மாணக்கர்க்கு உணர்வு பெருகல் வேண்டி வெளிப்படக் கூறாது உய்த்துணர வைத்தல் அவர்க்கு இயல்பாகலாற் செய்யுள்முடிபு என்பது கூறாராயினர்.

[சேனு : 1 — இளம் : 1]

இன்சாரியை வேற்றுமையுருபு பற்றியும் பற்றாதும் நிற்கும் என்று உரையாசிரியர் இரண்டாவது விரித்தாரால் எனின் —'சாரியையுள்வழிச் சாரியை கெடுதலுஞ் - சாரியை யுள்வழித் தன்னுருபு

நிலையலும்' என்று இரண்டாவதற்குத் திரிபோதினமையானும், 'செலவினும் வரவினுந் தரவினுங் கொடையினும்' என்புழியும் பிறுண்டுமெல்லாம் ஏழாவது விரித்தற்கேற்பப் பொருளுரைத்தமை-யானும் அவ்வுரை போலியுரை யென்க.

[சேனா: 2 — இளம்: 2]

உரையாசிரியரும் உயர்திணையெனப்பட்ட பகுப்பை விரிப்புழி இத்துணையல்லது விரிபடாது என்பது ஈண்டுக் கூறியது என்று உரைத்ததூஉம் என்க.

[சேனா: 4 — இளம்: 4]

சுட்டிய என்பது செய்யிய என்னும் வினையெச்சம் என்றும், ஆண்மைதிரிதல் சொற்கு இன்மையின் பெயர்நிலைக்கிளவி என்பது ஆகுபெயராய்ப் பொருண்மேல் நின்றது என்றும் உரையாசிரியர் கூறினரால் எனின்—ஆண்மைதிரிதல் பெண்மைத்தன்மையெய்து-தற்பொருட்டன்றிப் பேடிக்கியல்பாகலின் பெண்மை சுட்டவேண்டி ஆண்மைதிரிந்த என்றல் பொருந்தாமையானும், பொருளே கூற-லுற்றாராயின், ஆசிரியர், பேடியும் தெய்வமும் என்று தாம் கருதிய பொருள் இனிது விளங்கச் சுருங்கிய வாய்பாட்டாற் சூத்திரிப்ப-ராகலானும், அவர்க்கு அது கருத்தன்மையான், உரையாசிரியர்க்கும் அது கருத்தன்று என்க.

[சேனா: 5 — இளம்: 5]

ஏகாரம் அசைநிலை; உரையாசிரியர் பிரிநிலை யென்றாரால் எனின் — பிரிநிலையாயின், ஆஉேவறிசொற்கு இலக்கணங் கூறுத-லன்றிப் பிரித்து அதன் சிறப்புணர்த்துதலே கருத்தாமாகலின், அவ்வுரை போலியுரை என்க.

[சேனா: 13 — இளம்: 13]

வினவெதிர் வினுதல், ஏவன்மறுத்தல், உற்றதுரைத்தல், உறுவதுகூறல், உடம்படுதல் எனச் செப்பு அறுவகைப்படும் என்று உரையாசிரியர் கூறினரால் எனின் — உயிர் எத்தன்மைத்து என்றவழி உணர்தற்றன்மைத்து என்றல் முதலாயின அவற்றுள் அடங்காமையானும், மறுத்தலும் உடம்படுதலும் ஏவப்பட்டார்கண்ண-

வாகலானும், அறுவகைப்படும் என்று பிறர்மதம் மேற்கொண்டு கூறினர் என்பது.

[சேனா: 13 — இளம்: 13]

உரையாசிரியர் அறிபொருள்வினாவை—அறிவொப்புக்காண்டலும், அவனறிவு தான்காண்டலும், மெய்யவர்க்குக் காட்டலும் என விரித்து, ஏனைய கூட்டி, ஐந்து என்றார்.

[சேனா: 13 — இளம்: 15]

'வினா வழீஇயினவிடத்து அமையாது' என்று உரையாசிரியர் கூறினால் எனின்—அற்றன்று,'யாதெனா வருஉம் வினாவின் கிளவி' எனவும், 'வன்புற வரூஉம் வினாவுடை வினைச்சொல்' எனவும் முன்னர் வழுவமைப்பராகலான், அது போலியுரை என்க.

[சேனா: 17 — இளம்: 17,18]

பொற்கொல்லர் பொன்னைப் பறி யென்றலும், வண்ணக்கர் காணத்தை நீலம் என்றலும் முதலாகிய குழுவின் வந்த குறிநிலை வழக்கும், கண்கழீஇ வருதும், கான்மேல் நீர்பெய்து வருதும் என்னுந் தொடக்கத்து இடக்கரடக்குந் தகுதி யென்றும், மரூஉமுடிபை வழக்காறு என்றும் உரையாசிரியர் அமைத்தாரால் எனின்—குழுவின்வந்த குறிநிலைவழக்குச் சான்றோர் வழக்கின்கண்ணும் அவர் செய்யுட்கண்ணும் வாராமையின் அமைக்கப்படாவாகலானும், இடக்கரடக்கு, 'அவையல் கிளவி' எனவும், 'மறைக்குங் காலை' எனவும் முன்னர் அமைக்கப்படுதலானும், மரூஉமுடிபு எழுத்ததிகாரத்துக் கூறப்பட்டமையானும், அவர்க்கு அது கருத்தன்று என்பது. கருமை முதலாயின ஒரு நிகரன அன்மையிற் காக்கையொடு சார்த்திக் களம்பழத்தை விதந்ததுணையல்லது, காக்கைக்கு வெண்மை நேராமையிற் காக்கையிற்கரிது களம்பழம் என்புழிக் கரிது வெளிதாயிற்றன்று. கிழக்கு மேற்கு என்பன வரையறையின்றி ஒன்றனொடு சார்த்திப் பெறப்படுவன வாதலின், ஒன்றற்குக் கீழ்ப்பாலதனைப் பிறிதொன்றற்கு மேல்பாலது என்றலும் வழுவன்று. சிறுவெள்வாய் என்பது இடுகுறி. அதனான் இவை வழக்காறு என அமைக்கப் படாவாயினும், உரையாசிரியர் பிறர்மதம் உணர்த்திய கூறினர் என்பது.

[சேனா: 24 — இளம்: 23,24]

பன்மைகூறல் உயர்திணைப்பாலையத்திற்கு உரித்து என்றும், உருபென மொழிதல் திணையையத்திற்கு உரித்து என்றும் உரை-யாசிரியர் கூறினால் எனின்— அவை அவற்றிற்கே உரியவாயின், அஃறிணைப் பிரிப்பென்றாற்போல உயர்திணைப் பான்மயக்குற்ற என்றும், திணையையத்தென்றும் விதந்தோதுவர் ஆசிரியர்; அவ்-வாறு ஓதாமையானும், நடையுள் அவை பொதுவாய் வருதலானும், அவை போலியுரை என்க.

[சேனா: 26 — இளம்: 26]

'பெருந்தோட் சிறுநுசுப்பிற் பேரமர்க்கட் பேதை' என்புழி, மூன்றாம்வழி முதல் கிடவாது பின்னும் அடையும் சினையும் புணர்த்-தமையான் வண்ணச்சினைச்சொல் செய்யுளுண் மயங்கிவந்தது என்று உரையாசிரியர் கூறினால் எனின் —மூன்றாம்வழிப் புணர்க்கப்படும் பேதை யென்னும் முதற்சொல் பேரமர்க்கண் என்னுந் தொகை-யோடு வேற்றுமைப் பொருள்படத் தொக்கு, அத்தொகை சிறு நுசுப்பு என்னுந் தொகையோடும் அப் பொருள்படத் தொக்கு, ஒரு சொல்லாய், 'பெருந்தோட் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி' என்றாற்போல, மூன்றாம்வழிப் பிற்சொல்லடுத்துப் பேதை யென்-னும் முதல் கிடந்ததெனவேபடுதலின், மயக்கம் இன்மையான், அவர்க்கு அது கருத்தன்று என்க. அன்றிப் பெருந்தோள் முதலாகிய மூன்றும் பலபெயர் உம்மைத்தொகைபடத் தம்முட்டொக்கு ஒரு சொல்லாய்ப் பின் பேதை யென்பதனோடு வேற்றுமைத் தொகை படத் தொக்கன எனினும், அவை உம்மைத்தொகைபடத் தொ-காது நின்று பேதை யென்பதனோடு வேற்றுமைத் தொகைபட ஒருங்கு தொக்கன எனினும், தம்முள் இயையாது பேதை யென்பத-னோடு இயைதலின், ஆண்டும் மயக்கமின்மை யறிக. அஃதேல், இவ்வாறு வருதல் வழக்கிற்கும் உரித்தோ எனின், அடுக்கிய அடை-யும் சினையும் பொதுமை நீக்குதற்கன்றி அணிகுறித்து நிற்றலிற் செய்யுட்கே உரித்து என்பது. 'சிறுபைந்தூவி' எனச் சினையொடு குணமிரண்டடுக்கி வருதல் செய்யுட்கு உரித்தென்றும், 'இளம்பெருங் கூத்தன்' என முதலொடு குணமிரண்டடுக்கி வருதல் வழக்கிற்கு உரித்தென்றும், பிறர்மதம் மேற்கொண்டு கூறினர். ஒன்றாக பல-

வாக இனஞ்சுட்டாதன செய்யுட்கு உரியவாம், இனஞ்சுட்டி நின்றன வழக்கிற்கு உரியவாம் என்பதே உரையாசிரியர் கருத்து என்க. அன்றிப், 'பிறநூன் முடிந்தது தானுடன் படுதல்' என்பதனுற் சினையொடு குணமிரண்டடுக்கல் செய்யுளாறென்று கொள்ளினும் அமையும், 'முதலொடு குணமிரண் டடுக்கல் வழக்கியல் - சினையோ டடுக்கல் செய்யு ளாறே' என்ருராகலின்.

[சேனு : 29 — இளம் : 30]

'இந்நான்கும் கொடைப்பொருளன' என்று உரையாசிரியர் கூறினரால் எனின்— 'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' என்பதனை அமைத்தாராகலின், அவர்க்கு அது கருத்தன்று என்க.

[சேனு : 35 — இளம் : 35]

'அல்லதில்' என்பதற்குத் தன்னுழை யுள்ளதல்லது என்றும், 'அப்பொருளல்லாப் பிறிதுபொருள் கூறல்' என்பதற்கு இனப்பொருள் கூறுக என்றும் உரைத்தாரால் உரையாசிரியர் எனின்— பயறுளவோ என்று விஞயவழிப் பயறில்லை யென்ருற் படும் வழுவின்மையானும், உள்ளதல்லது என்றல் கருத்தாயின் ஆசிரியர் அல்லது எனக் குறித்த பொருள் விளங்காமையின் அகப்படச் சூத்திரியா ராகலானும், பாம்புணிக் கருங்கல்லும் பயறும் விற்பாஞெருவனுழைச் சென்று, 'பயறுளவோ ?' என்றவழிப், 'பாம்புணிக் கருங்கலல்லது இல்லை' என்ருல் இனப்பொருள் கூருமையாற் பட்ட இழுக்கின்மையானும், அவை போலியுரை யென்க. அல்லதூஉம், இனப்பொருள் கூறுக என்பதே கருத்தாயின், அப்பொருளல்லா இனப்பொருள் கூறல் என்ஞது, 'பிறிது பொருள் கூறல்' என்ஞர் ஆசிரியர், அதனனும் அஃது உரையன்மை யுணர்க.

[சேனு : 40 — இளம் : 40]

பொருள்பற்ருது பண்பு முதலாயினபற்றி வந்த சுட்டாதலின் வேறு ஓதப்பட்டது என்று உரையாசிரியர் கூறினரால் எனின்— 'சாத்தன் வந்தான் அஃது அரசற்குத் துப்பாயிற்று' என்றும், 'கிழவன் பிரிந்தான் அதனைக் கிழத்தி யுணர்ந்திலள்' என்றும், எழுவாயாயும் ஏனைவேற்றுமை யேற்றும் அச்சுட்டுப் பயின்று வருதலாற் பண்பு முதலாயினவற்றைச் சுட்டுஞ் சுட்டெனப் பொதுவகை-

யாற் கூறுது காரணக்கிளவி யென ஒருசார் வேற்றுமைக்குரிய வாய்-பாடுபற்றி ஓதுதல் குன்றக்கூறல் ஆகலானும், சுட்டுப் பெயராயிற் சுட்டு முதலாகிய காரணக்கிளவி என்றும் சுட்டுப்பெயர் இயற்கையிற் செறியத்தோன்றும் என்றும் கூறுதல் பொருந்தாமையானும், அது போலியுரை யென்க.

[சேனா: 45 — இளம்: 43,45]

'எண்ணென்று வுறழென்று வாயிரண்டுமினனென்றல் வேண்-டும்' என்பது இலக்கணமாகலான், 'யானுமென் னெஃகமுஞ் சாறும்' என்புழியும், 'ஆவும் ஆயனுஞ் செல்க'என்புழியும் இனனல்லன உட-னெண்ணப்படுதலின் வழுவென்றாரால் உரையாசிரியர் எனின் — திணைவேறுபாடு உண்டேனும், 'யானுமென் னெஃகமும்' என்புழி வினைமுதலுங் கருவியுமாகிய இயைபும், 'ஆவும் ஆயனும்' என்புழி மேய்ப்பானும் மேய்க்கப்படுவனவுமாகிய இயைபும் உண்மையான் உடனெண்ணப்படுதலானும், 'யானை தேர் குதிரை காலாள் எறிந்-தான்' என முன்னர் உதாரணங்காட்டுபவாகலானும், பிறண்டும், 'எண்ணுத்திணை விரவுப்பெய ரஃறிணை முடிபின' என ஆசிரியருக்கு ஆராய்ச்சி முடிபுகோடற்கண்ணதாகலானும், அவர்க்கு அது கருத்-தன்று என்க. அல்லதூஉம், திணைவிராயெண்ணல் வழுவென்பதே கருத்தாயின், 'நெடுநல் யானையுந் தேரு மாவும் - படையமை மறவரு முடையம்யாம்' என்றும், 'இருமனப் பெண்டிருங் கள்ளும் கவறும்' என்றும், படர்க்கைச் சொல்லும் அஃறிணைக்கிளவியும் விராயெண்-ணுதல் வழக்குப்பயிற்சி யுடைமையான் அவையும் அடங்க உயர்-திணைச் சொல்லே யஃறிணைக்கிளவி எனப் பொதுப்பட ஓதாது, 'தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவி' எனத் தன்மைச்சொல்லையே விதந்தோதல் குன்றக்கூறலா மாகாலானும், அவர்க்கு அது கருத்-தன்மை யறிக.

[சேனா: 50 — இளம்: 50]

'இன்றிவ்வூர்ப் பெற்றமெல்லாமறங்கறக்கும்; உழவொழிந்தன' என உரையாசிரியர் காட்டினாராலோ எனின் — பெற்றம் என்னும் பொதுப்பெயர் கறத்தலும் உழுதலும் ஆகிய சிறப்புவினையாற் பொதுமை நீங்குதல் வழுவன்மையான் ஈண்டைக்கு எய்தாமையின், அவர்க்கு அது கருத்தன்று என்பது.

[சேனா : 51 — இளம் : 51]

'பாணன் பறையன் றுடியன் கடம்பனென் - றந்நான் கல்லது குடியு மில்லை' என இருதிணைப்பெயரும் விரவிவாராது உயர்திணைப் பெயரே வந்து செய்யுளுள் அஃறிணைமுடிபு கொண்டன என்று உரையாசிரியர் கூறினால் எனின் — பாணன் முதலாயினாரைக் குடியென்று சுட்டியவழிக் குடிக்கேற்ற தொகை கொடுத்தல் வழு-வன்மையான், அவ்வுரை போலியுரை யென்க.

[சேனா : 54 — இளம் : 54]

'ஒன்றுவினை மருங்கி னென்றித் தோன்றும்' என ஒரு சூத்திர மாக உரையாசிரியர் பிரித்தாரால் எனின் — அங்ஙனம் பிரிப்பின் ஒன்றுவினை மருங்கி னென்றித் தோன்றுதலும் வினைவேறுபடூஉம் பலபொரு ளொருசொற்கே இலக்கணமாய் மாறுகோடலானும், வினைவேறுபடுவன தாமே பொதுவினை கொண்டவழி வினைவேறு படாதனவாம் என்பது அதனாற் பெறப்படாமையானும், அது போலி யுரை யென்க.

[சேனா : 60 — இளம் : 61]

அஃதேல், 'மேற்சேரிக் கோழி யலைத்தது' எனக் கீழ்ச்சேரிக் கோழி யலைப்புண்டது என்றும், 'குடங்கொண்டான் வீழ்ந்தான்' எனக் குடம் வீழ்ந்தது என்றும், இவை யினஞ்செப்பும் என்றும், 'ஆவாழ்க அந்தணர் வாழ்க' என்பன இனஞ்செப்பா என்றும் உரை-யாசிரியர் கூறினால் எனின்—அற்றன்று, கீழ்ச்சேரிக் கோழி யலைப்புண்டலின்றி மேற்சேரிக் கோழி யலைத்தல் அமையாமையா-னும், குடம் வீழ்தலின்றிக் குடங்கொண்டான் வீழ்தல் அமையாமை யானும், கீழ்ச்சேரிக்கோழி யலைப்புண்டலும் குடம்வீழ்தலும் சொல்-லானன்றி இன்றியமையாமையாகிய பொருளாற்றலாற் பெறப்படு-மாகலான் ஈண்டைக்கு எய்தா, இது சொல்லாராய்ச்சி யாகலான் என்பது. இன்னோரன்ன சொல்லாற்றலாற் பெறப்பட்டன எனின், புகை யுண்டு என்றவழி எரியுண்மை பெறுதலுஞ் சொல்லாற்றலாற் பெறப்பட்டதாம் என்பது. இனி, 'ஆவாழ்க அந்தணர் வாழ்க' என்புழிச் சொல்லுவான் ஒழிந்த விலங்கும் ஒழிந்த மக்களும் சாக என்னுங் கருத்தினனாயின் இவையும் இனஞ் செப்புவனவன்றோ என்பது ; அதனான் அவை போலியுரை யென்க.

[சேனா: 62 — இளம்: 63]

பொதுவிலக்கணம் உணர்த்திச் சிறப்பிலக்கணம் உணர்த்துதல் முறையாகலின், முதற்கண்ணதாகிய பெயர்ச்சொற்குப் பயனிலை கோடலும் உருபேற்றலும் காலந்தோன்றாமையும் ஆகிய இலக்கணம் உணர்த்துவார் இயைபுபட்டமையான் வேற்றுமையிலக்கணம் உணர்த்தினாரென மேலோத்தினோடு இவ்வோத்திடை யியைபுகூறினாரால் உரையாசிரியர் எனின் — அற்றன்று, இவ்வோத்துப் பெயரிலக்கண நுதலி யெடுத்துக்கொள்ளப்பட்டதாயின், உருபேற்றலும் பயனிலைகோடலும் காலந்தோன்றாமையும் ஆகிய பெயரிலக்கணம் முன்னோதி, இயைபுபடுதலான் வேற்றுமையுணர்த்துங் கருத்தினராயின் அவற்றையும் இன்ன இலக்கணத்த என உணர்த்திப் பின்னும் எடுத்துக்கொண்ட பெயரிலக்கணமேபற்றி யோதிப் பெயரியல் என ஓரோத்தான் முடியற்பாற்றன்றே; அவ்வாறன்றி, வேற்றுமை யிலக்கணமே முன் கூறி, 'அன்றி யனைத்தும் பெயர்ப்பயனிலையே' எனவும், 'ஈறுபெயர்க் காகு மியற்கைய வென்ப' எனவும் வேற்றுமையிலக்கணங் கூறி, அச்சூத்திரத்தாற் பயனிலைகோடலும் உருபேற்றலும் பெயர்க்கிலக்கணம் என்பது உய்த்துணர வைத்துப் பின்னும் வேற்றுமையிலக்கணமே யுணர்த்தி, இதனை, 'வேற்றுமை யோத்து' என்றும், அவற்றது மயக்க முணர்த்திய வோத்தை, 'வேற்றுமை மயங்கியல்' என்றும், சிறப்பில்லா விளி வேற்றுமை யுணர்த்திய வோத்தை, 'விளிமரபு' என்றும் நுதலியதனாற் பெயர்கொடுத்து, மூன்றோத்தாக வைத்து, 'பெயரியல்' என வேறோர் ஓத்திற்குப் பெயர் கொடுத்தமையானும், 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்பது முதலாகிய ஐந்து சூத்திரமும் பெயரிலக்கணமுணர்த்தும் ஒத்தின்முன் வையாது, இடைவைத்தல் பொருந்தாமையானும், இவ்வோத்துப் பெயரிலக்கணநுதலி யெடுத்துக்கொள்ளப்பட்டது அன்று, வேற்றுமை யிலக்கணமே நுதலி யெழுந்ததெனவே படும்; அதனான் அவர்க்கு அது கருத்தன்று என்க.

[சேனா: 67 — இளம்: 68]

'பெயரினாகிய தொகையும்' என்ற உம்மையான் வினையினாகிய வினைத்தொகை தழுவப்பட்டது என்றும், 'எல்லாத் தொகையு மொருசொன் னடைய' என்பதனால் தொகைச்சொல் லெல்லாம்

எழுவாய் வேற்றுமையாதல் பெறப்படுதலின், ஈண்டு, 'அவ்வுமுரிய வப்பாலான' என்றது தொகைச்சொற்குப் பயனிலை கோடன்மாத்திரம் எய்துவித்தற்கு என்றும், உரையாசிரியர் கூறினாரால் எனின்— அற்றன்று, வினைத்தொகைக்கு நிலைமொழி வினையென்பது உரையாசிரியர்க்குக் கருத்தன்மை, 'வினையின் றொகுதி காலத் தியலும்' என்னுஞ் சூத்திரத்திற் சொல்லுதும். இனி, 'எல்லாத் தொகையு மொருசொன் னடைய' என்பதற்கு ஒரு சொன் னடையவாம் என்பதல்லது எழுவாய்வேற்றுமையாம் என்னுங் கருத்தின்மையானும், அக் கருத்து உண்டாயின் அவையும் எழுவாய் வேற்றுமையாய் நின்று, 'அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே' என்றதனாற் பயனிலை யெய்துமாகலின், 'அவ்வு முரிய வப்பா லான' என்றல், கூறியதுகூறிற்று மாகலானும், அதுவும் உரையாசிரியர் கருத்தன்று என்க.

[சேனா : 68 — இளம் : 69]

எவ்வயிற்பெயரும் பயனிலைகோடல் செவ்விதென உருபேற்றல் செவ்விதன்றாம் என வுரைத்து, அவ்வாய் நீயிர் என்பன உருபேலா என்று காட்டினாரால் உரையாசிரியர் எனின் — அவ்வாய் என்பது இடைச்சொல்லாய் ஆண்டு என்னும் பொருள்பட நின்றவழி உருபேயன்றிப் பயனிலையும் ஏலாதாம். இனி, அல்வழிக்கண் நும் என்பது திரிந்து நீயிர் என நின்ற திரிபைப் பெயரெனக் கொண்டு உருபேலாதென்றாராயின், நீ யென்பதன் திரிபாகிய நின் என்பதனையும் பெயராகக்கொண்டு பயனிலை கொள்ளாது என்றுங் கூறல்வேண்டும்; அன்றி, நும்மின் திரிபாகிய நீயிர் என்பதனை, 'எல்லா நீயிர் நீயெனக் கிளந்து' என இயற்கைப்பெயரோடு ஒருங்கு வைத்தது நீயிர் என்னுந் திரிபே இயல்பாக வேற்றுமைக்கண் நும் எனத் திரிபினும் அமையும் என்னுங் கருத்தினராயன்றே. அதனான் இயல்பாகக்கொள்ளப்பட்ட நிலைமைக்கண் நீயிர் என்பதனை உருபேலாதென்றாராயின் நும்மெனத் திரிந்து உருபேற்பதனை உருபேலாது என்றல் பொருந்தாதாம்; அதனான் அது போலியுரை யென்க.

[சேனா : 74 — இளம் : 73]

'அதனினியறல்' என்பதற்குத், 'தச்சன் செய்த சிறுமா வையம்' என்றும், இன்னான் என்பதற்குக், 'கண்ணாற் கொத்தை, காலான்

முடவன்' என்றும், உதாரணங்காட்டினூரால் உரையாசிரியர் எனின்— அற்றன்று; தச்சன் செய்த சிறுமாவையம் என்பது, 'வினைமுதல் கருவி யனைமுதற்று' என்புழி அடங்குதலான், ஈண்டுப் பாற்படுக்க வேண்டாமையானும், சினைவிகாரத்தை முதன்மேலேற்றிக் கூறும் பொருண்மை இன்னன் என்பதனுற் பெறப்படாமையானும், அது போலியுரை யென்க.

[சேஞ: 82 — இளம்: 77]

கண் முதலாயின எல்லாம் உருபென்றூரால் உரையாசிரியர் எனின் — உருபாயின், ஏழாவதற்குக் கண் என்பது உருபாதல் மேலே பெறப்பட்டமையாற் பெயர்த்துங் கண் கால் என்றல் கூறியதுகூறிற்றும் ஆகலானும், ஊர்ப்புறத்திருந்தான், ஊரகத்திருந்தான், கைவலத்துள்ளது கொடுக்கும் எனப் புறம் அகம் வலம் என்பனவற்றுவழி அத்துச்சாரியை கொடுத்து உதாரணங் காட்டினமை யானும், அவர்க்கது கருத்தன்று என்க.

[சேஞ: 83 — இளம்: 78,79]

உரையாசிரியர் இரண்டு சூத்திரமாக அறுத்து ஆசிரியர்மத விகற்பங்கூறித் தம் மதம் இது என்பது போதர, ஒன்றுகவுரைப்பாரு முளர் என்றூர். இரண்டாய் ஒன்றுயவழிப் பிறிதுரை யின்மையின், உரையாசிரியர் கருத்து இதுவேயாம்.

[சேஞ: 102 — இளம்: 98]

சாத்தன் றூயைக் காதலன்; நாய் தேவன் ஆயிற்று என்புழி, தாயை, தேவன் என்பன, காதலன், ஆயிற்று என்னும் பயனிலைக்கு அடையாய் இடைநின்றூற்போல, கோட்டை நுனிக்கட் குறைத்தான்; தினையிற் கிளியைக் கடியும் என்புழி, நுனிக்கண், கிளியை என்பன, குறைத்தான், கடியும் என்னும் முடிக்குஞ் சொல்லிற்கு அடையாய் இடைநின்றவாகலான், அவை அடுக்கன்மையின், அவை யுதாரணமாதல் உரையாசிரியர் கருத்தன்று என்க.

[சேஞ: 114 — இளம்: 110]

தொல்காப்பியனுனும் கபிலனுனும் செய்யப்பட்ட நூலைத் தொல்காப்பியம் கபிலம் என்றல் வினைமுதலுரைக்குங் கிளவியென்

ருரால் உரையாசிரியர் எனின் — அற்றன்று, ஒருமொழி இலக்கணம் ஈண்டுக் கூறுராயினும், வெற்புச் சேர்ப்பு என்னும் பெயரிறுதி இதனையுடையான் என்னும் பொருடோன்ற அன் என்பதோரிடைச்சொல் வந்து வெற்பன் சேர்ப்பன் என நின்றாற்போல, தொல்காப்பியன் கபிலன் என்னும் பெயரிறுதி இவனாற் செய்யப்பட்டது என்னும் பொருடோன்ற அம் என்பதோர் இடைச்சொல் வந்து அன் கெடத் தொல்காப்பியம் கபிலம் என நின்றன என்பது ஆசிரியர் கருத்தாம்; அதனான் அவை உதாரணமாதல் உரையாசிரியர் கருத்தன்று என்க.

'அனையமரபின' என்றது அவ்வாறியாதானும் ஓரியையுபற்றி ஒன்றன்பெயர் ஒன்றற்காதல் என ஆகுபெய ரிலக்கணத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறு. ஒன்றன்பொருட்கண் ஒன்று சேறல் என்னும் ஒப்புமையான் இவற்றை யீண்டுக் கூறினர். அஃதேல், ஆகுபெயர் எழுவாய் வேற்றுமை மயக்க மாதலான் ஈண்டுக் கூறினர் என்றாரால் உரையாசிரியர் எனின் — ஆகுபெயர் ஏனைவேற்றுமையும் ஏற்று நிற்றலானும், எழுவாய் வேற்றுமையாய் நின்றவழியும் அது பிறிதோர் வேற்றுமைப்பொருட்கட் சென்று மயங்காமையின் வேற்றுமைமயக்கம் எனப் படாமையானும், அது போலியுரையென்க.

[சேனா: 115 — இளம்: 112]

அஃதேல், இதனைப் பிரித்து ஒரு சூத்திரமாக உரைத்தாரால் உரையாசிரியர் எனின் — அங்ஙனம் பிரிப்பின், தம்மொடு சிவணலும் பிறிதுபொருள்சுட்டலும் ஆகிய இவற்றது வேறுபாட்டின்கணென்பது இனிது பெறப்படாமையானும், எழுத்தோத்தினுள், 'புள்ளி யிறுதியு முயிரிறு கிளவியும்' என்னுஞ் சூத்திரத்து இங்ஙிகர்ப் பாதுகாவலைப் பிரியாது ஒன்றாகவே யுரைத்தலானும், அவர்க்கது கருத்தன்று என்க.

[சேனா: 120 — இளம்: 133]

விரவுப்பெயரை உயர்திணைப் பெயரோடு மாட்டெறிபவாகலின், மாட்டேற்றான் முறைப்பெயர் ஆகாரமும் ஏகாரமும் பெற்று விளியேற்ற லெய்தாமையின் ஈண்டுக் கூறினரென்றாரால் உரையாசிரியர் எனின் — அக்கருத்தினராயின் அஃறிணையென்னுஞ் சொல்

லொழித்துக், ‘கிளந்த விறுதி விரவுப்பெயர், விளம்பிய நெறிய விளிக்குங் காலே’ எனவும், இதன்பின், ‘முறைப்பெயர் மருங்கி னையெ னிறுதி - யாவொடு வருதற் குரியவு முளவே’ எனவும், இதன்பின் னகார ளகாரவீற்று இருவகை முறைப்பெயரும் அடங்கப், ‘புள்ளி யிறுதி யேயொடு வருமே’ எனவும் ஓதுவார்மன் ஆசிரி- யர்; என்னை? மயங்கக்கூறல் என்னுங் குற்றமும் நீங்கிச் சூத்திர முஞ் சுருங்குமாதலான். அவ்வாறு ஓதாமையானும், முறைப் பெயரேயன்றித் தாம் நீயிர் என்பனவும் ஈண்டுக் கூறப்பட்டமை யானும், உரையாசிரியர்க்கு அது கருத்தன்று என்க.

[சேனா: 161 — இளம்: ]

மற்றும், நஞ்சுண்டான் சாம் என்பது ஒரு பாற்குரிய சொல் லாயினும், நஞ்சுண்டாள் சாம், நஞ்சுண்டார் சாவர், நஞ்சுண்டது சாம், நஞ்சுண்டன சாம் என ஏனைப் பாற்கும் உரித்தாம் அச்சொல் என இப்பொருண்மை யுணர்த்துகின்றது இச்சூத்திரம் என்றாரால் உரையாசிரியர் எனின் — நஞ்சுண்டல் சாதற்குக் காரணமென்பான் ஒரு பான்மேல் வைத்து நஞ்சுண்டான் சாம் என்றதல்லது, ஆண்டுத் தோன்றும் ஆண்மையும் ஒருமையும் சாதற்குக் காரணமென்னுங் கருத்தினன் அல்லன்; அதனாற் சொல்லுவான் கருத்தொடு கூடிய பொருளாற்றலாற் சாதல் ஏனைப்பாற்கும் ஒக்கும் எனச் சேறல் சொல்லிலக்கணத்திற் கூறப்படாமையான், ஆசிரியர் ‘ஒருபாற் கிளவி யேனைப்பாற் கண்ணும் - வருவன தாமே வழக்கென மொழிப’ என இப்பொருண்மை பொருளியலிற் கூறினாராகலின், இச்சூத்திரத்திற்கு அஃது உரையாதல் உரையாசிரியர் கருத்தன்று என்க. அல்லதூஉம், பார்ப்பான் கள்ளுண்ணான் என்றவழிக் கள்ளுண்ணாமை சாதிபற்றிச் செல்வதொன்றாகலின் பார்ப்பனிக் கும் பார்ப்பார்க்கும் அல்லது பிறசாதியார்க்கும் அஃறிணைக்கும் செல்லாமையின், ஐம்பாற்கிளவிக்கும் உரியவென்றல் பொருந்தா- மையானும், அவர்க்கு அது கருத்தன்மை யறிக.

[சேனா: 174 — இளம்: 171]

பிறவும் என்றதனான், மக குழவி போல்வன கொள்க. இவ- ற்றை உயர்திணைப் பெயர் என்றாரால் உரையாசிரியர் எனின் — மரபியலுள், ‘மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பு - மவையு-மன்ன

வப்பா லான' எனவும், 'குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க் கொடை' எனவும், அவை அஃறிணைக்காதல் கூறி, 'குழவியு மகவு மாயிரண் டல்லன - கிழவ வல்ல மக்கட் கண்ணே' என உயர்திணைக் கும் ஓதிவைத்தாராகலின், அவை விரவுப்பெயரேயாம் ; அதனான் அது போலியுரை யென்க.

[சேனா : 182 — இளம் : 179]

அஃறிணை யொருமையும் அத்திணைப்பன்மையும் உயர்திணை யொருமையும் ஆகிய பலவற்றையும் உணர்த்தலாற் பன்மை சுட்டிய பெயர் என்பாரும் உளர் ; அஃது உரையாசிரியர் கருத்தன்மை அவ் வுரையான் விளங்கும்.

[சேனா : 187 — இளம் : 184]

எல்லாப் பார்ப்பாரும், எல்லாச் சான்றோரும் எனப் படர்க்கைக்-கண் வருதலும் கோடற்குத் தன்னுளுறுத்த பன்மைக்காங்கால் உயர் திணைமருங்கி னல்லது ஆகாதென மொழிமாற்றி யுரைத்தாரால் உரையாசிரியர் எனின் — படர்க்கைக்கண் வருதல் இடவழுவமைதி யென்றவழிப் படும் இழுக்கின்மையானும், 'தன்மைச் சொல்லே யஃ றிணைக் கிளவி' எனவும், 'யான் யாம் நாமென வரூஉம் பெயர்' எனவும், பிறாண்டும் ஓதியவாற்றால், தன்மைச்சொல் அஃறிணைக் கின்மை பெறப்படுதலின் ஈண்டுக் கூறல் வேண்டாமையானும், எழுத்ததிகாரத்துள், 'உயர்திணை யாயி னம்மிடை வருமே' எனத் தன்மைக்குரிய சாரியையே கூறலானும், அது போலியுரை யென்க.

[சேனா : 255 — இளம் : 250]

உரையாசிரியர் நெடியனும் வலியனும் ஆயினான் என்புழி உம்மை ஆக்கங்குறித்து நிற்றலின் ஆக்கவும்மை யென்றார்.

[சேனா : 272 — இளம் : 267]

அஃதேல், இதனை நிரனிறைப் பொருட்டாகக் கொண்டு ஏ இசைநிறை, குறை அசைநிலை யென்றாரால் உரையாசிரியர் எனின்— அற்றன்று, மற்று அந்தில் என்பனபோலப் பொருள்வகையான் வேறுபடுவனவற்றை இரண்டாமென்பதல்லது, சொல்வகையான் இரண்டாகிய சொல்லை இரண்டாமென்றதனான் ஓர் பயனின்மை

யின், அவர்க்கு அது கருத்தன்று என்க. அல்லதூஉம், ஒருசொல்லே இசைநிறையும் அசைநிலையுமாக லுடைமையான் அவற்றை உடன் கூறினுரென்னுக்கால் இசைநிறையும் அசைநிலையும் ஒருங்கு மயங்கக் கூறலாமாகலானும், அவர்க்கு அது கருத்தன்மை உணர்க.

[சேனு : 288 — இளம் : 283]

பிறவெண் ஓடாநின்றவழி ஏகாரவெண் இடைவந்ததாயினும் ஓடாநின்ற பிறவெண்ணேயாமென உரைத்தாரால் உரையாசிரியர் எனின் — அவ்வாறு விராயெண்ணியவழிப் பிறவெண்ணுற் பெயர் கொடுப்பின் அதனை ஏகாரவெண்ணென்பாரையும் விலக்காமை யானும், பிறவெண்ணும் என்றதனுற் பெறப்படுவதோர் பயனின் மையானும், அவர்க்கு அது கருத்தன்று என்க.

[சேனு : 291 — இளம் : 286]

'யானை தேர் குதிரை காலாள், எறிந்தார்' என உம்மையும் உருபும் உடன்ருெக்கவழி உம்மைத்தொகை யென்றுது உருபு தொகை யென்க என்பது இச்சூத்திரத்திற்குக் கருத்தாக உரைத்தாரால் உரையாசிரியர் எனின் — அஃது உம்மைத் தொகையாதலின் ஒருசொன்னடைத்தாய் உருபேற்ருனும் பயனின்ல கொண்டானும் நிற்கும் ; அத்தொகையிடை உருபின்மை சிற்றறிவினுர்க்கும் புலனும்; அதனுன் அஃதவர்க்குக் கருத்தன்மை சொல்லவேண்டுமோ என்பது.

[சேனு : 293 — இளம் : 288]

'சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான், வேடன் வந்தான் என மூவரும் வந்தமையாற் கலியாணம் பொலிந்தது' எனச் செவ்வெண் தொகை பெற்றுவந்தது என்ருரால் உரையாசிரியர் எனின்— அவை எழுவாயும் பயனிலையுமாய் அமைந்து மாறுதலின் எண்ணப்படாமையானும், மூவரும் என்பது சாத்தன் முதலாயினோர் தொகையாகலானும், அது போலியுரை என்க.

[சேனு : 294 — இளம் : 289]

இவைமூன்றும் பொருளிற்பிரிந்து எண்ணின்கண் அசையாய் வருதலுடைய என்பது உரையாசிரியர்க்குக் கருத்தென்பாரும் உளர்.

அசைநிலை என்பது இச்சூத்திரத்தாற் பெறப்படாமையானும், 'கண்ணிமை நொடி' என்னுஞ் சூத்திரத்து எனவைக் கண்ணிமை என்பதனோடுங் கூட்டுக என்றுரைத்தலானும், அவர்க்கு அது கருத்-தன்று என்க.

[சேனா: 401 — இளம்: 391]

வடசொல்லாவது வடசொல்லோடு ஒக்குந் தமிழ்ச்சொல் என்றாரால் உரையாசிரியர் எனின் — அற்றன்று, ஒக்கும் என்று சொல்லப்படுவன ஒருபுடையான் ஒப்புமையும் வேற்றுமையும் உடைமையான் இரண்டாகல் வேண்டும். இவை எழுத்தானும் பொருளானும் வேறுபாடு இன்மையாகிய ஒருசொல்லிலக்கணம் உடைமையான் இரண்டுசொல் எனப்படா; அதனான் ஒத்தல் யாண்டையது, ஒரு சொல்லேயாம் என்பது. ஒரு சொல்லாயினும் ஆரியமும் தமிழுமாகிய இடவேற்றுமையான் வேறாயின எனின், அவ்வாறாயின், வழக்கும் செய்யுளும் ஆகிய இடவேற்றுமையாற் சோறு கூழ் என்னுந் தொடக்கத்தனவும் இரண்டு சொல்லாவான் செல்லும்; அதனான் இடவேற்றுமை யுடையவேனும் ஒரு சொல்-லிலக்கண முடைமையான் ஒரு சொல்லேயாம். ஒரு சொல்லாய-வழித் தமிழ்ச்சொல் வடபாடைக்கட் செல்லாமையானும், வட-சொல் எல்லாத் தேயத்திற்கும் பொதுவாகலானும், இவை வட சொல்லாய் ஈண்டு வழங்கப்பட்டன எனல்வேண்டும்; அதனான் இது போலியுரை என்க. அல்லதூஉம், அவை தமிழ்ச்சொல்-லாயின் வடவெழுத்தொரீஇ யென்றல் பொருந்தாமையானும், வட-சொல்லாதல் அறிக.

[சேனா: 408 — இளம்: 402]

எருத்துவயின் என்பதற்கு ஈற்றயற்சீர்வயின் என்று பொரு-ளுரைத்து, 'சூரல் பம்பிய சிறுகான் யாறே - சூரர மகளி ராரணங் கினரே - சார னாட நீவரு தீயே - வார லெனினே யானஞ் சுவலே' என்புழி, அஞ்சுவல் யான் என இறுதிச்சீர் ஈற்றயற் சீர்வயிற் சென்று திரிந்ததென்று உதாரணங் காட்டினாரால் உரையாசிரியர் எனின் — யானஞ்சுவலென நின்றாங்கு நிற்பவும் பொருள் செல்லு மாகலின் இவ்வாறு திரிதல் பொருந்தாமையின், அவர்க்கு அது கருத்தன்று என்க.

[சேனா : 415 — இளம் : 409]

பெயரெச்சம் நின்று தொக்கது என்றாரால் உரையாசிரியர் எனின் — அற்றன்று, ஆசிரியர் இவற்றைப் பிரித்துப் புணர்க்கப்படா, வழங்கியவாறே கொள்ளப்படும் என்றது, பிரித்தவழித் தொகைப்பொருள் சிதைதலானன்றே; கொன்றயானை என விரிந்தவழியும் அப்பொருள் சிதைவின்றேல், 'புணரிய னிலையிடை யுணரத் தோன்றா' என்றற்கோர் காரணம் இல்லையாம். அதனாற் பெயரெச்சம் நின்று தொகுதல் ஆசிரியர் கருத்தன்மையின், உரையாசிரியர்க்கும் அது கருத்தன்று என்க. அல்லதூஉம், ஆகுபெயர் உணர்த்தியவழி வினைத்தொகை யுளப்பட, 'இருபெயரொட்டும்' என்றாராகலானும், வினை நின்று தொகுதல் அவர்க்குக் கருத்தன்மை யறிக.

[சேனா : 416 — இளம் : 410]

கரியது என்னும் பண்புகொள்பெயர் கருங்குதிரை யெனத் தொக்கதென்றாரால் உரையாசிரியர் எனின் — அதனைப் பெயரெச்சம் வினைத்தொகை நிலைமொழியென்றதற்கு உரைத்தாங்கு உரைத்து மறுக்க. பிறசொற்கொணர்ந்து விரிக்குங்கால், கரிய குதிரை, கரிதாகிய குதிரை, கரியது குதிரை என அத்தொகைப் பொருளுணர்த்துவன எல்லாவற்றானும் விரிக்கப்படும்.

[சேனா : 422 — இளம் : 416]

நிலம் வல்லென்றது, நீர் தண்ணென்றது என்பன காட்டினாரால் உரையாசிரியர் எனின் — சொலற்பொருள அன்மையின், அவை காட்டல் அவர் கருத்தன்று என்க.

[சேனா : 426 — இளம் : 420]

முன்னிலையல்வழி யென்பதற்கு முன்னையபோல வினாவொடு சிவணி நில்லாதவழி யென்றுரைத்தாரால் உரையாசிரியர் எனின் — அற்றன்று, வினாவொடு சிவணல் இவற்றிற் கொன்றான் எய்தாமையின் விலக்கவேண்டா; அதனான் அவர்க்கு அது கருத்தன்று என்க.

[சேனா: 427 — இளம்: 421]

உரையாசிரியர் வினையியலுள் ஓதப்பட்டன சில வினைச்சொற்கு முற்றுச்சொல்லென்று குறியிடுதல் நுதலிற்று இச்சூத்திரம் என்றாரால் எனின் — குறியீடு கருத்தாயின், 'அவ்வாறென்ப முற்றியன் மொழியே' என்னாது, அவ்வாறு முற்றியன்மொழி யெனல் வேண்டுமாகலான், அது போலியுரை யென்க. முற்றியன்மொழி யென்ப என மொழிமாற்றவே குறியீடாம் எனின், குறியீடு ஆட்சிப் பொருட்டாகலின், குறியான் அதனை ஆளாமையான், மொழி மாற்றி யிடர்ப்படுவதென்னையோ என்பது. அல்லதூஉம், முற்றியன் மொழி யெனக் குறியிட்டாராயின், இவை பெயரெஞ்சு கிளவி எனவும், இவை வினையெஞ்சு கிளவி எனவும் குறியிடல் வேண்டும்; அவ்வாறு குறியிடாமையானும் அது கருத்தன்றாம். அதனான் வினைச்சொல்லுள் இருவகை எச்சமொழித்து ஒழிந்தசொல் முற்றி நிற்கும் என்றும், அவை இனைத்துப் பாகுபடும் என்றும் உணர்த்தல் இச்சூத்திரத்திற்குக் கருத்தாகக் கொள்க.

[சேனா: 428 — இளம்: 422]

முற்றுச்சொல்லே யன்றிப் பெயரெச்சமும் வினையெச்சமும் காலமும் இடமும் உணர்த்தும் என்பது இச்சூத்திரத்திற்குப் பொருளாக உரைத்தாரால் உரையாசிரியர் எனின் — அவை இடவேறுபாடு உணர்த்தாது மூவிடத்திற்கும் பொதுவாய் நிற்றலின், அது போலியுரை என்க.

[சேனா: 431 — இளம்: 425]

பிரிநிலையோடு முடிதலாவது அவனே கொண்டான் என்றவழி, அவனே யென்பது கொண்டானெனப் பிரிக்கப்பட்டபொருளை வினையெனக்கொண்டு முடிதல் என்றாரால் உரையாசிரியர் எனின்— அற்றன்று, அவனே கொண்டான் என்புழி, அவன் என்னும் எழுவாய்வேற்றுமை கொண்டான் என்னும் பயனிலை கொண்டது; ஏகாரம் பிரிவுணர்த்திற்று; ஆண்டு எச்சமும் எச்சத்தை முடிக்குஞ் சொல்லும் இன்மையான், அவர்க்கு அது கருத்தன்று என்க.

[சேனா: 440 — இளம்: 434]

பசப்பித்துச் சென்றாரை யாமுடையேம் என்னுந் தொடக்கத்தன குறிப்பிற் றோன்றலா யடங்குதலின், விண்ணென விசைத்தது

என்பது குறிப்பெச்சம் என்றும், அதுபோல என்னுந் தொடக்கத்தன விகாரவகையாற் றொக்குநின்றமையான், ஒல்லெனவொலித்தது என்பது இசையெச்சம் என்றும், இவை தத்தஞ்சொல்லான் முடிதலல்லது பிறசொல்லான் முடியாமையின் இவற்றை மேல் வந்து முடிக்கும் எஞ்சுபொருட்கிளவியில என்றூர் என்றும், உரைத்தாரால் உரையாசிரியர் எனின் — அற்றன்று, 'தெரிபுவேறு நிலையலுங் குறிப்பிற் ருேன்றலும்' எனச் சொற்பொருட்பாகுபாடு உணர்த்தினர்; குறிப்பிற்ருேன்றும் பொருளை வெளிப்படுத்தும் எச்சமாதலுடைமையான் எச்சம் என்றூர் ; அதனுன் ஆண்டு அடங்காது. இனி, விசைத்தது ஒலித்தது என்பன தஞ்சொல் எனப்படா ; படினும், விண்ணென வீங்கிற்று, துண்ணெனத் துளங்கினுன் எனவும், ஒல்லென வீழ்ந்தது எனவும் பிறசொல்லானும் முடிதலின் எஞ்சுபொருட்கிளவியில என்றல் பொருந்தாதாம். என்னை? தஞ்சொலல்லாதன எஞ்சுபொருட்கிளவியாம் ஆகலின். இனி அதுபோலவென்பது தொகுக்கும்வழித்தொகுத்தல் என்பதனுற் றொக்கதாயின், அதனைச் சுட்டிக்கூருவுவமை யென அணியியலுள் ஆசிரியர் ஒருவமைவேறுபாடாகக் கூறல் பொருந்தாது. தொகுக்கும் வழித் தொகுத்தல் ஒருமொழிக்கண்ணதாகலிற் பலசொற்றொகும் என்றலும் பொருத்தமின்று; அதனுன், அவர்க்கு அது கருத்தன்று. விண்ணென விசைத்தது, ஒல்லெனவொலித்தது என்னுந் தொடக்கத்தனவற்றை எனவெனெச்சமென அடக்கிக் குறிப்பெச்சத்திற்கும் இசையெச்சத்திற்கும் வேறு உதாரணங்காட்டல் கருத்தென்க. அல்லதூஉம், எனவெனெச்சமென அடக்காது இசையும் குறிப்பும் பற்றி வருவனவற்றை வேருேதின், வெள்ளென வெளுத்தது எனப் பண்புபற்றி வருவதனையும் வேருேதல் வேண்டும்; அதனை வேருேதாமையானும் எனவெனெச்சமென அடக்குதலே கருத்தாகக் கொள்க. குறிப்புப்பொருளைப், 'பசப்பித்துச் சென்ரு ருடையையோ', 'இளைதாக முண்மரங் கொல்க' என்பன முதலாகிய தொடர்மொழியே உணர்த்தலான் எஞ்சுபொருளெனப்படாவாயினும், அப்பொருள் பிறசொல்லானல்லது வெளிப்படாமையின், அச்சொல் எச்சமாயிற்று. குறிப்புப்பொருளே யன்றி எஞ்சுபொருளுஞ் சொல்லுவான் குறிப்பொடு படுத்துணர்ந்து தமக்கேற்ற சொல்லால் உணர்த்தப்படுதலின், குறிப்பான் எச்சஞ்செப்பல் மூன்றற்கும் ஒத்தவாறறிக.

[சேனா : 448 — இளம் : 442]

உயர்ந்தான் தமனொருவனைக் காட்டி, இவற்குக் கொடு என்னும் என்றாரால் உரையாசிரியர் எனின் — ஆண்டுப் படர்க்கைச்சொற் படர்க்கைச்சொல்லோடியைதலான் வழுவின்மையின் அமைக்கல் வேண்டாவாம் ; அதனான், அது போலியுரை என்க.

[சேனா : 450 — இளம் : 444]

செய்யாய் என்னும் முன்னிலையெதிர்மறை எதிர்மறை படாது செய்யென் விதிவினை யாதலுமுரித்து என்றுரைத்தாரால் உரையாசிரியர் எனின் — அற்றன்று, செய்யாய் என்னும் எதிர்மறைவினையும் செய்யாய் என்னும் விதிவினையும் முடிந்தநிலைமை ஒக்குமாயினும், எதிர்மறைக்கண் மறையுணர்த்தும் இடைநிலையும் உண்மையான், முடிக்குஞ்சொல் வேறெனவேபடும். மறை உணர்த்தும் இடைநிலையாவன: உண்ணலன், உண்டிலன், உண்ணாது, உண்ணேன் என்புழி வரும் அல்லும் இல்லும் ஆவும் ஏயும் பிறவுமாம். உண்ணாய் உண்ணேன் என்புழி எதிர்மறை ஆகார ஏகாரங் கெட்டு நின்றன எனல்வேண்டும், அல்லாக்கால் மறைப்பொருள் பெறப் படாமையின். அதனான் எதிர்மறைச்சொல்லே விதிவினைச் சொல்லாகாமையின் அவர்க்கு அது கருத்தன்று என்க. அல்லதூஉம், ஆசிரியர் அக்கருத்தினராயின், செய்யாய் என்னும் எதிர்மறை வினைச்சொல் என்றோதுவார்மன்; அவ்வாறு ஓதாமையான், அவர்க்கு அது கருத்தன்மையான் உரையாசிரியர்க்கும் அது கருத்தன்மை அறிக.

[சேனா : 457 — இளம் : 450]

'பெயர்த்தனென் முயங்க' என்பது முதலாயின செய்தெனெச்சம் முற்றாய்த் திரிந்தன என்றும், 'ஓடித்துண்டெஞ்சி' என்பது முதலாயின செயவெனெச்சம் செய்தெனெச்சமாய்த் திரிந்தன என்றும், முன்னருரைத்தாரால் உரையாசிரியர் எனின் — பெயர்த்தனென்முயங்க என்பது முதலாயின எச்சத்திரிபாயின் எச்சப்பொருளுணர்த்துவதல்லது இடமும் பாலும் உணர்த்தற்பாலவல்ல ; எச்சப்பொருண்மையாவது மூன்றிடத்திற்கும் ஐந்து பாற்கும் பொதுவாகிய வினைநிகழ்ச்சி யன்றே ; அவ்வாறன்றி முற்றுச்-

சொற்கு ஓதிய ஈற்றவாய் இடமும் பாலும் உணர்த்தலின், அவை முற்றுத் திரிசொல்லெனவேபடும். சொன்னிலையுணர்ந்து வினை-கோடன்மாத்திரத்தான் வினையெச்சமெனின், மாரைக்கிளவியும் வினையொடு முடியும் வேற்றுமையும் பிறவுமெல்லாம் வினை யெச்சமாவான் செல்லும்; அதனான் அவர்க்கு அது கருத்தன்றென்க. அல்லதூஉம், 'கண்ணியன் வில்லன் வரும்' என வினைக்குறிப்பு முற்றாய்த் திரிதற்கேற்பதோர் வினையெச்சம் இன்மையானும், அது கருத்தன்மை அறிக.

'ஒடித்துண்டெஞ்சிய' என்பதூஉம், 'ஞாயிறு பட்டு வந்தான்' என்பதூஉம் பிறவினை கொண்டனவாயினும், செய்தெனெச்சத்திற்-குரிய இறந்தகாலம் உணர்த்தலான், ஏனைக்காலத்திற்குரிய செய வெனெச்சத்தின் திரிபெனப்படா; செயவெனெச்சத் திரிபாயின் செயவெனெச்சத்திற்குரிய காலம் உணர்த்தல் வேண்டும். 'மழை பெய்ய மரம் குழைத்தது' எனச் செயவெனெச்சத்திற்கு இறந்த காலமும் உரித்தெனின், காரண காரியப் பொருண்மை யுணர்த் தும்வழியல்லது செயவெனெச்சம் இறந்தகாலம் உணர்த்தாது; ஒடித்துண்டலும் ஞாயிறு படுதலும், எஞ்சுதற்கும் வருதற்கும் காரணமன்மையான் ஆண்டிறந்தகாலம் உணர்த்தாமையின், செய் தெனெச்சமாய் நின்று தமக்குரிய இறந்தகாலம் உணர்த்தின எனப் படும். அத்தாற் செயவெனெச்சம் செய்தெனெச்சமாய்த் திரிந்தன என்றலும் அவர் கருத்தன்று என்க. ஞாயிறு பட்டு வந்தான் என் பது ஞாயிறு பட்டபின் வந்தான் என இறந்தகாலம் உணர்த்தலும், ஞாயிறு பட வந்தான் என்பது ஞாயிறு படாநிற்க வந்தான் என நிகழ்காலம் உணர்த்தலும் வழக்கு நோக்கிக் கண்டுகொள்க.

[சேனா : 460 — இளம் : 453]

'வைகைக் கிழவன் வயங்குதார் மாணகலந், தையலா யின்றுநீ நல்கினை நல்காயேற், கூடலார் கோவொடு நீயும் படுதியே, நாடறியக் கௌவை யொருங்கு' என்புழி, வைகைக்கிழவன் கூட-லார்கோ என்பன ஒருபொருளை வரைந்துணர்த்தலாற் பிரிவில-வாகலின் வரையப்படா என்றும்; 'கொய்தளிர்த் தண்டலைக் கூத்-தப் பெருஞ்சேந்தன், வைகலு மேறும் வயக்களிறே - கைதொழு வல், காலேக வண்ணனைக் கண்ணாரக் காணவெஞ், சாலேகஞ்

ச்ர்ர நட' என்புழிக் காலேகவண்ணன் என்பது அச் சாந்து பூசினார் எல்லார்க்கும் பொதுவாய்க் கூத்தப்பெருஞ் சேந்தனையே வரைந்-துணர்த்தாமையின், அவை பிரிவுடையவாம் என்றும் உரையாசிரி-யர் உரைத்தாரால் எனின் — அற்றன்று, 'நாணிநின் றோணிலை கண்டியானும், பேணினே னல்லனோ மகிழ்ந வானத், தணங்-கருங் கடவு ளன்னோணின், மகன்று யாதல் புரைவதா லெனவே' என்புழி, வானத்தணங்கருங் கடவுளன்னோள் என்பது மகளிர்க்கெல்-லாம் பொதுவாய் நாணிநின்றோளை வரைந்து உணர்த்தாதாயினும் சொல்லுவான் குறிப்பான் அவளையே உணர்த்தினாற்போலக் காலேக வண்ணன் என்பதூஉம் பொதுவாயினும் சொல்லுவான் குறிப்-பாற் கூத்தப் பெருஞ்சேந்தனையே உணர்த்திப் பிரிவிலவாய் நிற்ற-லான், அவர்க்கு அது கருத்தன்று என்க.

# நச்சினார்க்கினியர் உரையாசிரியரை மேற்கொண்டும் மறுத்துங் கூறுமிடங்கள்

[நச் : 1 — இளம்: 1]

உரையாசிரியரும், சொல் என்பது எழுத்தினான் ஆக்கப்பட்டுத் திணையறிவுறுக்கும் ஓசை யென்றும், தன்னை உணரநின்றவழி எழுத்து எனப்படும் தான் இடைநின்று பொருளுணர்த்தியவழிச் சொல் எனப்படும் என்றுங் கூறினார் இக்கருத்தேபற்றி.

[நச் : 1 — இளம் : 1]

'மறங்கடிந்த வருங்கற்பின்' எனவும், 'சில்சொல்லிற் பல் கூந்தல்' எனவும் பிறாண்டுஞ் சான்றோர் செய்யுளில் இன்சாரியை உருபுபற்றாது நிற்றல் நோக்கி உரையாசிரியரும், 'ஆயிருதிணை-யினையும்' என இரண்டாமுருபு விரித்துப் பொருள்கூறினார்.

[நச் : 184 — இளம் : 179]

வெண்குடைப் பெருவிறல் என்பது செங்குடை முதலியவற்றோடு இயைபு நீக்காது வெண்குடையோடு இயைபின்மைமாத்திரை நீக்கி நின்றாற்போலப் பன்மைசுட்டிய என்பதும் ஒருமையியைபு நீக்காது பன்மைசுட்டுதலோடு இயைபின்மை மாத்திரை நீக்கி நின்றது ; இஃது இயைபின்மை நீக்கமாம். கருங்குவளை யென்பது செம்மை முதலியவற்றோடு இயைபு நீக்குதலிற் பிறிதினியைபு நீக்கமாம். எனவே விசேடித்தல் இருவகையவாயின ; எனவே, பல பால்களையும் உணர்த்திநிற்றலிற், 'பன்மைசுட்டிய' என்றாரென்று உரையாசிரியர் கூறியதே சேனாவரையர்க்குங் கருத்தாயிற்று.

[நச் : 283 — இளம் : 276]

ஆசிரியர் முன்னர்க் கூறியதனை ஈண்டும் 'இறுதியி லுயிரே' என்று ஒருதலைமொழி யென்னும் உத்தியாகக் கூறினமையானும் உரையாசிரியரும், 'நெட்டெழுத் தேழே யோரெழுத் தொருமொழி' என்புழி, ஔகாரத்தினை உதாரணங் காட்டாது, 'கவவோடியையின்' என்பதனாற் கௌ வௌ என உதாரணங் காட்டினமையானும் ஈண்டு, 'ஆயிய னிலையுங் காலத் தானு - மளபெடை யின்றித் தான் வரு காலையும்' என்னும் இரண்டற்கும் ஔஉ ஔ என்று உயிரையே உதாரணமாகக் காட்டுதல் மாறுகொளக்கூறலாமென்று உணர்க.

[நச் : 360 — இளம் : 354]

இதற்கு உரையாசிரியர் இலத்தாற் பற்றப்படும் புலவரென வேற்றுமையர்கப் பொருள்கூறினார் எனின், ஆசிரியர், 'அல்வழி யெல்லா மெல்லெழுத் தாகும்' என அல்வழியே கூறத்தொடங்கி, 'அகமென் கிளவிக்குக் கைமுன் வரின்' எனப் பண்புத்தொகையும், 'இலமென் கிளவிக்கு' என அல்வழிக்கண் வரும் உரிச்சொல்லுங் கூறிப், பின்னர் எண்ணுப்பெயரும் அளவுப் பெயரும் நிறைப் பெயருங் கூறிப், 'பட்க்கைப்பெயரும்' என்னுஞ் சூத்திரத்தின், 'வேற்றுமையாயின்' என மீட்டும் வேற்றுமையை எடுத்து ஓதினமையின் இலமென்பதனை வேற்றுமை யென்றல் பொருந்தாமை உணர்க. இலமென்னுஞ் சொல் யாம் பொருளிலம் என முற்றுச் சொல்லாயும் ஒருகால் உரிச்சொல்லாயும் நிற்கும் என்பது உணர்த்துதற்கு இலத்திற்கு உரிச்சொற்றன்மைப்பட்டு நிற்குமிடத்து என்றார். 'இலமென் கிளவிக்குப் படுவரு காலை' என நிலைமொழி வருமொழி செய்து முன்னர் ஆசிரியர் புணர்த்தமையின் இலம்பாடு என ஒருசொல்லாக ஓதாமை உணர்க. 'இலம்பாடு நாணுத் தரும்' என்றதோ எனின், இல்லாமை உண்டாதல் நாணுத்தரும் எனப் பொருள்கூறிக்கொள்க.

[நச் : 440 — இளம் : 434]

இனிப், பிறசொல் வாராது தம்மைத்தாமே முடிக்குமென்று, விண்ணெனவிணைத்தது, ஒல்லென ஒலித்தது என்பன காட்டினார் உரையாசிரியர் எனின் — அவை தம்மைத் தாமே முடியாமல் அது விண்ணெனவீங்கிற்று ஒல்லெனவோடிற்று எனப் பிறசொல்

வந்து முடித்தலும் அவற்றிற்கு எற்குமாகலானும் அவை என என்னும் இடைச்சொல்லாகலானும் அவற்றைக் கொண்டாற் காரெனக் கருத்தது என்னும் பண்புங் கோடல்வேண்டுமாகலானும் அது போலியுரையாம்.

[நச் : 455 — இளம் : 448]

இனி, இடைச்சொற்களெல்லாந் தாம் அடைந்த பெயர்வினைகளின் பொருள்களை வேறுபடுத்தி நிற்றலின் வேற்றுமைச்சொல் என்று சொல்லப்படுமென்று பொருள் கூறினார் உரையாசிரியர் எனின் — அவை வேறுபாடுசெய்தல் அவ்வோத்திற் கூறிய சூத்திரங்களின் பொருளால் ஆண்டுப் பெறப்படுதலின் ஈண்டுக் கூறல் கூறியது கூறலாமாகலின் அது பொருந்தாது என்க.

[நச் : 457 — இளம் : 450]

இனி, ஞாயிறுபட என்னுஞ் செயவெனெச்சத்து அகர ஈறு பட்டு என உகர ஈறாய்த் திரிந்துநின்றது என்றார் உரையாசிரியர் எனின்—ஞாயிறுபட வந்தான் என்பது ஞாயிறுபடாநிற்கவந்தான் என நிகழ்காலம் உணர்த்துதல் வழக்காதலின் அது திரிந்து இறந்த காலம் உணர்த்தும் என்றல் பொருந்தாமை உணர்க.

[நச் : 458 — இளம் : 451]

இச்சூத்திரத்திற்கு வழக்கிடத்து உடனிற்கற்பால அல்லனவற்றது உடனிலை போற்றுக என்று பொருள்கூறி, 'இந்நாழிக்கு இந்நாழி சிறிது பெரிது' என்பது காட்டினார் உரையாசிரியர் எனின்—அது சிறப்பின்கண் வரும் நான்காம் வேற்றுமைப்பொருளாய் அடங்குதலானும் சிறிதென்பது பெருமையை விசேடித்து நிற்றலானும் அதுதான் முன்னர்ப் பெறப்பட்டமையானும் இவ்வெச்சமயக்கங் கூறுதலே ஆசிரியர் கருத்தென்று உணர்க.

[நச் : 459 — இளம் : 452]

இச் சூத்திரத்திற்கு உரையாசிரியர், சொல்லுவான் குறிப்பாற் பொருளுணரப்படுஞ் சொற்களும் உள இப்பொருள் இத்தன்மைய என்று கூறுதற்கண் எனப் பொருள்கூறிச், 'செஞ்செவி வெள்ளொக்கலர்' என்பது காட்டினார் எனின், அது குறிப்பிற்றோன்றலினது வேறுபாடாம் என மறுக்க.

## சொல்லதிகாரம்:

# சூத்திர முதற் குறிப்பு

கா. நமச்சிவாய முதலியார்

## பதிப்பு :

தொல்காப்பியம் மூலம் :

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் | ... | 1 | 0 0 |
| 2. | பொருளதிகாரம் ... | ... | 1 | 0 0 |
| 3. | தொல்காப்பியப் பாயிரங்கள் (பொதுவும் சிறப்பும்) | ... | 0 | 12 0 |
| 4. | தொல்காப்பியப் பாயிரவிருத்தி, முதற் சூத்திரவிருத்தி (சிவஞான சுவாமிகள்) | | 0 | 8 0 |
| 5. | தொல்காப்பியம் — இளம்பூரணம் : | | | |
| 6. | எழுத்ததிகாரம் ... ... | ... | (அச்சில்) | |
| 7. | சொல்லதிகாரம் ... ... | ... | 3 | 0 0 |
| 8. | பொருள் : I அகத்திணை, புறத்திணை | ... | 3 | 0 0 |
| 9. | பொருள் : II ... ... | ... | (அச்சில்) | |
| 10. | பொருள் : III ... ... | ... | (அச்சில்) | |
| 11. | சொல்லதிகாரம் : பேராசிரியம் | ... | (அச்சில்) | |
| 12. | சொல்லதிகாரம் : கல்லாடம் ... | ... | (அச்சில்) | |
| 13. | இறையனார் களவியல் (இறையனார் அகப்பொருள்) ... | ... | 4 | 0 0 |
| 14. | பத்துப்பாட்டு மூலம் ... | ... | 1 | 0 0 |
| 15. | குறுந்தொகை மூலம் ... | ... | 2 | 8 0 |
| 16. | தஞ்சைவாணன் கோவை ... | ... | 3 | 8 0 |
| 17. | தணிகைப் புராணம் ... | ... | 5 | 0 0 |
| 18. | கைந்நிலை மூலம் ... ... | ... | 0 | 6 0 |
| 19. | ஊசிமுறி உரை ... | ... | 0 | 8 0 |
| 20. | நக்கீரர் செய்யுட்டிரட்டு ... | ... | 0 | 12 0 |
| 21. | ஐந்திணை எழுபது ... | ... | (அச்சில்) | |

ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

சின்னத்தம்பித் தெரு, சென்னை.

# தொல்காப்பியம்

## சொல்லதிகாரம்

முதலாவது

### கிளவியாக்கம்

1. உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை யென்மனா ரவரல பிறவே
ஆயிரு திணையி னிசைக்குமன் சொல்லே.

என்பது சூத்திரம்.

இவ் வதிகாரம் சொல்லிலக்கணம் உணர்த்தினமை காரணத்தாற் சொல்லதிகாரம் என்னும் பெயர்த்து. சொல் என்பது எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுக்கும் ஓசை. அதிகாரம் என்பது முறைமை.

மற்று, அச் சொல் எனைத்து வகையான் உணர்த்தினானோவெனின், எட்டு வகைப்பட்ட இலக்கணத்தான் உணர்த்தினான் என்க. அவையாவன: இரண்டு திணை வகுத்து, அத் திணைக்கண் ஐந்து பால் வகுத்து, எழுவகை வழு வகுத்து, எட்டு வேற்றுமை வகுத்து, அறுவகை ஒட்டு வகுத்து, மூன்று இடம் [illegible], மூன்று காலம் வகுத்து, [illegible]

இரண்டு திணையாவன* — உயர்திணையும், அஃறி-
ணையும் ;

ஐந்து பாலாவன — ஒருவன், ஒருத்தி, பலர்,
ஒன்று, பல என்பன† ;

எழுவகை வழுவாவன — திணைவழு, பால்வழு,
இடவழு, காலவழு, செப்புவழு, வினாவழு, மரபுவழு
என்பன ;

எட்டு வேற்றுமையாவன — பெயர், ஐ, ஒடு, கு,
இன், அது, கண், விளி என்பன ;

அறுவகை ஒட்டாவன — வேற்றுமைத்தொகை,
-வமைத்தொகை, வினையின்றொகை, பண்பின்றொகை,
-ம்மைத்தொகை, அன்மொழித்தொகை என்பன ;

மூன்று இடமாவன — தன்மை, முன்னிலை, படர்க்-
-க என்பன ;

மூன்று காலமாவன — இறந்தகாலம், நிகழ்காலம்,
எதிர்காலம் என்பன ;

இரண்டு இடமாவன — வழக்கிடம், செய்யுளிடம்
என்பன.

இனி, இவ் வதிகாரத்து முதற்கணோத்து என்ன
பெயர்த்தோவெனின், கிளவிகள் பொருண்மே லாமாறு
உணர்த்தினமையின் கிளவியாக்கம் என்னும் பெயர்த்து :
என்னை ? ஒருவன்மேலாமாறிது, ஒருத்திமேலாமாறிது,
பலர்மேலாமாறிது, ஒன்றன்மேலாமாறிது, பலவற்றின்-
மேலாமாறிது, வழுவாமாறிது, வழுவமைதியாமாறிது
எனப் பொருள்கண்மேல் ஆமாறு உணர்த்தினமையின்
இப்பெயர்த்தாயிற்று.

இவ்வோத்தின் தலைக்கட் கிடந்த சூத்திரம் என்
நுதலிற்றோவெனின், சொல்லும் பொருளும் வரையறுத்து
உணர்த்துதல் நுதலிற்று.

* என்பன என்றும்,

உரை : உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டு என்பது — உயர்திணை யென்று சொல்லுவர் ஆசிரியர் மக்களென்று சுட்டப்படும் பொருளை யென்றவாறு ; அஃறிணை யென்மனார் அவரல பிற என்பது — அஃறிணை யென்று சொல்லுவர் ஆசிரியர் மக்களல்லாத பிறபொருளை யென்றவாறு ; ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே என்பது — அவ்விருதிணையையும் இசைக்குஞ் சொல் என்றவாறு.

எனவே, உயர்திணைச் சொல்லும், உயர்திணைப் பொருளும், அஃறிணைச் சொல்லும், அஃறிணைப் பொருளும் எனச் சொல்லும் பொருளும் அடங்கின.

உலகத்தின் மக்கள் என்ற பொருளை உயர்திணை யென்றது கூறுபாடின்மையின். அஃறிணை கூறுபாடுடைமையின், அஃறிணை யென்மனார் அவரல என்னுது, பிற என்றான் ; அவை, உயிருடையனவும் உயிரில்லனவும் என இரண்டு கூற்றன என்றற்கு. அவற்றது கூறுபாடெல்லாம் அறிந்துகொள்க.

மற்று, உயர் என்னுஞ் சொன்முன்னர்த் திணை என்னுஞ் சொல் வந்து இயைந்[illegible]யாதோவெனின், ஒரு சொன்மு[illegible] ஒ[illegible] சொல் [illegible], தொகைநிலை வகையான் வருதலும், எண்ணுநி[illegible]கயான் வருதலும், பயனிலைவகையான் வருதலும் எ[illegible] மூன்று வகையான் அடங்கும். அவற்றுள், தொகைநிலை வகையான் வந்தது, 'யானைக்கோடு' என்பது; எண்ணுநிலைவகையான் வந்தது, 'நிலனும் நீரும்' என்பது; பயனிலை வகையான் வந்தது, 'சாத்தன் உண்டான்' என்பது. அவற்றுள் இஃது உயர் திணை யென இறந்தகாலந் தொக்க வினைத்தொகை.

இனி, என்மனார் என்பது, என்ப என்னும் முற்றுச் சொல்லைக் * குறைக்கும்வழிக் குறைத்தல் (தொல். சொல். எச்ச. 7) என்பதனாற் பகரங் குறைத்து, விரிக்கும் வழி விரித்தல் (தொல். சொல். எச்ச. 7) என்பதனால் மன்னும்

* 'குறுக்கும்வழிக் குறுக்கசல்' — பாடபேதம்.

ஆரும் என்பன இரண்டிடைச்சொற் பெய்து விரித்தான். என்மனார் ஆசிரியர் என்று முடியற்பாற்று. முற்றுச்-சொல் எச்சப் பெயர் என்பவாகலின், இது செய்யுணோக்-கித் தொகுத்துக் கூறினான் என்பது.

இனி, மக்கட் சுட்டே யென்பது, மக்கள் என்று வரைந்து சுட்டுதற்குக் காரணமாகிய தன்மை யென்னும் ஒருவன். இனி, மக்கள் எனினுஞ் சுட்டு எனினும் அவ-ரையே சொல்லியவா றென்ப ஒரு திறத்தார். சுட்டென்-பது கருத்து. அக் கருதற்பா டுடைமையிற் சுட்டென-வும்படும் மக்கள் என்பது. இனிச் சுட்டே யென்புழி ஏகாரம் ஈற்றசை யேகாரம்.

அஃறிணை யென்பது அல் திணை யென்றவாறு. அல்-லதும் அதுவே, திணையும் அதுவே. மேற்சொல்லப்பட்ட உயர்திணை யல்லாத திணை அஃறிணை யெனக் கொள்க. ஈண்டும் என்மனார் என்பதற்கு மேற் சொல்லியவாறே சொல்லுக.

இனி, அவர் என்னுஞ் சொல்லின் முன்னர் அல்ல என்னுஞ் சொல் வந்து இயைந்தவா றியாதோவெனின், அவரினல்ல என் [illegible] வரல்ல என [illegible], ஐந்தாம்வேற்-றுமைப் பொரு[illegible]து. இனி, அல்ல பிற என்பது. அல்லவும் பிறவும் [illegible] உம்மைத்தொகை யென்றலும் ஒன்று.

இனி, அவ் வுயர்திணை யல்லன வெல்லாம் அவ் வுயர்திணைபோல ஓரினத்த அல்ல; தத்தம் வகையான் வேறுபட்டன உயிருடையனவும் உயிரில்லனவும் என்பது. ஏகாரம் ஈற்றசை யேகாரம்.

ஆயிரு திணையி னிசைக்கும் என்புழி, ஆயிரு திணை-யையும் என ஐகார வேற்றுமை விரித்துரைக்க. இன் சாரியை. இசைக்கும் என்பது செய்யும் என்னும் பெய-ரெச்சம். மன் என்பது இடைச்சொல். ஏகாரம் ஈற்றசை யேகாரம். (க)

**2. ஆடூஉ வறிசொல் மகடூஉ வறிசொல்**
**பல்லோ ரறியுஞ் சொல்லொடு சிவணி**
**அம்முப் பாற்சொல் லுயர்திணை யவ்வே.**

இச் சூத்திரம் என்னுதலிற்றோவெனின், மேல் திணைகூறு செய்தெனத் திணையுட் பால்கூறுசெய்தல் நுதலிற்று.

உரை : ஆடூஉவினை யறியுஞ் சொல்லும், மகடூஉவினை யறியுஞ் சொல்லும், பல்லோர் அறியுஞ் சொல்லொடு பொருந்தி அம் முப்பாலை யறிவிக்குஞ்சொல் உயர்திணை யுடையன என்றவாறு.

ஆடூஉ என்றது ஆண்மகனை; மகடூஉ என்றது பெண் மகளை ; பல்லோர் என்றது அவர் தொக்க பன்மையை.

இனி, அப் பொருள் மூன்று கூறுபடவே, அவற்றை யுணர்த்துஞ் சொல் மூன்று கூறுபடும் என்பது. இது தந்திரவுத்தி வகைமை கூறல்.　　(உ)

**3. ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்**
**றாயிரு பாற்சொ லஃறிணை யவ்வே.**

இச் சூத்திரம் என்னுதலிற்றோவெனின், மேல் அஃறிணை யென்றார், அதனை யிணைத்துப் பால்படும் என்று அது படும் பாலை விரித்துணர்த்துதல் நுதலிற்று.

உரை : ஒன்று, பல என்னும் இருபாலையும் உணர்த்துஞ் சொல் அஃறிணை யுடையன என்றவாறு.　　(ங)

**பெண்மை சுட்டிய வுயர்திணை மருங்கின்**
**ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்**
**தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்**
**இவ்வென வறியுமந் தந்தமக் கிலவே**
**உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்.**

இச் சூத்திரம் என்னுதலிற்றோவெனின், ஐயமறுத்தல் நுதலிற்று.

உரை: பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின் என்பதனை மொழிமாற்றி, உயர்திணை மருங்கின் பெண்மை சுட்டிய எனக் கொள்க. தெய்வஞ் சுட்டிய பெயர் நிலைக் கிளவியும் என்பது — தெய்வத்தைச் சுட்டிய பெயர்ப் பொருளும் என்றவாறு; இனிப் பெயர்நிலைக் கிளவி யென்பதற்கு ஒருவன் சொல்லுவது: பெயர் என்பதனை ஆகுபெயராற் பொருளாக்கி, பொருண்மேல் நிலைபெற்ற கிளவி யென்னும்; இவ்வென அறியும் அந்தந் தமக்கிலவே என்பது — தம்மை வேறுபாலறிய நிற்கும் ஈற்றெழுத்-தினை யில என்றவாறு; உயர்திணை மருங்கிற் பால்பிரிந்து இசைக்கும் என்பது — உயர்திணை மருங்கின் முப் பாலினையும் புலப்படுக்கும் எழுத்தினைத் தமக்கு ஈறாக இசைக்கும் என்றவாறு.

வரலாறு: பேடி வந்தான், பேடி வந்தாள், பேடியர் வந்தார் எனவும்; வாசுதேவன் வந்தான், திருவனுள் வந்-தாள், முப்பத்து மூவரும் வந்தார் எனவும் வரும்.

'இவ்வென அறியும் அந்தந் தமக்கிலவே' என்னும் இலேசினல், நரகன் வந்தான், நரகி வந்தாள், நரகர் வந்-தார் என்பன கொள்க. (௪)

## 5. னஃகா னொற்றே யாடூஉ வறிசொல்.

இச் சூத்திரம் என்னுதலிற்றோவெனின், ஆடூஉ அறிதற்கு ஈற்றெழுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை: னஃகானாகிய வொற்று ஆடூஉவினை ய[றி]வார்க்குக் கருவியாஞ் சொல் என்றவாறு.

வரலாறு: உண்டான் என்னும் இறந்தகாலத்தானும், உண்ணாநின்றான் என்னும் நிகழ்காலத்தானும், உண்பான் என்னும் எதிர்காலத்தானும்; கரியன், செய்யன் என்னும் வினைக்குறிப்பினானும், இங்ஙன் னகர விறுதியாய படர்க்-கை வினைமுற்றுச் சொல்லால் உயர்திணை யாண்பால் உணர்த்தப்படும்.

படர்க்கையிடம் என்பது முன்னர் வினையியலுட் பெறுதும். வினை யென்பது, 'இருதிணை மருங்கின் ஐம்-பாலறிய' (தொல். சொல். கிளவி. 10) என்னுஞ் சூத்திரத்-தாற் பெறுதும். உண்டான் என்றவிடத்து நான்கெழுத்து உளவேயாயினும், னகரத்தை ஆடூஉவறியுஞ் சொல்லென்-ருர், அதன்கட் டலைமைநோக்கி. ஏகாரம் பிரிநிலை. (ரு)

### 6. ளஃகா னொற்றே மகடூஉ வறிசொல்.

இச் சூத்திரம் என்னுதலிற்ருேவெனின், மகடூஉ அறிதற்கு ஈற்றெழுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ளஃகானுகிய வொற்று மகடூஉவினை யறி-வார்க்குக் கருவியாஞ் சொல் என்றவாறு.

வரலாறு: உண்டாள், உண்ணுநின்ருள், உண்பாள் எனவும்; கரியள், செய்யள் எனவும் வரும் வினையாலும் வினைக்குறிப்பாலும் மகடூஉவை விளக்கியவா றறிக. (சா)

### 7. ரஃகா னொற்றும் பகர விறுதியும்
### மாரைக் கிளவி யுளப்பட மூன்றும்
### நேரத் தோன்றும் பலரறி சொல்லே.

இச் சூத்திரம் என்னுதலிற்ருேவெனின், பல்லோரை யறி-யுஞ் சொற்கு ஈறும் எழுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ரஃகானும் அதுவே ஒற்றும் அதுவே; பகரமும் அதுவே, இறுதியும் அதுவே; மாரைக்கிளவி யுளப்பட மூன்றும் என்பது — மார் என்னுஞ் சொல் அகப்பட்ட மூன்றும் என்றவாறு; நேரத்தோன்றும் என்பது — நிரம்பத் தோன்றும் என்றவா்று; பலரறி சொல்லே என்பது — பலரை யறிதற்குக் கருவியாஞ் சொல் என்றவாறு.

'நேரத் தோன்றும் பலரறி சொற்கு' என்பான், உருபு தொகுத்துச், 'சொல்லே' யென்ருன் என்பது. ஏகாரம் ஈற்றசை யேகாரம்.

வரலாறு: உண்டார், உண்ணாநின்றார், உண்பார் எனவும்; கரியர், செய்யர் எனவும் ரகர இறுதியாகி நின்ற படர்க்கை வினைமுற்றுச் சொல்லால் உயர்திணைப் பன்மைப்பால் உணர்த்தப்படும்.

இனி, உண்ப, தின்ப என எதிர்காலத்துப் பகரவிறுதி முற்றுச்சொல்லால் உயர்திணைப் பன்மைப்பால் உணர்த்தப்படும்.

ஆர்த்தார் கொண்மார் வந்தார், பூக்குழா லென்னையர்க ணில்லாத தீது என மார் இறுதியாக நின்ற எதிர்காலத்துப் படர்க்கை வினைமுற்றுச் சொல்லால் உயர்திணைப் பன்மைப்பால் உணர்த்தப்படும். (எ)

**8. ஒன்றறி கிளவி தறட வூர்ந்த**
**குன்றிய லுகரத் திறுதி யாகும்.**

இச் சூத்திரம் என்னுதலிற்றோவெனின், அஃறிணை யொருமைப்பாற்குரிய எழுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ஒன்றனை யறிவிக்குஞ் சொல் த, ற, டக்களை யூர்ந்த குற்றியலுகரத்து ஈறாகும் என்றவாறு.

வரலாறு: உண்டது, உண்ணாநின்றது, உண்பது எனவும்; கரியது, செய்யது எனவும்; வினையானும் வினைக்குறிப்பானும் தகரமூர்ந்த குற்றுகரத்தான் அஃறிணை யொருமைப்பால் விளங்கும்.

கூயிற்று, தாயிற்று எனவும்; கோடின்று, குளம்பின்று எனவும் வரும் றகரம்.

குண்டுகட்டு, குறுந்தாட்டு என வரும் டகரம். (அ)

**9. அஆ வஎன வரூஉ மிறுதி**
**அப்பான் மூன்றே பலவறி சொல்லே.**

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், அஃறிணைப் பன்மைப்பாற்கு ஈறுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

சுட்டுமுத லாகிய வன்னு மானு
மவைமுத லாகிய பெண்டென் கிளவியு
மொப்பொடு வருஉங் கிளவியோடு தொகைஇ
யப்பதி னைந்து மவற்றோ ரன்ன.

உரை: இப்பெயர் பதினைந்தும் மேற் கூறப்பட்டன போலப் பாலறியவந்த உயர்திணைப்பெயராம் என்றவாறு.

ஆண்மகன் என்பதும் பெண்மகள் என்பதும்,

பெண்டாட்டி என்பதும் நம்பி என்பதும் நங்கை என்பதும்,

முறைமைப் பெயரல்லாத மகன் மகள் என்பனவும்,

மாந்தர் மக்கள் என்பனவும்,

ஆடூஉ மகடூஉ என்பனவும்,

சுட்டு முதலாகிய, அவ்வாளன் இவ்வாளன் உவ்வாளன் என்பனவும், அம்மாட்டான் இம்மாட்டான் உம்மாட்டான் என்பனவும்,

சுட்டு முதலாகிய, அப்பெண்டு இப்பெண்டு உப்பெண்டு என்பனவும்,

பொன்னன்னன், பொன்னன்னள், பொன்னன்னர் என வரும் உவமக்கிளவியும் உயர்திணைப் பெயராம் என்றவாறு. (௬௰)

161. எல்லாரு மென்னும் பெயர்நிலைக் கிளவியு
மெல்லீரு மென்னும் பெயர்நிலைக் கிளவியும்
பெண்மை யடுத்த மகனென் கிளவியு
மன்ன வியல வென்மனார் புலவர்.

உரை: எல்லாரும் எனவும் எல்லீரும் எனவும் பெண்மகன் எனவும் வரும் மூன்றும் மேற்கூறப்பட்டன போலப் பாலறியவந்த உயர்திணைப் பெயராம் என்றவாறு.

புறத்துப்போய் விளையாடும் பேதைப் பருவத்துப் பெண்பாலாரைப்,'பெண்மகன்' என்று வழங்குப. பிறவும் அன்ன. (௬௦)

162. நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெயர் உடைப்பெயர் பண்புகோள் பெயரே
பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த சினைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே
கூடிவரு வழக்கி னாடியற் பெயரே
யின்றிவ ரென்னு மெண்ணியற் பெயரோ
டன்றி யனைத்து மவற்றியல் பினவே.

உரை : நிலப்பெயர் முதலாகச் சொல்லப்பட்டனவும் மேலனபோலப் பாலறியவந்த உயர்திணைப் பெயராம் என்றவாறு.

நிலப்பெயர் — அருவாளன், சோழியன் என்பன.

குடிப்பெயர் — மலையமான், சேரமான் என்பன.

குழுவின்பெயர் — அவையத்தார், அத்திகோசத்தார் என்பன.

வினைப்பெயர் — தச்சன், கொல்லன் என்பன.

உடைப்பெயர் — அம்பர் கிழான், பேரூர் கிழான் என்பன; வெற்பன், சேர்ப்பன் என்பனவும் அவை.

பண்புகோள் பெயர் — கரியான், செய்யான் என்பன.

பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயர் — தந்தையர், தாயர் என்பன.

பல்லோர்க் குறித்த சினைநிலைப் பெயர் — பெருங்காலர், பெருந்தோளர் என்பன.

பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயர் — பார்ப்பார், அரசர், வணிகர், வேளாளர், ஆயர், வேட்டுவர் என்பன.

'பல்லோர்க் குறித்த' என்று விசேடித்தலான், இம் மூவகைப் பெயருள் ஒருமைப்பெயர் இரண்டு திணைக்கும் உரியவாம்.

கூடிவரு வழக்கின் ஆடியற் பெயர் — பட்டி புத்திரர், சங்கிராமத்தார் என்பன.

இன்றிவர் என்னும் எண்ணியற் பெயர் — ஒருவர், இருவர், மூவர், முப்பத்து மூவர் என்பன.

'இன்றிவர்' என்பது, 'இத் துணைவர்' என்னும் பொருட்டுப் போலும். (கக)

**163. அன்ன பிறவும் உயர்திணை மருங்கிற்**
**பன்மையும் ஒருமையும் பாலறி வந்த**
**வென்ன பெயரு மத்துணை யவ்வே.**

உரை: மேற் சொல்லப்பட்ட பெயர் போல்வன பிறவும் உயர்திணைக்கட் பன்மையும் ஒருமையுமாகிய பாலறிவந்த எல்லாப் பெயரும் உயர்திணைப் பெயராம் என்றவாறு.

அன்ன பிறவும் ஆவன: ஏனாதி, காவிதி, எட்டி, வாயிலான், பூயிலான், வண்ணத்தான், சுண்ணத்தான், பிறன், பிறள், பிறர், மற்றையான், மற்றையாள், மற்றையார் என்னுந் தொடக்கத்தன. (கஉ)

**164. அதுவிது வுதுவென வரூஉம் பெயரும்**
**அவைமுத லாகிய வாய்தப் பெயரு**
**மவையிவை யுவையென வரூஉம் பெயரு**
**மவைமுத லாகிய வகரப் பெயரும்**

யாதுயா யாவை யென்னும் பெயரு
மாவயின் மூன்றே டப்பதி னைந்தும்
பாலறி வந்த வஃறிணைப் பெயரே.

உரை : நிறுத்த முறையானே உயர்திணைப் பெயர் உணர்த்தி, அஃறிணைப் பெயர் உணர்த்துகின்றார்.

அது, இது, உது என வருஞ் சுட்டுமுதற்பெயரும்,

அச் சுட்டுப்பெயர்க்கு முதலாகிய சுட்டு முதலாக ஆய்தத்தொடு கூடி அஃது, இஃது, உஃது என வரும் பெயரும்,

அவை, இவை, உவை என வரும் பெயரும்,

சுட்டு முதலாக அவ், இவ், உவ் என வரும் வகர ஈற்றுப் பெயரும்,

யாது, யா, யாவை என்னும் வினாப்பெயரும் என அப் பதினைந்தும் பால்விளங்க வரும் அஃறிணைப் பெயராம் என்றவாறு.

சுட்டு முதலாகிய ஆய்தப் பெயரும், அவை முதலாகிய வகர ஈற்றுப் பெயரும் அவையல்லது இன்மையின் இவ்வாறு கூறினர். (௬௪)

165. பல்ல பலசில வென்னும் பெயரு
முள்ள வில்ல வென்னும் பெயரும்
வினைப்பெயர்க் கிளவியும் பண்புகோள் பெயரு
மினைத்தெனக் கிளக்கு மெண்ணுக்குறிப் பெயரு
மொப்பி னாகிய பெயர்நிலை யுளப்பட
வப்பா லொன்பது மவற்றோ ரன்ன.

உரை : பல்ல என்பது முதலாகக் கூறப்பட்ட ஒன்பது பெயரும் மேற்கூறிய அஃறிணைப் பெயர்போலப் பாலுணர்த்தி நிற்கும் என்றவாறு.

பல்ல, பல, சில, உள்ள, இல்ல என்னும் ஐந்தும் தம்மை யுணர்த்தி நின்றன.

வினைப்பெயர்க் கிளவி யாவது: வருவ, செல்வ என்பது.

பண்புகொள் பெயர்: கரியது, கரிய என்பன.

எண்ணுக்குறிப் பெயர்: ஒன்று, பத்து என்பன.

ஒப்பினாகிய பெயர்: பொன்னன்னது, பொன்னன்ன என்பன. (கச)

**166. கள்ளொடு சிவணு மவ்வியற் பெயரே
கொள்வழி யுடைய பலவறி சொற்கே.**

**உரை:** கள் என்னும் ஈற்றோடு பொருந்தும் அஃ-றிணை இயற்பெயராவன: ஆ, நாய், குதிரை, கழுதை, தெங்கு, பலா, மலை, கடல் என்னுந் தொடக்கத்துச் சாதிப்பெயர், ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்றலின், இயற்பெயர் என்றார். இவை, கள் என்னும் ஈற்றவாய் ஆக்கள், குதிரைகள் என நின்றவழிப் பன்மை விளக்கலின் பலவறிசொல்லாயினவாறு கண்டுகொள்க. ()

**167. அன்ன பிறவு மஃறிணை மருங்கிற்
பன்மையு மொருமையும் பாலறி வந்த
வென்ன பெயரு மத்திணை யவ்வே.**

**உரை:** மேற்கூறப்பட்ட பெயர் போல்வன பிறவும் அஃறிணைக்கட் பன்மையும் ஒருமையும் ஆகிய பால் விளங்க வந்தவை எல்லாப் பெயரும் அத்திணைக்கு உரிய என்றவாறு.

'அன்னபிறவும்' என்றதனாற் பெறுவன: பிறிது, பிற, மற்றையது, மற்றையவை, பல்லவை, சில்லவை, உள்ளது இல்லது, உள்ளன, இல்லன என்னுந் தொடக்கத்தன. (கசு)

168. தெரிநிலை யுடைய வஃறிணை யியற்பெய
ரொருமையும் பன்மையும் வினையோடு வரினே.

உரை : கள்ளொடு சிவணாத அஃறிணை யியற்பெயர் ஒருமையும் பன்மையும் விளங்குநிலையுடைய, அதற்கேற்ற வினையொடு தொடர்ந்தவழி என்றவாறு.

ஆ வந்தது - ஆ வந்தன ; குதிரை வந்தது - குதிரை வந்தன என, ஏற்ற வினையாற் பால் விளங்கியவாறு கண்டுகொள்க. (கஎ)

169. இருதிணைச் சொற்குமோ ரன்ன வுரிமையிற்
றிரிபுவேறு படூஉ மெல்லாப் பெயரு
நினையுங் காலைத் தத்த மரபின்
வினையோ டல்லது பாறெரி பிலவே.

உரை : இருதிணைச் சொல்லாதற்கும் ஒத்த உரிமையவாகலின் உயர்திணைக்கட் சென்றுழி உயர்திணைப் பெயராயும், அஃறிணைக்கட் சென்றுழி அஃறிணைப் பெயராயும் வேறுபடு பெயரெல்லாம் ஆராயுங்கால் தத்தம் மரபின் வினையொடு இயைந்தல்லது திணைவிளங்கி நில்லா என்றவாறு.

வரலாறு : சாத்தன் வந்தான், சாத்தன் வந்தது ; முடவன் வந்தான், முடவன் வந்தது எனக்கொள்க. (கஅ)

170. நிகழூஉ நின்ற பால்வரை கிளவியி
னுயர்திணை யொருமை தோன்றலு முரித்தே
யன்ன மரபின் வினைவயி னான.

உரை : நிகழ்காலம் பற்றிவரும் பால்வரை கிளவியால் உயர்திணை ஒருமைப்பால் தோன்றுதலும் உரித்து,

அவ் வொருமைப்பாற் றேன்றுதற்கேற்ற வினையிடத்து என்றவாறு.

'பால்வரை கிளவி' என்பது, செய்யும் என்னும் முற்றுச் சொல்லே.

சாத்தன் யாழ் எழூஉம், சாத்தி சாந்து அரைக்கும் என்றவழி, யாழ் எழுதலும், சாந்து அரைத்தலும் ஆகிய அஃறிணைக்கு ஏலாது, ஒருவற்கும் ஒருத்திக்கும் ஏற்றலின், உயர்திணை ஒருமைப்பால் விளங்கியவாறு கண்டு கொள்க. 'நிகழூஉநின்ற' என்பது, நிகழாநின்ற என்றவாறு. (கசா)

**171.** இயற்பெயர் சினைப்பெயர் சினைமுதற் பெயரே
முறைப்பெயர்க் கிளவி தாமே தானே
யெல்லா நீயிர் நீயெனக் கிளந்து
சொல்லிய வல்ல பிறவு மாஅங்
கன்னவை தோன்றி னவற்றொடுங் கொளலே.

இச் சூத்திரம், விரவுப் பெயர் பால்தெரிய நிற்குமாறு உணர்த்தி, இனி, அவைதம்மை யுணர்த்துவான் எடுத்துக் கொண்டார்.

உரை: இயற்பெயர் முதலாக நீ என்பது ஈருக எடுத்துச் சொல்லப்பட்டவல்லாத அன்னபிறவும் ஆண்டு வருமாயிற் சொல்லப்பட்டவற்றொடு கூட்டுக என்றவாறு.

வரலாறு:

இயற்பெய ராவன — சாத்தன், கொற்றன் என்னும் இரண்டு பெயர்.

சினைப்பெய ராவன — பெருங்காலன், முடவன் என்பன.

சினைமுதற்பெய ராவன — சீத்தலைச் சாத்தன், கொடும்புறமருதி எனச் சினைப்பெயரொடு தொடர்ந்து வரும் முதற்பெயர்.

முறைப்பெய ராவன — தந்தை, தாய் என முறை பற்றி முறையுடைய பொருண்மேல் வருவன.

அல்லன வந்தும் தம்மை உணர்த்தி நின்றன வாதலின் தாம் என்பது முதலாகிய சொல்லேயாம்.

அன்ன பிறவும் என்பதனால் *மக, குழவி என்பனவுங் கொள்க.

> 'குழவியு மகவு வாயிரண் டல்லன
> கிழவ வல்ல மக்கட் கண்ணே' (தொல் - மரபியல் - உரு)

என்று உயர்திணைக்கும் எய்துவித்தார். (உ0)

**172.** அவற்றுள்
நான்கே யியற்பெயர் நான்கே சினைப்பெயர்
நான்கென மொழிமனார் சினைமுதற் பெயரே
முறைப்பெயர்க் கிளவி யிரண்டா குமமே
யேனைப் பெயரே தத்த மரபின.

உரை : மேற்கூறிய விரவுப்பெயருள் இயற்பெயரும் சினைப்பெயரும் சினைமுதற் பெயரும் ஒரோவொன்று நான்காம் ; முறைப்பெயர் இரண்டாம் ; ஒழிந்த ஐந்து பெயரும் தத்தம் இலக்கணத்தனவாம் என்றவாறு.

தத்தம் இலக்கணம் என்றது, அவை ஒரொன்றாகி நிற்கும் என்றவாறும். தனிப்பெயர் ஐந்தும் விரவுப் பெயர் பதினன்கும் ஆக விரவுப்பெயர் பத்தொன்பது என்றவாறும். (உக)

**173.** அவைதாம்
பெண்மை யியற்பெய ராண்மை யியற்பெயர்
பன்மை யியற்பெய ரொருமையியற் பெயரேன்
றந்நான் கென்ப வியற்பெயர் நிலையே. (உ௨)

**174.** பெண்மைச் சினைப்பெய ராண்மைச் சினைப்பெயர்
பன்மைச் சினைப்பெய ரொருமைச்சினைப் பெயரேன்
றந்நான் கென்ப சினைப்பெயர் நிலையே. (உ௩)

**175.** பெண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
யாண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
பன்மை சுட்டிய சினைமுதற் பெயரே
யொருமை சுட்டிய சினைமுதற் பெயரென்
றந்நான் கென்ப சினைமுதற் பெயரே. (உ௪)

**176.** பெண்மை முறைப்பெய
ராண்மைமுறைப் பெயரென்
றாயிரண் டென்ப முறைப்பெயர் நிலையே.

இவை இயற்பெயர் முதலாகிய நான்கன் விரியாகிய பதினான்கும் இது என உணர்த்தியவாறு.

இவற்றுக்கு உதாரணம் முன்னர்க் காட்டுதும். (உ௫)

**177.** பெண்மை சுட்டிய வெல்லாப் பெயரு
மொன்றற்கு மொருத்திக்கு மொன்றிய நிலையே.

மேற் கூறிய பதினான்கு பெயரும் இருதிணையும் பற்றிப் பால் உணர்த்துமாறு உணர்த்திய எடுத்துக் கொண்டார்.

உரை : அவை பெண்மைப்பெயர் நான்கும், ஆண்மைப்பெயர் நான்கும், பன்மைப்பெயர் மூன்றும் ஒருமைப்பெயர் மூன்றும் ஆம்.

பெண்மைபற்றி வரும் நான்கு பெயரும், அஃறிணைப் பெண் ஒன்றற்கும் உயர்திணை ஒருத்திக்கும் உரிய என்றவாறு.

அந் நான்கும் ஆவன: பெண்மை யியற்பெயரும், பெண்மைச் சினைப்பெயரும், பெண்மைச் சினைமுதற் பெரும், பெண்மை முறைப்பெயரும் என்பன.

வரலாறு: சாத்தி வந்தது, சாத்தி வந்தாள் எனவும்; முடத்தி வந்தது, முடத்தி வந்தாள் எனவும்; முடக்கொற்றி வந்தது, முடக்கொற்றி வந்தாள் எனவும்; தாய் வந்தது, தாய் வந்தாள் எனவும்; அவ்வம் முறையானே அஃறிணைப் பெண் ஒன்றற்கும், உயர்திணைப் பெயர் ஒருத்திக்கும் வந்தவாறு கண்டுகொள்க. பிறவும் அன்ன.

178. ஆண்மை சுட்டிய வெல்லாப் பெயரு
மொன்றற்கு மொருவற்கு மோன்றிய நிலையே.

இதுவும் மேற் சூத்திரத்தோடு இயைபு.

வரலாறு: சாத்தன் வந்தது, சாத்தன் வந்தான் எனவும்; முடவன் வந்தது, முடவன் வந்தான் எனவும்; முடக்கொற்றன் வந்தது, முடக்கொற்றன் வந்தான் எனவும்; தந்தை வந்தது, தந்தை வந்தான் எனவும் அவை முறையானே அஃறிணை ஒன்றற்கும், உயர்திணை ஆண்பாற்கும் உரியவாய் வந்தவாறு கண்டுகொள்க. பிறவும் அன்ன. ()

179. பன்மை சுட்டிய வெல்லாப் பெயரு
மொன்றே பலவே யொருவ ரென்னு
மென்றிப் பாற்கு மோரன் னவ்வே.

உரை: பன்மை சுட்டிய மூன்று பெயரும், அஃறிணை ஒருமையும், அத்திணைப் பன்மையும், உயர்திணை ஒருமையும் எனச் சொல்லப்பட்ட மூன்று பாற்கும் உரிய என்றவாறு.

அவையாவன: பன்மையியற்பெயர், பன்மைச் சினைப் பெயர், பன்மைச் சினைமுதற் பெயர் என்பனவாம்.

வரலாறு: யானை வந்தது - யானை வந்தன, யானை வந்தான் - யானை வந்தாள் எனவும்; நெடுங்கழுத்தல் வந்தது - நெடுங்கழுத்தல் வந்தன, நெடுங்கழுத்தல் வந்தான் - நெடுங்கழுத்தல் வந்தாள் எனவும்; பெருங்கால் யானை வந்து - பெருங்கால் யானை வந்தன, பெருங்கால் யானை வந்தான், பெருங்கால் யானை வந்தாள் எனவும் முறையானே அஃறிணை ஒருமைக்கும், அத்திணைப் பன்மைக்கும், உயர்திணை ஒருமைக்கும் உரியவாய் வந்தவாறு கண்டுகொள்க. (உஅ)

**180.** ஒருமை சுட்டிய வெல்லாப் பெயரு
மொன்றற்கு மொருவற்கு மொன்றிய நிலையே.

உரை: ஒருமை சுட்டி வரும் மூன்று பெயரும் அஃறிணை ஒருமைக்கும், உயர்திணை ஒருமைக்கும் உரிய என்றவாறு.

அம் மூன்றுமாவன: ஒருமையியற்பெயர், ஒருமைச் சினைப்பெயர், ஒருமைச் சினைமுதற்பெயருமாம்.

வரலாறு: கோதை வந்தது - கோதை வந்தான், கோதை வந்தாள் எனவும்; செவியிலி வந்தது, செவியிலி வந்தான், செவியிலி வந்தாள் எனவும்; கொடும்புறமருதி வந்தது, கொடும்புற மருதி வந்தான், கொடும்புற மருதி வந்தாள் எனவும்; முறையே அஃறிணை ஒருமைக்கும், உயர்திணை ஒருமைக்கும் உரியவாய் வந்தவாறு கண்டு கொள்க. (உகூ)

**181.** தாமென் கிளவி பன்மைக் குரித்தே.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், 'தத்தம் மரபின' [தொல். பெயரியல் - உக.] எனப்பட்ட பெயர் இருபாற்கும் உரியவாய் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: தாம் என்னும் பெயர் இரு திணைக்கும் பன்மைப்பாற்கு உரித்து என்றவாறு.

தாம் வந்தார், தாம் வந்தன என வரும். (௩௦)

**182.** தானென் கிளவி யொருமைக் குரித்தே.

உரை: தான் என்னும் பெயர் இருதிணைக்கண்ணும் ஒருமைப்பாற்கு உரித்து என்றவாறு.

வரலாறு: தான் வந்தான், தான் வந்தாள், தான் வந்தது எனவரும். (௩௧)

**183.** எல்லா மென்னும் பெயர்நிலைக் கிளவி
பல்வழி நுதலிய நிலைத்தா கும்மே.

உரை: எல்லாம் என்னும் பெயர் இரண்டு திணைக்கண்ணும் பன்மை குறித்து வரும் என்றவாறு.

வழி என்பது இடம்.

வரலாறு: எல்லாம் வந்தேம், எல்லாம் வந்தீர், எல்லாம் வந்தார், எல்லாம் வந்தன எனவரும். (௩௨)

**184.** தன்னு ளுறுத்த பன்மைக் கல்ல
துயர்திணை மருங்கி னாக்க மில்லை.

உரை: எல்லாம் என்னும் சொல் உயர்திணைக்கு ஆங்கால் தன்மைப்பன்மைக்கல்லது முன்னிலைப் பன்மைக்கும் படர்க்கைப் பன்மைக்கும் ஆகாது என்றவாறு

'ஆக்கமில்லை' எனவே சிறுபான்மை வரப்பெறும். ()

**185.** நீயிர் நீயென வரூஉங் கிளவி
பாறெரி பிலவே யுடன்மொழிப் பொருள.

உரை: நீயிர் நீ என்னும் இரண்டு பெயர்ச்சொல்லும் திணைப்பகுதி தெரிய நில்லா; இருதிணையும் உடன்றோன்றும் பொருள என்றவாறு.

நீயிர் வந்தீர், நீ வந்தாய் என இரு திணைக்கும் பொதுவாய் நின்றவாறு கண்டுகொள்க. (௩௪)

186. அவற்றுள்
நீயென் கிளவி யொருமைக் குரித்தே.

உரை : மேற் சொல்லப்பட்ட இரண்டு பெயருள் நீ என்னும் பெயர் ஒருமைக்கு உரித்து என்றவாறு.

ஒருமையாவது : ஒருவன், ஒருத்தி, ஒன்று என்பனவற்றிற்கெல்லாம் பொதுவாகிய ஒருமை.

நீ வந்தாய் எனக் கண்டுகொள்க. (௩௫)

187. ஏனைக் கிளவி பன்மைக் குரித்தே

உரை : நீயிர் என்னும் பெயர் பன்மைக்கு உரித்து என்றவாறு.

பன்மை யாவது : பல்லோர்க்கும் பலவற்றிற்கும் பொதுவாகிய பன்மை.

நீயிர் வந்தீர் எனக் கண்டுகொள்க. (௩௬)

188. ஒருவ ரென்னும் பெயர்நிலைக் கிளவி
யிருபாற்கு முரித்தே தெரியுங் காலை.

உரை : ஒருவர் என்னும் பெயர்ச்சொல் உயர்திணைப் பாலுள் ஒருபால் விளக்கா; ஒருவன், ஒருத்தி என்னும் இருபாற்கும் பொதுவாய் நிற்கும் என்றவாறு.

வரலாறு : ஒருவர் வந்தார் என்பது, பொதுவாய் நின்றவாறு கண்டுகொள்க.

இருபாற்கும் உரித்து என்னும் உம்மை முற்றும்மை.

## 189. தன்மை சுட்டிற் பன்மைக் கேற்கும்.

உரை : ஒருவர் என்னும் பெயரது இயல்பு கருதின் அஃது ஒருமைப் பெயராயினும் பல்லோரறியுஞ் சொல்லொடு தொடர்தற்கு ஏற்கும் என்றவாறு.

வரலாறு : ஒருவர் வந்தார், ஒருவர் அவர் எனவரும்.

## 190. இன்ன பெயரே யிவையெனல் வேண்டின்
## முன்னஞ் சேர்த்தி முறையி னுணர்தல்.

உரை : நீயிர் நீ ஒருவர் என்பனவற்றை இன்னபாற் பெயரென்று அறியலுறின் சொல்லுவான் குறிப்பொடுங் கூட்டி முறையால் உணர்க என்றவாறு.

வரலாறு : ஒரு சாத்தன், ஒருவனும் ஒருத்தியானும் பலரானும் ஒன்றானும் பலவானும் தன்னுழைச் சென்றவழி, 'நீ வந்தாய், நீயிர் வந்தீர்' என்னுமன்றே ; ஆண்டு அது கேட்டான், இவன் இன்னபால் கருதிக் கூறினன் என்பது உணரும். இனி,

'ஒருவ ரொருவரைச் சார்ந்தொழுக லாற்றி' [நாலடி - 309]

என்பது சொல்லுவான் ஆடூஉ ஒருமை குறித்தான் என்பது விளங்கும்.

ஏகாரம் தேற்றேகாரம். 'முறையி னுணர்தல்' என்பது பாதுகாவல். (௩௯)

## 191. மகடூஉ மருங்கிற் பாறிரி கிளவி
## மகடூஉ வியற்கை தொழில்வயி னான.

என் நுதலியவாறோ வெனின், இனி ஒருசார் உயர்திணைப் பெயர்க்கும் விரவுப்பெயர்க்கும் எஞ்சி நின்ற இலக்கணங் கூறுகின்றார்.

உரை : மகடூஉப் பொருண்மைக்கண் பால்திரிந்து வரும் பெண்மகன் என்னும் பெயர் வினைகொள்ளு மிடத்து மகடூஉவிற்குரிய வினைகொள்ளும் என்றவாறு.

வரலாறு : பெண்மகன் வந்தாள் எனவரும்.

பொருண்மைபற்றி மகடூஉவினை கொள்ளுமோ, ஈறுபற்றி ஆடூஉவினை கொள்ளுமோ என்று ஐயுற்றார்க்கு ஐயம் அகற்றியது. (௪0)

192. ஆவோ வாகும் பெயருமா ருளவே
யாயிட னறிதல் செய்யு ளுள்ளே.

உரை : ஆகாரம் ஓகாரமாய்த் திரியும் பெயருமுள, அத்திரியும் இடமறிக செய்யுளுள்ளே என்றவாறு.

வரலாறு :

'வில்லோன் காலன கழலே தொடியோண்
மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர்
யார்கோல் லளியர் தாமே' [குறுந்தொகை - 7]

என வரும். (௪க)

193. இறைச்சிப் பொருள்வயிற் செய்யுளுட் கிளக்கு
மியற்பெயர்க் கிளவி யுயர்திணை சுட்டா
நிலத்துவழி மருங்கிற் றோன்ற லான.

உரை : செய்யுளுள் கருப்பொருண்மேற் கிளக்கப்படும் இருதிணைக்குமுரிய உயர்திணை யுணர்த்தா, அவ்வவ் நிலத்துவழி அஃறிணைப் பொருளாய் வழங்கப்பட்டு வருதலான் என்றவாறு.

வரலாறு :

'கடுவன் முதுமகன் கல்லா மூலற்கு
வதுவை வந்த வன்பறழ்க் குமரி'

என்புழிக், கடுவன் முதுமகன் குமரி என, அஃறிணைப் பொருளவாயல்லது நிலத்துவழிமருங்கிற் றோன்றாமை-

யின் உயர்திணை சுட்டாதவாறு கண்டுகொள்க. நில-
மாவன, முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்பன. (சஉ)

**194. திணையொடு பழகிய பெயரலங் கடையே.**

உரை: கருப்பொருள் உணர்த்தும் விரவுப்பெயர் உயர்திணை சுட்டாது, அஃறிணை சுட்டு அவ்வத்திணைக்-குரியவாய் விளங்கப்பட்டு வரும் பெயரல்லாத விடத்து என்றவாறு.

எனவே, திணைக்குரியவாய் வழங்கப்பட்டு வரும் பெயர் இருதிணையுஞ் சுட்டி வரும் என்பதாம்.

வரலாறு: காளை விடலை என்பன உயர்திணையினும் அஃறிணையினும் வருமாதலின் விரவுப் பெயராயிற்று. பிறவுமன்ன. (சரு)

ஐந்தாவது பெயரியல் முற்றிற்று.

ஆருவது

## வினையியல்

---

195. வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்.

என்பது சூத்திரம்.

என் நுதலிற்றோவெனின், நிறுத்த முறையானே வினைச்சொல் ஆமாறு உணர்த்திய எடுத்துக் கொண்டார், அதனால் இவ் வோத்து வினையியல் என்னும் பெயர்த்-தாயிற்று.

உரை: வினையென்று சொல்லப்படுவது வேற்றுமையொடு பொருந்தாது, ஆராயிற் காலத்தொடு புலப்படும் என்றவாறு.

ஈண்டு வேற்றுமை என்பது உருபை.

வரலாறு: உண்டான், கரியன் என வேற்றுமை கொள்ளாது காலமொடு தோன்றியவாறு கண்டுகொள்க.

196. காலந் தாமே மூன்றென மொழிப.

உரை: மேல் தோற்றுவாய் செய்யப்பட்ட காலம் மூன்று என்று சொல்லுவர் புலவர் என்றவாறு. (உ)

197. இறப்பி னிகழ்வி னெதிர்வி னென்ற
வம்முக் காலமுங் குறிப்பொடுங் கொள்ளு
மெய்ந் நிலை யுடைய தோன்ற லாறே.

உரை: இறப்பும் நிகழ்வும் எதிர்வும் என்று சொல்லப்படும் மூன்று காலமும் குறிப்புவினையொடும் பொருந்தும் மெய்ந்நிலையுடைய, வினைச்சொல்லானவை தோன்றுநெறிக்கண் என்றவாறு.

எனவே, காலம் மூன்றுவன இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்பதூஉம், வெளிப்படக் காலம் விளங்காதன குறிப்பு வினையென்பதூஉம் பெற்றாம்.

வரலாறு: உண்டான், உண்ணாநின்றான், உண்பான் என வரும்.

இறப்பாவது, தொழிலது கழிவு; நிகழ்வாவது, தொழில் தொடங்கப்பட்டு முற்றுப் பெறாத நிலைமை; எதிர்வாவது தொழில் பிறவாமை. (௩.)

198. குறிப்பினும் வினையினு நெறிப்படத் தோன்றிக்
காலமொடு வரூஉம் வினைச்சொல் லெல்லா
முயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையு
மாயிரு திணைக்குமோ ரன்ன வுரிமையு
மம்மூ வுருபின் தோன்ற லாறே.

உரை: குறிப்புப் பொருண்மைக்கண்ணும் தொழிற் பொருண்மைக்கண்ணும் தோன்றிக் காலத்தொடு வரூஉம் எல்லாச் சொல்லும் உயர்திணைக்குரியனவும், அஃறிணைக் குரியனவும், இரண்டு திணைக்கும் ஒப்ப உரியனவும் என மூன்று கூற்றனவாம் தோன்றுநெறிக்கண் என்றவாறு. (௪)

199. அவைதாம்
அம்மா மெம்மே மென்னுங் கிளவியு
மும்மொடு வரூஉம் கடதற வென்னு
மந்நாற் கிளவியொ டாயெண் கிளவியும்
பன்மை யுரைக்குந் தன்மைச் சொல்லே.

என் நுதலிற்றோவெனின், நிறுத்த முறையானே உயர்திணைவினை யுணர்த்துகின்றார்; அவைதாம் இருவகைய, தன்மை வினையும் படர்க்கை வினையும் என. தன்மை வினையும் இருவகைத்து, பன்மைத் தன்மையும், ஒருமைத் தன்மையுமென; இச் சூத்திரத்தாற் பன்மைத் தன்மை உணர்த்துகின்றார்.

**உரை:** மேல் மூன்றுவகை எனப்பட்ட வினைச் சொற்றாம், அம் - ஆம், எம் - ஏம் என்னும் ஈற்றவாகிய சொல்லும், உம்மொடு வரூஉம் க-ட-த-றவாகிய கும்மும், டும்மும், தும்மும், றும்மும் என்னும் ஈற்றவாகிய சொல்லும் என அவ்வெட்டும் பன்மையுணர்த்துந் தன்மைச் சொல்லாம் என்றவாறு.

அம், ஆம் என்பன முன்னின்றாரை யுளப்படுக்கும், தமராயவழி படர்க்கையாரையும் உளப்படுக்கும்.

எம், ஏம் என்பன படர்க்கையாரை உளப்படுக்கும்.

உம்மொடு வரூஉங் க - ட - த - ற அவ்விருவரையும் ஒருங்கு உளப்படுத்தலும் தனித்து உளப்படுத்தலும் உரிய.

அம் - ஆம், எம் - ஏம் என்பன மூன்று காலமும் பற்றி வரும்.

உம்மொடு வரூஉங் க-ட-த-ற எதிர்காலம்பற்றி வரும்.

வரலாறு:

அம் — உண்டனம், உண்ணாநின்றனம், உண்குவம் எனவும்;

ஆம் — உண்டாம், உண்ணாநின்றும், உண்பாம் எனவும்;

எம் — உண்டனெம், உண்ணாநின்றனெம், உண்கு-வெம் எனவும்;

ஏம் — உண்டேம், உண்ணாநின்றேம், உண்பேம் எனவும் வரும்.

உம்மொடு வரூஉங் கடதற — உண்கும், உண்டும், வருதும், சேறும் எனவும்; உரினுதும், திருமுதும் என ஏற்றவழி உகரம் பெற்றும் வரும். இவை நான்கும் எதிர்காலம் பற்றி வரும்.

உம்மை யடைந்து வந்த க - ட - த - றக்கள், 'உம்மொடு வரூஉங் க - ட - த - ற' ஆயின. இக் காட்டிய எட்டு வினைச்சொல்லும் உயர்திணைப் பன்மை வினைச் சொல்லை யுணர்த்துந் தன்மைச்சொல் என்றவாறு.

இவை தன்னொடு முன்னின்றானையும் உளப்படுக்கும், படர்க்கையானையும் உளப்படுக்கும், அவ் விருவரையும் உளப்படுக்கு மென்பது,

'அவற்றுள், பன்மை யுரைக்கும் தன்மைக் கிளவி'
[தொல். சொல். வினையியல் - 12]

என்னுஞ் சூத்திரத்துட் சொல்லுதும். (ரு)

**200.** கடதற வென்னும்
அந்நான் கூர்ந்த குன்றிய லுகரமொ
டென்னே னல்லென வரூஉ மேழுந்
தன்வினை யுரைக்குந் தன்மைச் சொல்லே.

என் நுதலிற்றோவெனின், மேல் உளப்பாட்டுத் தன்மை கூறினார்; இது, தனித் தன்மை வினைச்சொல் இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை: க - ட - த - ற என்னும் அந் நான்கு ஊர்ந்த குற்றியலுகரம் என்றூன் அவையிற்றின் ஈறு பற்றி.

அவை வருமாறு:

உண்கு, உண்டு, வருது, சேறு என வரும். என், ஏன் என்பன மூன்று காலமும் பற்றி வரும். அவை உண்டனென், உண்ணாநின்றனென்,உண்குவென் எனவும்; உண்டேன், உண்ணாநின்றேன், உண்குவேன் எனவும் வரும்.

அல் — உண்பல், தின்பல் என எதிர்காலம் பற்றி வரும். இப்பொழுது அதனை உண்பன், தின்பன் என அன் ஈருக வழங்குப என்ப. (சு)

**201.** அவற்றுட்
செய்கென் கிளவி வினையொடு முடியினு
மவ்விய றிரியா தென்மனார் புலவர்.

உரை: அவ் வேழனுட் செய்கு என்னும் சொல் வினைகொண்டு முடியினும் அமையும் என்றவாறு.

வரலாறு: உண்கு வந்தேன் எனவரும்.

செய்கென் கிளவி வினையொடு முடியினும் அமைக எனவே செய்கும் என்னும் கிளவியும் வினையொடு முடியி-னும் அமைக என்பது போந்ததாம்.

வரலாறு: உண்கும் வந்தேம் என வரும்.

இனி அவை முடியினும் அமையும் எனவே, பெயர் கொண்டு முடிதலே வலியுடைத்து என்பதே போந்ததாம்.

அவை: உண்கு யான், உண்கும் யாம் என வரும்.

'அவ்வியல்திரியா' என்பது அவையும் முற்றுச்சொல் இயல்பிற் றிரியா என்றவாறு. (எ)

202. அன்ஞ னள்ளா ளென்னு நான்கு
மொருவர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே.

இச் சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், உயர்திணைத் தன்மைச்சொல் உணர்த்தி, அத்திணைப் படர்க்கைவினைச் சொல் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: அன் என்பதனைத் தொடக்கமாக வுடைய நான்கு ஈற்றுச் சொல்லும் உயர்திணைக்கண் ஒருமைப் பாலை உணர்த்தும் படர்க்கை வினைச்சொல் என்றவாறு.

அவை வருமாறு:

அன் — உண்டனன், உண்ணாநின்றனன், உண்குவன் என வரும்.

ஆன் — உண்டான், உண்ணாநின்றான், உண்பான் என வரும்.

அள் — உண்டனள், உண்ணாநின்றனள், உண்குவள் என வரும்.

ஆள் — உண்டாள், உண்ணாநின்றாள், உண்பாள் என வரும்.　(அ)

203. அர் ஆர் பஎன வரூஉ மூன்றும்
பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே.

இச் சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், உயர்திணைப் படர்க்கைப் பன்மை வினைச்சொல் இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை: அம் மூவகைச் சொல்லும் பலராய புறத்தாரை யுணர்த்துஞ் சொல் என்றவாறு.

வரலாறு :

அர் — உண்டனர், உண்ணாநின்றனர், உண்குவர் என வரும்.

ஆர் — உண்டார், உண்ணாநின்றார்; உண்பார் என வரும்.

ப — உண்ப, தின்ப என எதிர்காலங்கொண்டுவரும்.

**204.** மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியு மென்ப.

உரை : மார் என்பதூஉம் உயர்திணைப் படர்க்கைப் பன்மைவினைக்கு உரித்து ; அது பின்னை முடியுங் காலவினைச்சொல்லொடு முடிதல் உடைத்து என்றவாறு.

வரலாறு: ஆர்த்தார் கொண்மார் வந்தார் எனவரும்.

இது முற்றுச்சொல் லாகலான் வினைச்சொல்லொடு முடிதல் வேற்றுமைகண்டு அஃதுணர்த்தியவா றென்பது.

**205.** பன்மையு மொருமையும் பாலறி வந்த
வந்நா லைந்து மூன்றுதலை யிட்ட
முன்னுறக் கிளந்த வுயர்திணை யவ்வே.

இச் சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், மேல் விரித்தவற்றையெல்லாம் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை : பன்மைப்பாலும் ஒருமைப்பாலும் தோன்ற நின்ற இருபத்து மூன்றுமே உயர்திணை மூன்றுபாற்கும் உரிய என வரையறுத்தவாறு.

அது, 'விரித்துத் தொகுத்தல்' என்னும் நூற்புணர்ப்புப்பட வைத்தவாறு. (கக)

206. அவற்றுட்
பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி
யெண்ணியன் மருங்கிற் றிரிபவை யுளவே.

இச் சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், அத்தொகுக்கப் பட்டனவற்றுள் ஒருசாரவற்றது வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: பன்மைத் தன்மைச் சொற்கள் ஆராயுமிடத்து அவை திரிபுடைய என்றவாறு.

யாதோ திரிபு எனின், அம் ஆம் என்னும் இரண்டும் தன்னொடு முன்னின்றானை உளப்படுக்கும்.

எம் ஏம் என்பன இரண்டும் தன்னொடு படர்க்கையானை உளப்படுக்கும்.

உம்மொடு வரூஉம் க ட த றக்கள் முன்னின்றானையும் படர்க்கையானையும் உளப்படுக்கும் என்பது.

இவ்வுளப்படுதற்குத் திரியுந் திரிபு அவையுடைய; வழூஉத் திரிபன்று ஈண்டுக் கருதியது என்பது. (௧௨)

207. யாஅ ரென்னும் வினாவின் கிளவி
அத்திணை மருங்கின் முப்பாற்கு முரித்தே.

இச் சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், உயர்திணை மூன்று பாற்கும் பொதுவாகியதோர் குறிப்புச்சொல் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: யார் என்னும் வினாவின்பாற்றாய் வருகின்ற சொல் உயர்திணை மூன்றுபாற்கும் உரித்து என்றவாறு.

வரலாறு: யார் அவன், யார் அவள், யார் அவர் என வரும்.

மற்றிது வினைக்குறிப்பே யெனின், முன்னர்,

'அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானும்'

[தொல் - சொல். 210]

என்று உயர்திணைக்குறிப்பு ஓதும்வழியே வைக்க எனின், உயர்திணை முப்பாற்கும் தன் ஈறு திரியாது நிற்றற் சிறப்புநோக்கி ஈண்டு வைத்துணர்த்தினர் என்பது. (கரு)

208. பாலறி மரபி னம்மூ வீற்று
மாவோ வாகுஞ் செய்யு ளுள்ளே.

இச் சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், உயர்திணைப் பாற்குப் படுவதோர் செய்யுண்முடிபு கூறுதல் நுதலிற்று.

உரை: பாலறி மரபின் அம்மூவீற்றும் என்பன— மேல் உணர்த்திப்போந்த னஃகான் ஒற்றும், ளஃகான் ஒற்றும், ரஃகான் ஒற்றும் ஆயின அவை மூன்றீற்றுக்கண்ணும் நின்ற ஆகாரம் ஓகாரமாம் செய்யுளுள் என்றவாறு.

வரலாறு: 'வினவிநிற் றந்தான்' என்பது, 'வினவி நிற்றந்தோன்' [அகம் - 48] எனவும்,

'நகூஉப் பெயர்ந்தாள்' என்பது, 'நகூஉப் பெயர்ந்தோள்' [அகம் - 248] எனவும்,

'சென்று ரன்பிலர்' என்பது, 'சென்றோ ரன்பிலர்' [அகம் - 31] எனவும் வரும்.

செய்யுளுள் எங்கும் ஆ ஓவாக என்றவாறு. ஆ வாகக் கொள்ளாதவிடத்தாயின் ஓவாகத் திரிவது, அல்லாக்கால் வேண்டா என்பது. (கச)

209. ஆவென் கிளவியு மவற்றொடு கொள்ளும்.

இச் சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், இதுவும் ஆ ஓவாகல் ஒப்புமை கண்டு, விரவுவினைச்சொல் ஈறு செய்யுளுட் டிரியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ஆய் என்னும் சொல்லின் ஆகாரமும் ஒவா-கும் செய்யுளுள் என்றவாறு.

வரலாறு: 'வந்தாய் மன்ற தண்கடற் சேர்ப்ப' என்-பது, 'வந்தோய் மன்ற தண்கடற் சேர்ப்ப' [அகம் - 80] என்றவாறு. (கரு)

**210.** **அதுச்சொல்வேற் றுமை யுடைமையானுங்**
**கண்ணென் வேற்றுமை நிலத்தி னானு**
**மொப்பி னானும் பண்பி னானுமென்**
**றப்பாற் காலங் குறிப்பொடு தோன்று**
**மன்மையி னின்மையி னுண்மையின் வன்மையி**
**னன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளு**
**மென்ன கிளவியுங் குறிப்பே காலம்.**

இச் சூத்திரம் என் நுதலிற்றோவெனின், நிறுத்த முறை-யானே உயர்திணைக்குரிய வினைக்குறிப்புச்சொல் உணர்த்-துதல் நுதலிற்று.

இக் கூறப்பட்ட எட்டுப் பொருண்மையும் பற்றித் தோன்றுங்கால் வினைக்குறிப்புச் சொல்லொடு தோன்றும் என்றவாறு.

உரை: அதுச்சொல் வேற்றுமை — ஆறும் வேற்-றுமை, அதன் பொருள் பல, அவற்றுள் அவ்வுடைமைப் பொருள்பற்றி உயர்திணை வினைக்குறிப்புச்சொல் பிறக்கும் என்றவாறு.

வரலாறு: உடையன், உடையள், உடையர் எனவரும்.

கண்ணென் வேற்றுமை நிலத்தினானும் பற்றிப் பிறந்தன:

நிலத்தன், நிலத்தள், நிலத்தர் என்பன.

உவமைப் பொருள் பற்றிப் பிறந்தன:

பொன்னன்னன், பொன்னன்னள், பொன்னன்னர் என்பன.

பண்புபற்றி வந்தன:

கரியன், கரியள், கரியர் என்பன.

அப்பாற் காலங் குறிப்பொடு தோன்றும் என்பது — அக்கூறப்பட்டசொல் குறிப்பாய்த் தோன்றும் என்றவாறு.

அன்மைபற்றிப் பிறந்தன:

அல்லன், அல்லள், அல்லர் என்பன.

இன்மை: இல்லன், இல்லள், இல்லர் என்பன.

உண்மை: உளன், உளள், உளர் என்பன.

வன்மை: வல்லன், வல்லள், வல்லர் என்பன.

இனிப், பிறவும் என்றதனுன்,

நல்லன் நல்லள் நல்லர் எனவும்,

தீயன் தீயள் தீயர் எனவும்,

மூவாட்டையான், நாலாட்டையான், ஏழாட்டையான் எனவும், பிறவும் இவ்வாறு வருவனவெல்லாங் கொள்க.

ஈண்டுக் காட்டினவெல்லாம் படர்க்கை வினைக்குறிப்புச் சொல். இனி; ஈண்டு எடுத்தோத்தினுனுங் கூறிய பொருளைப்பற்றித் தன்மைவினைக்குறிப்புச் சொல்வருமாறு ஒட்டிக்கொள்க.

தன்மை வினைக்குறிப்புச் சொல்: உடையென், உடையேம், உடையாம் என வரும். பிறவும் அன்ன. (கரு)

**211.** பன்மையு மொருமையும் பாலறி வந்த
அன்ன மரபிற் குறிப்பொடு வரூஉங்
காலக் கிளவி யுயர்திணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே.

உரை: பன்மைப்பாலும் ஒருமைப்பாலும் ஆகிய பெண் ஆண் என்று வேறுபாடு தோன்ற வந்த வினைக் குறிப்புச் சொற்களெல்லாம் மேற்சொல்லிப்போந்த இருபத்து மூன்று வினைச்சொற்கு ஈறாய எழுத்துக்களி னுள்ளனவே தமக்கும் ஈறுவன, பிறிதில்லை என்றவாறு.

'அன்ன மரபின்' என்றதனான், ஈண்டு உயர்திணைக்கு ஓதிய பொருட்பற்றி அஃறிணை வினைக்குறிப்புந் தோன்-றும் என்று கொள்க.

வரலாறு: 'வடாஅது வேங்கடம் தெனாஅது குமரி' என்புழி, வடாஅது தெனாஅது என்பன; இது வினைக்குறிப்-புப் பெயர். பிறவும் அன்ன. (௧௭)

**212.** அஆ வஎன வரூஉ மிறுதி
யப்பான் மூன்றே பலவற்றுப் படர்க்கை.

இச்சூத்திரம் என்நுதலிற்றோ வெனின், அஃறிணைப்பாற்கு உரிய வினைச்சொல் உணர்த்துதல் நுதலிற்று.

அ — உண்டன, உண்ணாநின்றன, உண்பன என வரும்.

ஆ — உண்ணா, தின்னா என வரும்.

வ — உண்குவ, தின்குவ என வரும்.

வரூஉம் இறுதி அப்பான் மூன்று என்பது — இறுதி இயைபுடைய அப்பான் மூன்று என்றவாறு.

இவை மூன்றுமே அஃறிணைப் பன்மைப்படர்க்கை வினைச்சொற்கு ஈறாம் எழுத்துக்கள் என்றவாறு. (௧அ)

**213.** ஒன்றன் படர்க்கை தடற வூர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும்.

இச்சூத்திரம் என்நுதலிற்றோ வெனின், அஃறிணை ஒரு-மைப்பாற்கு உரிய வினைச்சொல் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ஒன்றனை யறியும் படர்க்கை வினைச்சொல்லாவன த - ட - றக்களை ஊர்ந்த குன்றியலுகர ஈற்றுச் சொல் என்றவாறு.

வரலாறு: உண்டது, உண்ணாநின்றது, உண்பது எனவும்;

கூயிற்று, தாயிற்று எனவும்;

குண்டுகட்டு, குறுந்தாட்டு என்வும் வரும்.

இனிக், கிளவியாக்கத்துப் பாலுணர்த்தும் எழுத்துக்களைப் படர்க்கை வினைச்சொல் ஈற்றவாகக் காட்டியது இவ்வோத்தினுட் கூறப்பட்ட இலக்கணம் வலித்தாயிற்று என்பது. (கக)

**214.** பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அம்மூ விரண்டு மஃறிணை யவ்வே.

இச்சூத்திரம் என் நுதலிற்றோவெனின், விரிந்தது தொகுத்தவாறு நுதலிற்று.

உரை: பன்மைப்பாலும் ஒருமைப்பாலும் அறிய வந்த ஈற்றுச் சொற்களும் அஃறிணைக்கு உரிய வினைச்சொல் என்றவாறு. (உ0)

**215.** அத்திணை மருங்கி னிருபாற் கிளவிக்கு
மொக்கு மென்ப வெவனென் வினவே.

உரை: அஃறிணை இருபாற்கும் பொதுவேயாகி நிற்கும், எவன் என்னும் வினவினை யுணரநின்ற வினைக் குறிப்புச்சொல் என்றவாறு.

வரலாறு: எவன் அது, எவன் அவை என வரும். பெயருமாம் படுத்துச் சொல்லின். (உக)

**216.** இன்றில வுடைய வென்னுங் கிளவியு
மன்றுடைத் தல்ல வென்னுங் கிளவியும்

பண்புகொள் கிளவியு முளவென் கிளவியும்
பண்பி னாகிய சினைமுதற் கிளவியு
மொப்பொடு வரூஉங் கிளவியொடு தொகைஇ
யப்பாற் பத்துங் குறிப்பொடு கொள்ளும்
பன்மையு மொருமையும் பாலறி வந்த
வன்ன மரபிற் குறிப்பொடு வரூஉங்
காலக் கிளவி யஃறிணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே.

இச் சூத்திரம் என் நுதலிற்றோவெனின், அஃறிணைவினைக் குறிப்பு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: சொல்லப்பட்ட பத்துப் பொருண்மைக்கண்ணும் அஃறிணை வினைக்குறிப்புப் பிறக்கும் என்றவாறு.

இன்று என்பது — கோடின்று, செவியின்று என வரும்.

இல என்பது — கோடில, செவியில என வரும்.

உடைய என்பது — கோடுடைய, செவியுடைய என வரும்.

அன்று என்பது — நாயன்று, நரியன்று என வரும்.

உடைத்து என்பது — கோடுடைத்து, செவியுடைத்து என வரும்.

அல்ல என்பது — உழுந்தல்ல, பயிறல்ல என வரும்.

பண்புகொள் கிளவி — கரியது, கரிய என வரும்.

உளவென் கிளவி — உழுந்துள, பயிறுள என வரும்.

பண்பினாகிய சினைமுதற் கிளவி — குறுங்கோட்டது, குறுங்கோட்டன என வரும்.

ஒப்பொடு வரூஉங் கிளவி — பொன்னன்னது, பொன்னன்ன என வரும்.

இக் கூறப்பட்ட பத்துப் பொருண்மைக்கண்ணும் வினைக்குறிப்புச் சொற்கள் கொள்ளப்படும் என்றவாறு.

பன்மைப்பாலும் ஒருமைப்பாலும் தோன்றிநிற்கும் இலக்கணமுடைய வினைக்குறிப்புச் சொற்கள் மேற்கூறப்பட்ட அஃறிணை வினைச்சொற்கு ஈறாய்நின்று பாலுணர்த்தும் எழுத்துக்களின் உள்ளனவே தமக்கும் ஈறுவன, பிறிதில என்றவாறு. (உஉ)

**217.** முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
யின்மை செப்பல் வேறென் கிளவி
செய்ம்மன செய்யுஞ் செய்த வென்னு
மம்முறை நின்ற வாயென் கிளவியும்
பிரிவுவேறு படூஉஞ் செய்திய வாகி
யிருதிணைச் சொற்குமோ ரன்ன வுரிமைய.

இச் சூத்திரம் என் நுதற்றோ வெனின், இருதிணைக்கும் உரிய வினைச் சொற்களைப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : முன்னிலை என்பது — முன்னின்றான் தொழின்மை கூறுவது; வியங்கோள் என்பது — ஏவநிற்பது; வினையெஞ்சு கிளவி என்பது — வினைச்சொல்லை ஒழிபாகிநிற்பது; இன்மை செப்பல் என்பது — இல்லை யென்பது; ஒழிந்தன அவ்வாய்பாடே.

அவற்றுள், செய்ம்மன என்பது இப்பொழுது வழக்கரிது.

பிரிவு வேறுபடூஉஞ் செய்தியவாய் என்பது — உயர்திணைக்கண் வரின் உயர்திணைக்கே உரிய என்றும், அஃறிணைக்கண் வரின் அஃறிணைக்கே உரிய என்றும் பிரித்துச் செய்யப்படும் என்றவாறு. (உரு)

218. அவற்றுள்
முன்னிலைக் கிளவி
இஐ யாயென வரூஉ மூன்று
மொப்பத் தோன்று மொருவற்கு மொன்றகும்.

இச் சூத்திரம் என் நுதற்றோ வெனின், முன்னிலை யொருமைச் சொற்கள் திணைக்கு உரியவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : முன்னிலைக் கிளவிகளில் இ, ஐ, ஆய் என்னும் மூன்று திறத்தனவும் இரண்டுதிணை யொருமைப்பான் மூன்றற்கும் ஒப்ப வுரியவாம் என்றவாறு.

உயர்திணை ஆண்பாற்கும் பெண்பாற்கும், அஃறிணை யொருமைப்பாற்கும் என்பது.

வரலாறு : உண்டி, தின்றி என இறந்த காலத்திற்கே பொருத்தமுடைத்தாய் இகரம் வரும்.

இனி, ஐ வருமாறு — உண்டனை, உண்ணாநின்றனை, உண்குவை என மூன்று காலமும் வரும்.

ஆய் — உண்டாய், உண்ணாநின்றாய், உண்பாய் என மூன்று காலமும் வரும்.

இனி, ஒரு காலத்திற்கே யேற்கும் இகரம் முற்கூறினமையின் உண், தின், கிட, நட, வா, போ என்னுந் தொடக்கத்தன கொள்க. (உச)

219. இர்ஈர் பின்னென வரூஉ மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினுஞ்
சொல்லோ ரனைய வென்மனார் புலவர்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், முன்னிலைப்பன்மை வினைச்சொல் இவையென்று உணர்த்துதல் நுதலிற்று.

உரை: இக்கூறப்பட்ட மூன்றும் பல்லோர்க்கும் பலவற்றிற்கும் ஒப்ப வுரியவாஞ் சொல் என்றவாறு.

இர் — உண்டனிர், உண்ணாநின்றனிர், உண்குவிர் எனவும்;

ஈர் — உண்டீர், உண்ணாநின்றீர், உண்பீர் எனவும்; இவை மூன்று காலமும் பற்றி வரும்.

மின் — உண்மின், தின்மின் என எதிர்காலம்பற்றி வரும். (உரு)

**220. எஞ்சிய கிளவி யிடத்தொடு சிவணி**
**ஐம்பாற்கு முரிய தோன்ற லாறே.**

இச் சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், ஒழிந்துநின்றவற்றைத் தொகுத்து உரியவாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: அவற்றுள், முன்னிலைக்கு உரியவாகக் கூறப்பட்டவற்றை ஒழித்தொழிந்தவெல்லாம் மூன்றிடத்தும் நின்று இருதிணை ஐம்பாற்கும் உரிய என்றவாறு. (உசு)

**221. அவற்றுள்**
**முன்னிலை தன்மை யாயீ ரிடத்தொடு**
**மன்னா தாகும் வியங்கோட் கிளவி.**

இச் சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

உரை: முன்னிலை, தன்மை இரண்டிடத்துஞ் செல்வனவாகிய வியங்கோள்வினைச்சொல் சிறு வரவின என்றவாறு.

வரலாறு: நீர் செல்க, நீ செல்க, யான் செல்க என வரும்.

இனி, அவன் செல்க, அவள் செல்க, அவர் செல்க, அது செல்க, அவை செல்க என்பன பெருவரவினவாம்.

**222. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
யவ்வயின் மூன்று நிகழுங் காலத்து
செய்யு மென்னுங் கிளவியொடு கொள்ளா.**

இச்சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், இதுவும் எய்தியது விலக்குதல் நுதலிற்று.

உரை: செய்யும் என்னுஞ் சொல், உயர்திணைப் பல்லோர்படர்க்கையும் முன்னிலையும் தன்மையுங்கொண்டு முடிதல் இல்லை என்றவாறு.

எனவே, ஒருவன்படர்க்கை, ஒருத்திபடர்க்கை, ஒன்றன்படர்க்கை, பலவற்றுப்படர்க்கை என நான்குமே அஃது உரித்தாவது என்றவாறு.

வரலாறு: அவன் உண்ணும், அவள் உண்ணும், அது உண்ணும், அவை உண்ணும்.

இவ்வாறு விலக்கப்பட்ட வியங்கோட் சொல்லும், செய்யும் என்னும் முற்றுச்சொல்லும் ஒழிந்தொழிந்-தனவெல்லாம் இருதிணை ஐம்பாற்கும் மூன்றிடத்தும் உரிய வழக்கினகத்துக் கண்டுகொள்க.

* அவை வருமாறு:

இன்மை செப்பல்: யானில்லை, நீயில்லை, அவனில்லை, அவளில்லை, அவரில்லை, அதுவில்லை, அவை யில்லை என வரும்.

* வேறு என் கிளவி: யான்வேறு, நீ வேறு, அவன் வேறு, அவள் வேறு, அவர் வேறு, அது வேறு, அவை வேறு என வரும்.

* செய்ம்மன - யான் செய்ம்மன: நீ செய்ம்மன, அவன் செய்ம்மன, அவள் செய்ம்மன, அவர் செய்ம்மன, அது செய்ம்மன, அவை செய்ம்டின என வரும். (உ அ)

---

* இப்பகுதிகள் சில ஏடுகளில் காணப்படவில்லை.

223. செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
வவ்வகை யோன்பதும் வினையெஞ்சு கிளவி.

224. பின்முன் கால்கடை வழியிடைத் தென்னு
மன்ன மரபிற் காலங் கண்ணிய
என்ன கிளவியு மவற்றியல் பினவே.

இச் சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், வினையெச்சங்களைப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று. இவ்விரண்டு சூத்திரம் உடன் எழுதப்பட்டது உரையியைபு நோக்கி.

உரை: செய்து, செய்யும் என்பது முதலாக ஒன்பதும், பின் முன் என்னுந் தொடக்கத்தன ஆறும், ஆக இவை பதினைந்தும் வினையெச்ச வினைச்சொல் என்றவாறு.

வினையை ஒழிபாக நிற்றலின் வினையெச்சம் எனப் பட்டன.

இனி, 'என்ன கிளவியும்' என்றதனான், உண்பான் வந்தான், உண்பாக்கு வந்தான் எனப் பிறவும் இவ்வாறு வருவன கொள்க.

செய்தெனெச்சம் முன்வைத்தார் இறந்த காலத்ததாதலானும் பலவீற்றதாகலானும் என்பது. (உகூ, ங௦)

225. அவற்றுள்
முதனிலை மூன்றும் வினைமுதல் முடிபின.

இச் சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், முதற்கணின்ற மூன்றெச்சத்திற்கும் முடிபு கூறுதல் நுதலிற்று.

உரை: அம்முதற்கண் நின்ற மூன்றும் அவ்வினையாக்கி அம் முதல்கொண்டு முடியும் என்றவாறு.

வரலாறு: உழுது வந்தான், உண்ணூ வந்தான், நகுபு வந்தான் எனத் தத்தம் வினைமுதல்கொண்டு முடிந்தவாறு.

உண்ணூ வந்தான் என்பது இப்பொழுது வழக்கினுள் உண்ணுவந்தான் என நடக்கும். (௩௧)

226. அம்முக் கிளவியுஞ் சினைவினை தோன்றிற்
சினையொடு முடியா முதலொடு முடியினும்
வினையோ ரனைய வென்மனார் புலவர்.

இச்சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், அம் மூன்றன் திறத்துப் படுவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: அவை மூன்றும் ஏற்ற வினைமுதலானே முடியுமெனப்பட்டன; சினைப்பொருளது வினையெச்சமாய்க் காலச் சினைச்சொற் பொருணிற்ப, அச்சினைப் பொருளது முதல்கொண்டு முடியினும் அமையும் என்றவாறு.

வரலாறு: கையிற்று வீழ்ந்தான், கையிறா வீழ்ந்தான், கையிறுபு வீழ்ந்தான் எனவரும்.

'முதலொடு முடியினும்' என்ற உம்மை சிறப்பும்மை; அதனால், சினையொடு முடிதலே வலியுடைத்து என்பதூஉமாம்.

அது, கையிற்று வீழ்ந்தது, கையிறா வீழ்ந்தது, கையிறுபு வீழ்ந்தது என வரும். (௩௨)

227. ஏனை யெச்சம் வினைமுத லானு
மான்வந் தியையும் வினைநிலை யானுந்
தாமியன் மருங்கின் முடியு மென்ப.

இச் சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், ஒழிந்து நின்ற வினையெச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : அக்கூறப்பட்ட மூன்றுமன்றி, ஒழிந்து நின்ற வினையெச்சமாயினவெல்லாம், அம்மூன்று போலத் தம்தம் வினைமுதல்கொண்டு முடிதலும் அவ்விடத்தின் வந்து பொருந்திய பிறவினையான் முடிதலும் உடைய என்றவாறு.

இனி, அவை வினைமுதலானே முடியுமாறு : மழை பெய்தென வளம் பெற்றது; மழை பெய்யப் பயிர் எழுந்தது என வரும். பிறவும் அன்ன.

இனி ஆன்வந்து இயையும் வினைநிலையான் முடிவன வருமாறு : மழை பெய்தென வுலகமார்ந்தது, மரங் குழைத்தது எனவரும். பிறவும் அன்ன.

இனித், 'தாமியன் மருங்கின்' என்றதனால், உழுது வருதல், உழுது வந்தென என வினையெச்சம் தொழிற் பெயரொடு முடிதலும் முடிக என்றுகொள்க.

மற்று, ஏனையெச்சங் கொடாதே ஈண்டு இலேசு காட்டுவதெனின், 'தானியன் மருங்கின்' என்னாது, 'தாமி-யன் மருங்கின்' என்றதனான், அது முதனிலை மூன்றெச்-சங்களும் தொழிற்பெயரொடு முடிதலும் முடிக என்றற்-குச் சொல்லப்பட்டது. (௩௩)

228 பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி
சொன்முறை முடியா தடுக்குந வரினு
முன்னது முடிய முடியுமன் பொருளே.

இச்சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், இன்னும் அவ் வெச்சங்கடிறத்தே படுவதொரு முடிபுகூறுதல் நுதலிற்று.

உரை: பல எச்சம் உடனடுக்கிவந்து பின் இறுதிக்-கண் ஒன்றற்கேற்ற முடிபு ஏற்றக்கால் அதனால் அவ் வெச்சமெல்லாம் முடிந்த பொருளவாகி முடிபுகொள்ளும் என்றவாறு.

வரலாறு: உழுதுண்டு தின்றோடிப் பாடி வந்தான் என வரும். இஃது ஓரினத்து எச்சம் பல அடுக்கி வந்தது. அவற்றுள், பாடி என்பது வந்தான் என்னும் முடிபுகொண்டு முடிந்தது; அம்முடிபே அவ்வடுக்கிநின்ற பிறவெச்சங்கட்கும் முடிபாயிற்று என்றவாறு.

எனவே, அது முடியாக்கால் ஒழிந்த எச்சங்கள் முடியா என்பதாம்.

இனிப், பலவினத்து எச்சம் அடுக்கிவருமாறு வழக்கினகத்துக் கண்டுகொள்க. (௩௪)

**229. நிலனும் பொருளுங் காலமுங் கருவியும்**
**வினைமுதற் கிளவியும் வினையு முளப்பட**
**வவ்வறு பொருட்குமோ ரன்ன வுரிமைய**
**செய்யுஞ் செய்த வென்னுஞ் சொல்லே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், செய்யும் செய்த என்னப்பட்ட இரண்டு பெயரெச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: சொல்லப்பட்ட ஆறு சொல்லொடு முடியும் அவ்விரண்டெச்சம் என்பது.

அவற்றுள் செய்யும் என்பது பல்லோர்படர்க்கை, முன்னிலை, தன்மை யொழித்தொழிந்த நான்குபாற்கண் வருமாறு ஈண்டுக் காட்டுதும். ஒழிந்தனவும் மேல்வருகின்ற சூத்திரத்தாற் பெறுதும்.

நிலன்: அவன் உண்ணும் இல்லம், அவள் உண்ணும் இல்லம், அது உண்ணும் இல்லம், அவை உண்ணும் இல்லம் என வரும்.

பொருள்: அவன் செய்யும் பொருள், அவள் செய்யும் பொருள், அது செய்யும் பொருள், அவை செய்யும் பொருள் என வரும்.

காலம் : அவன் ஓதுங் காலை, அவள் ஓதுங் காலை, அது ஓதுங் காலை, அவை ஓதுங் காலை என வரும்.

கருவி : அவன் எறியுங் கல், அவள் எறியுங் கல், அது எறியுங் கல், அவை எறியுங் கல் என வரும்.

வினைமுதற் கிளவி: உண்ணும் அவன், உண்ணும் அவள், உண்ணும் அது, உண்ணும் அவை என வரும்.

வினை : அவன் உண்ணும் ஊண், அவள் உண்ணும் ஊண், அது உண்ணும் ஊண், அவை உண்ணும் ஊண் என வரும்.

இனிச், செய்த என்பது மூன்றிடத்தொடுஞ் சிவணி, ஐந்துபாற்கும் உரித்து.

அது வருமாறு : அவன் உண்ட இல்லம், அவள் உண்ட இல்லம், அவர் உண்ட இல்லம், அது உண்ட இல்லம், அவை உண்ட இல்லம் என வரும்

ஒழிந்த பொருளும் காலமும் கருவியும் வினைமுதற் கிளவியும் வினையும் இவ்வாறு ஒட்டிக் கொள்க.

மற்று, மேற் செய்த என்பது முடிபு கூறப்படாமையின், அதற்கே கூறுக; செய்யும் என்பதற்கு முடிபு ஈண்டுக் கூறியது என்னை யெனின், செய்யும் என்பது மேல் முற்றுச் சொல்லாய் நின்ற நிலைமை நோக்கிக் கூறினார்; ஈண்டு எச்சமாய் நின்ற நிலைமை நோக்கிக் கூறுகின்றார் என்பது.

மற்று, முற்றுச் சொல்லாய் நின்ற நிலைமையும், எச்சமாய் நின்ற நிலைமையும் தம்முள் வேற்றுமையறியுமாறு என்னை? இரு நிலைமைக்கண்ணும் பெயர்கொண்டு முடிதல் ஒக்கும் பிறவெனின், செய்யும் என்பது முற்றாய நிலைமைக்கண், பல்லோர்படர்க்கை, முன்னிலை, தன்மை ஒழித்தொழிந்த நான்கு பாலையும் தன் ஈற்றகத்துக்கண்

ஒரு வாற்ருற்கொண்ட அப் பெயரானே யமைந்து முடிபு மாறும்; அஃது எச்சமாய நிலைமைக்கண் முடிபாய்வரும் பெயர்க்கு அடையாய் நிற்கும். எனவே, எச்சமான நிலைமைக்கண் முடிபாக வரும் பெயர் பயனிலைசெப்பலும் உருபேற்றலும் உடையவாயிற்று. (௩௫).

## 230. அவற்ருெடு வருவழிச் செய்யுமென் கிளவி முதற்கண் வரைந்த மூவீற்று முரித்தே.

இச்சூத்திரம் என்னுதலிற்ருே வெனின், செய்யும் என நின்றதற்கு வேருேர் முடிபு தெரிந்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை: செய்யும் என்னுஞ்சொல் மேற்சொல்லப்பட்ட நிலத்தொடக்கத்து ஆறனெடு வருவழி மேல்வரைந்தோதப் பட்ட பல்லோர்படர்க்கை முன்னிலை தன்மைகளையுங் கொண்டுமுடியும் என்றவாறு.

மேல் முற்ருய் நின்ற நிலை விலக்கினர் ஆண்டு; ஈண்டு எச்சமாய் நின்ற நிலைமைக்கணுயின் அவ்விடங்கட்கு உரித்-தென்றே யெய்துவித்தார் என்பது.

வரலாறு: நிலம் — யான் உண்ணும் இல்லம், யாம் உண்ணும் இல்லம், நீ யுண்ணும் இல்லம், நீயிர் உண்ணும் இல்லம், அவர் உண்ணும் இல்லம் என வரும். ஒழிந்த பொருள் முதலாயின ஐந்தையும் இவ்வாறே ஒட்டிக்-கொள்க. (௩௬)

## 231. பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும் எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா.

இச்சூத்திரம் என்னுதலிற்ருே வெனின், எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

உரை: பெயரெச்சம் வினையெச்சம் என்று கூறப்பட்ட இருதிறத்தவும் எதிர்மறுத்துச் சொல்லினும் தம் பொருணிலைமையிற் றிரியா என்றவாறு.

வரலாறு: உண்ணுஞ் சாத்தன் என்பது; உண்ணாச் சாத்தன் என்பதற்கும் அதுவே; பிறிதில்லை.

இனி வினையெச்சம்: உண்டு வந்தான் என்பது, உண்ணாது வந்தான் என வரும். பிறவும் இவ்வாறே எதிர் மறுப்ப என்பது ஒட்டிக் கொள்க.

மற்று, முற்றுச் சொல், உண்பன் சாத்தன் என்புழி, உண்ணான் சாத்தன் என எதிர்மறுப்பினும், முற்றுச் சொல் லியல்பிற்றிரியா தாகலின், அதற்குக் கூறுக எனின், அற்றன்று, முற்றுச் சொற்களை யெல்லாம் ஈறுபற்றி ஓதினாராகலின் எதிர்மறையும் ஆண்டே யடங்கும்.

பெயரெச்ச வினையெச்சங்களையாயின் செய்து செய்யூ எனவும், செய்யும் செய்த எனவும் அவைதம்மை யெடுத்தோதினர். அவற்று மறை பிறவாகொல்லோ என்று கருதினுங் கருதற்க என்றற்குக் கூறப்பட்டது என்பது. (௩௭)

232. தத்த மெச்சமொடு சிவணுங் குறிப்பி
னெச்சொல் லாயினு மிடைநிலை வரையார்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இன்னும் அவ் வெச்சங்கட்கு முடிபு வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: இவ்விருவகை யெச்சத்திடையும் பிறசொற்களும் புகுதப்பெறும், அவ்வெச்சத்திற்கு வழிப்பொருத்தமுடையனதாம் எச்சமல்லாதன என்பது.

வரலாறு: 'உப்பின்று புற்கை யுண்கமா கொற்கையோனே' என்புழி, இன்றி என்னும் வினையெச்சத்திற்கு முடிபு உண்க என்னும் வியங்கோட்சொல்; இனிப், புற்கை யென்பது இடைநிலை.

இனிப், பெயரெச்சத்திற்கு உதாரணம்: அடுஞ் செந்நெற் சோறு, அட்ட செந்நெற் சோறு என்புழி, செந்நெல் என்பது இடைநிலை. பிறவும் அன்ன.

'சிவணுங் குறிப்பின் எச்சொல் லாயினும் இடைநிலை வரையார்' என, சிவணுக் குறிப்பின வரையப்படும் என்பதாம். (௩௮)

233. அவற்றுட்
செய்யு மென்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
மெய்யொடுங் கெடுமே யீற்றுமிசை யுகர
மவ்விட னறித லென்மனார் புலவர்.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், அவ்வெச்சங்களுள் செய்யும் என்னும் பெயரெச்சத்திற்குப் படுவதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: செய்யும் என்னும் பெயரெச்சத்திற்கு ஈற்றுமிசை உகரம் மெய்யொடுங் கெடுமிடம் அறிக வழக்கினகத்து என்றவாறு.

வரலாறு: 'வாவும் புரவி' என்பது, 'வாம் புரவி' என்றாயிற்று.

'அவ்விடனறிதல்' என்றதனான், 'அம்ப லூரு மவனொடு மொழிமே' என்புழி, மொழியும் என்பது மொழிம் என்றாயிற்று. மெய்யொழிந்து கெடுதலும் உடைத்து: அது, 'சார னாடவென் னோழியுங் கலுழ்மே'—என்புழிக், கலுழும் என்பது கலுழ்ம் என்றாயிற்று. பிறவும் அன்ன. (௩௯)

234. செய்தெ னெச்சத் திறந்த கால
மெய்திட னுடைத்தே வாராக் காலம்.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், காலவழுக் காத்தல் நுதலிற்று.

உரை : இறந்த காலத்துச் செய்தெனெச்சம் ஒழிந்த நிகழ்காலமும் எதிர்காலமும் கொள்வழியுடைத்து என்றவாறு.

வரலாறு: செய்தெனெச்சம் நிகழ்காலத்திற்கு ஏற்றது, கொடியாடித் தோன்றும் என்பது; என்னை? தோற்றமும் ஆட்டமும் உடனிகழுமாகலின் என்பது.

இனி, உழுதுவருஞ் சாத்தன், உண்டுவருஞ் சாத்தன் என்புழிச் செய்தெனெச்சம் எதிர்காலத்திற்கு ஏற்றது. பிறவும் அன்ன. (சo)

235. முந்நிலைக் காலமுந் தோன்று மியற்கை
எம்முறைச் சொல்லு நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், ஒருசார் வினைச் சொற்கெல்லாம் பொதுவாயதோர் காலமுடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : மூன்று காலமும் புலப்படச் சொல்லாப் பாட்டியல்பினவாகிய எவ்வகைப் பொருள்களையும் நிகழுங் காலத்துப் பயின்று மூன்று காலத்திற்கும் பொதுவாகிய செய்யும் என்னுஞ் சொல்லாற் சொல்லுக என்றவாறு.

வரலாறு : மலைநிற்கும், யாறொழுகும் எனவரும். (சக)

236. வாராக் காலத்து நிகழுங் காலத்து
மோராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி
யிறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள வென்மனார் புலவர்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் வினைச் சொற்குப் பொதுவாயதோர் முடிபுணர்த்துதல் நுதலிற்று.

உரை: எதிர் காலத்துப் பொருளையும் நிகழ்காலத்துப் பொருளையும் இறந்த காலத்துப் பொருளவாகச் சொல்லுக, விரைவு நிலைமைக்கண் என்றவாறு.

வரலாறு: சோறு வேவவிருந்து பாணியாநின்றுழிப் புறத்தானொருவன் போகவேண்டுங் குறைப்பொருட்டாக, 'இன்னும் உண்டிலையோ? போதாயோ?' என்றக்கால், 'உண்டேன், போந்தேன்' என்னும் உண்ணுதிருந்தானே யெனினும்; 'உண்டேன், போந்தேன்' என்னும் உண்ணு-நின்றானே யெனினும். பிறவும் அன்ன. (சஉ)

**237.** மிக்கதன் மருங்கின் வினைச்சொற் சுட்டி
யப்பண்பு குறித்த வினைமுதற் கிளவி
செய்வ தில்வழி நிகழுங் காலத்து
மெய்பெறத் தோன்றும் பொருட்டா கும்மே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் கால வழுஉக்காத்தல் நுதலிற்று.

உரை: மிக்கதன் மருங்கின் என்பது—உலகத்தாராற் சிறந்ததென்று மதிக்கப்பட்டதன்கண் என்றவாறு; வினைச்சொற் சுட்டி என்பது — வினையாகிய சொல்லைச் சுட்டி என்றவாறு; அப்பண்பு குறித்த என்பது — ஆண்டை வினையது பயனாகிய குணத்தைக் குறித்த என்றவாறு; வினைமுதற் கிளவி என்பது — அச் செய்கை செய்தானை நுதலின சொல் என்றவாறு; செய்வதில்வழி என்பது — செய்கை முடியாத நிலைமைக்கண் என்றவாறு; நிகழுங் காலத்து மெய்பெறத் தோன்றும் பொருட்டாகும்மே என்பது — அது நிகழுங் காலத்துச் சொல்லுஞ் சொற் பிழையாது என்றவாறு.

வரலாறு: அறஞ்செய்தான் சுவர்க்கம்புகும்; தாயைக் கொன்றான் நிரயம்புகும் என வரும். அறம் என்பது

மிக்கதொன்று, அதனை யாக்கினன் அவ்வுழிச் சேறல் ஒருதலையாகலாற் புகுகின்றாரைக் கண்டான் போலப், 'புகும்' என்று நிகழுங்காலத்தாற் சொல்ல அமையும் என்பது. (சரு)

**238. இதுசெயல் வேண்டு மென்னுங் கிளவி**
**யிருவயி னிலையும் பொருட்டா கும்மே**
**தன்பா லானும் பிறன்பா லானும்.**

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், முற்றுச் சொற் பொருள்படும் முறைமை யுணர்த்துதல் நுதலிற்று.

உரை: இது செயல் என்னும் வாய்பாட்டுச் சொல் சொல்லப்படும் ஒருவன்மேல் நிற்கற்பாலது; அது பிற-வயின் நோக்கிய நிற்கும் என்றவாறு.

வரலாறு: சாத்தன் ஓதல்வேண்டும் என்றக்கால், ஓதற்-றொழில் வேண்டுவான் சாத்தன் என்று மன்னுகற்பாலது. அவ்வாறன்றிச் சாத்தன் ஓதல் வேண்டும்; யார்? தந்தை தாய் எனவும் நிற்கும் என்பது. (சச)

**239. வன்புற வரூஉம் வினாவுடை வினைச்சொ**
**லெதிர்மறுத் துணர்த்தற் குரிமையு முடைத்தே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் வினைச் சொற்படும் பகுதி வேற்றுமை உணர்த்துதல் நுதலிற்று.

உரை: வன்புறவரூஉம் என்பது—திட்பஞ்செய்தற்கு வரூஉம் என்றவாறு; வினாவுடை வினைச்சொல் என்பது — ஆ, ஏ, ஓ என்னும் வினையினையுடைத்தாய் வருஞ் செய்கைச் சொல் என்றவாறு; எதிர்மறுத்து உணர்த்தற்கு உரிமையும் உடைத்தே என்பது — மறுதலைப்பட உணர்த்துதற்கு உரிமையும் உடைத்து என்றவாறு.

வரலாறு: ஒருவனை ஒருவன், 'வைதேனோ?' என்று வையாமையை வலியுறுத்தற்கு வினயக்கால், அது, 'வைதேன்' என்று நோவுபடும் என்றவாறு.

உம்மை யெதிர்மறை யாகலான், வைதிலேன் என்றும் நோவுபடும் சிறுபான்மை. (சுரு)

## 240. வாராக் காலத்து வினைச்சொற் கிளவி இறப்பினு நிகழ்வினுஞ் சிறப்பத் தோன்றும் இயற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் கால வழூஉக்காத்தல் நுதலிற்று.

உரை: எதிர்காலத்துச் செயற்கைச்சொல் இறந்த காலத்தையும் நிகழ்காலத்தையுங் கொள்ளும், இயற்கைக் கண்ணும் தெளிவின்கண்ணும் சொல்லுமிடத்து என்றவாறு.

இயற்கை என்பது அதன்மேற் றீமை. தெளிவு என்பது ஒரு நூன்முடிபானும் பிறிதானும் கண்டுதெளிதல்.

வரலாறு: இக்காடு போகிற் கூறைகோட்பட்டான்; கூறை கோட்படும். இஃது இயற்கை.

இனித் தெளிவு: எறும்பு முட்டைகொண்டு தெற்றி யேறின் மழை பெய்தது; மழை பெய்யும் என்பது.

'சிறப்பத் தோன்றும்' என்பது, அவ்விரு காலத்தானுஞ் சொல்லப் பிழையாது, யாப்புற்றுப் புலப்படும் என்றவாறு. (சசு)

## 241. செயப்படு பொருளைச் செய்தது போலத் தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் ஒருவகை வழூஉச்சொல் அமைந்தமை நுதலிற்று.

உரை : வினைக்கட் செய்கையிருச் செய்யப்பட்ட பொருளைத் தான் செய்கை செய்ததுபோல அதற்குத் தொழிற் கூறலும் உண்டு, வழக்கடிப்பட்ட மரபிலக்கணம் என்றவாறு.

வரலாறு : இல்லம் மெழுகிற்று, சோறு அட்டது என வரும். (சஎ)

**242. இறப்பே யெதிர்வே யாயிரு காலமுஞ்
சிறப்பத் தோன்று மயங்குமொழிக் கிளவி.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் கால வழுக் காத்தல் நுதலிற்று.

உரை : இறந்த காலமும் எதிர்காலமும் தம்முள் மயங்கி வரப்பெறும் என்றவாறு.

வரலாறு : யாம் பண்டு விளையாடுவது இக்கா; பண்டு என்பது இறந்த காலம், விளையாடுவது என்பது எதிர் காலம். விளையாடிற்றென்றுமன் ஆகற்பாலது; அஃது எதிர்காலமும் கொண்டது, விளையாடுவது என்று; முன்னும் இறந்தகாலமும் எதிர்காலமும் நிகழ்காலமும் எல்லாம் மயங்குமாறு சொல்லிவைத்தார், இனி உடன் ருகையாக வுணர்த்தியவாறு. 'சிறப்பத் தோன்றும்' என்பது சாலவுள்ள வழக்கென்பது. (சஅ)

**243. ஏனைக் காலமு மயங்குதல் வரையார்.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இனி ஒழிந்தகால-மும் இறப்பினெடு மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : ஏனைக்காலமும் என்பது — ஒழிந்தகாலமும் என்றவாறு; மயங்குதல் வரையார் என்பது — மயங்கிவரு மரபினை வரையார் இவ்விறப்புக் காலத்தோடு என்றவாறு.

வரலாறு: யாம் பண்டு விளையாடுங்கா; பண்டு என்பது இறந்த காலம், விளையாடும் என்பது செய்யும் என்னும் நிகழ்காலச்சொல் வந்து முடிந்தது. 'வரையார்' என்பது மற்றாசிரியர் என்றவாறு. மூன்று காலமும் மயங்கும் தம்முள் என்பது நேர்ந்தானும் ஆசிரியன். அஃதேயெனின், மூன்று காலமும் அல்லது காலமில்லை; அவை மூன்றும் தம்முண் மயங்குமென்றக்கால், வழூஉவென்ற தில்லையாம் பிறவெனின், அற்றன்று, எவ்வாற்றானும் மயங்கா மூன்று காலமும், மேற்காட்டின உதாரண முடிபுபோல்வன படுவழி வழக்கிற்கு ஏற்றவாறு மயங்கும், அன்ன வழக்கு உள்வழி என்பது. (சகூ)

ஆறாவது வினையியல் முற்றிற்று.

ஏழாவது

## இடையியல்

---

**244.** இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலுந் தமக்கியல் பிலவே.

என்பது சூத்திரம்.

இவ் வோத்து என்ன பெயர்த்தோ வெனின், இடையியல் என்னும் பெயர்த்து.

இச் சூத்திரம் இடைச் சொற்கெல்லாம் பொதுவாயதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

'அது மன்' [புறம் - 147] என்பது பெயரொடு நடைபெற்றது.

'தமக்கியல்பிலவே' என்றதனுன், இடைச் சொற்கள் பகவின்றியே நின்றிசைப்பனவும் உள என்றவாறு.

வரலாறு : உண்டான் என்னுந் தொடக்கத்தன. (க)

**245.** அவைதாம்
புணரிய னிலையிடைப் பொருணிலைக் குதநவும்
வினைசெயன் மருங்கிற் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயி னுருபா குநவு

மசை நிலைக் கிளவி யாகி வருநவு
மிசை நிறைக் கிளவி யாகி வருநவுந்
தத்தங் குறிப்பிற் பொருள்செய் குநவு
மொப்பில் வழியாற் பொருள்செய் குநவுமென்
றப்பண் பினவே நுவலுங் காலை.

வரலாறு :

புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக் குதவுவன :

'இன்னே வற்றே' [எழுத்து. புணரி - 17] என்னுந் தொடக்கத்தன.

வினைசெயல் மருங்கில் காலமொடு வருவன :

'அன் ஆன்' — 'அம் ஆம்' — [சொல். வினையி - 8, 5] என்னுந் தொடக்கத்தன.

வேற்றுமைப் பொருள்வயின் உருபாவன :

'ஐ, ஒடு, கு, இன், அது, கண், விளி' [சொல். வேற்றுமை - 3] என்னுந் தொடக்கத்தன.

அசைநிலைக் கிளவி :

'கேண்மியா', 'கண்டிகும்' [புறம் - 251] என்னுந் தொடக்கத்தன.

மற்றையன முன்னே விரிக்கின்றார். (உ)

246. அவைதாம்
முன்னும் பின்னு மொழியடுத்து வருதலுந்
தம்மீறு திரிதலும் பிறிதவ ணிலையலு
மன்னவை யெல்லா முரிய வென்ப.

வரலாறு:

பெயரை முன்னும் பின்னும் அடுத்து வருவன :

'அதுமன்' — 'கொன்னூர்' [குறுந் - 138] என்பன.

வினையை முன்னும் பின்னும் அடுக்குமாறு :

'வருகதில் லம்மவெஞ் சேரி சேர' [அகம் - 276]

'ஓ தந்தார், ஓ கொண்டார்' என்பன.

தம்மீறு திரிந்தவை :

'கொன்னை' 'மன்னை' [சொல். இடை-6, 4] என்பன.

பிறிதவணிலையிற்று :

'மகவினை' என்பது. (ரு)

## 247. கழிவே யாக்க மொழியிசைக் கிளவியென் றம்மூன் றென்ப மன்னைச் சொல்லே.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இடைச்சொற்களை ஏழுவகையென விரித்தார்; அவற்றுள் மூன்றுவகை மேலே யுணர்த்தி, ஒழிந்த நான்கு வகையும் தத்தங் குறிப்பிற் பொருள்செய்குநவற்றை விரிப்பான் றொடங்கினார்; அது கருத்து.

வரலாறு :

'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே' [புறம் - 235]

எனக் கழிவின்கண் வந்தது.

'பண்டு காடுமன், இனிக் கயல் பிறழும் வயலாயிற்று' என ஆக்கத்தின்கண் வந்தது.

'கூரியதோர் வாண்மன்' - இனி இற்றென்றானும்...... ஒருசொல்லை ஒழிவுபட வந்தமையின் ஒழியிசை என்பது.

## 248. விழைவே கால மொழியிசைக் கிளவியென் றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே.

வரலாறு :

'வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப்
பெறுகதில் லம்ம யானே' [குறுந். - 14]

இது விழைவின்கண் வந்தது.

'பெற்ருங் கறிகதில் லம்மலிவ் வூரே' [குறுந் - 14]
இது காலம்பற்றி வந்தது.

'வருகதில் லம்மவெஞ் சேரி சேர' [அகம் - 276]
என்பது, வந்தக்கால் இன்னதொன்று செய்வல் என்னும் சொல் ஒழிந்துநின்றமையான் ஒழியிசைக்கண் வந்தது.

யாதானும் ஒருசொல் ஒழிவுபட வரின் அஃது ஒழியிசை எனப்படும் என்றவாறு. (ரு)

## 249. அச்சம் பயமிலி காலம் பெருமையென் றப்பா ணுன்கே கொன்னைச் சொல்லே.

வரலாறு :

'கொன்முனை யிரவூர் போலச்
சிலவா குகநீ துஞ்சு நாளே' [குறுந் - 91]

என்பது அச்சத்தின்கண் வந்தது.

'கொன்னே வந்தது,
கொன்னே போயினுர்'

என்பது பயமின்றி வந்தது.

'கொன்வரல் வாடை நினதெனக் கொண்டேனே'

என்று, நலியுங்காலை யறிந்து வந்த வாடை என்றவாறு; இது காலத்தின்கண் வந்தது.

'கொன்னூர் துஞ்சினு மியாந்துஞ் சலமே' [குறுந் - 138]
என்பது பெருமைக்கண் வந்தது. (சு)

## 250. எச்சஞ் சிறப்பே யைய மெதிர்மறை முற்றே யெண்ணே தெரிநிலை யாக்கமென் றப்பா லெட்டே யும்மைச் சொல்லே.

வராலறு :

'சாத்தனும் வந்தான்' என்ருல், அவனை யன்றிப் பிறரையும் வரவு விளக்குமாகலின், அஃது எச்சவும்மை.

'தேவரே தின்னினும் வேம்பு கைக்கும்'[நாலடி-மெய்ம்மை-2] என்பது சிறப்பும்மை.

'குறவரும் மருளுங் குன்றத்துப் படினே' [மலைபடு - 275] என்பதும் அது.

'பத்தானும் எட்டானும்' என்பது துணியாமைமேல் நின்றமையான், ஐயத்தின்கண் வந்தது.

'கொற்றன் வருவதற்கும் உரியன்' என்பது, வாராமையும் செப்பிநிற்குமாகலின் எதிர்மறையும்மையாயிற்று.

'தமிழ்நாட்டு மூவரும் வந்தார்' என்பது முற்றும்மை.

'நிலனும் நீரும் தீயும் வளியும்' என்பது எண்ணும்மை.

'நன்றும் அன்று, தீதும் அன்று, இடைநிகர்த்தாயிற்று' என்பது தெரிநிலையும்மை.

இடைநிகர்த்தாயினமை தெரிந்தொழிந்தனம், அவ்விரண்டும் அத்துணைத்து ஒழியநின்றிலாமையின்.

'நெடியனும், வலியனும்' என்பது, ஆயினன் என்னும் ஆக்கத்துக்கண் வந்தது ஆக்கவும்மை. (எ)

251. பிரிநிலை வினாவே யெதிர்மறை யொழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
யிருமூன் றென்ப வோகா ரம்மே.

வரலாறு:

பிரிநிலை: அவனே கொண்டான் என்பது.

வினா: அவனோ அலனோ என்பது.

எதிர்மறை: யானோ கொண்டேன் என்பது.

ஒழியிசை: கொளலோ கொண்டான் என்பது, கோடற்குத் தகுமாயினுங் கொண்டுய்யப் போயினானல்லன் என ஒழிவுபட வந்தமையின் ஒழியிசை யாயிற்று.

தெரிநிலை : 'நன்றோ? அன்று; தீதோ? அன்று. இடை நிகர்த்தாயிற்று' என்பது.

சிறப்பு :

'ஒஒ பெரியன்'

என்பது. (அ)

252. தேற்றம் வினாவே பிரிநிலை யெண்ணே
யீற்றசை யிவ்வைந் தேகா ரம்மே.

வரலாறு :

தேற்றம் : 'அவனே கொண்டான்' என்பது.

வினா: 'நீயே கொண்டாய்?' என, வினாவிச் சொல்வது.

பிரிநிலை : 'அவனே கொண்டான்' என்பது; பலருள் ஒருவனைப் பிரித்துச் சொல்வது.

எண் : 'நிலனே, நீரே, தீயே, வளியே, ஆகாயமே' என வரும்.

ஈற்றசை :

'கடல்போற் றோன்றல காடிறந் தோரே' [அகம் - 1.]

என வரும் ஈற்றின்கண் என்றவாறு. (கூ)

253. வினையே குறிப்பே யிசையே பண்பே
யெண்ணே பெயரொ டவ்வறு கிளவியுங்
கண்ணிய நிலைத்தே யெனவென் கிளவி.

வரலாறு :

வினை : 'கொள்ளெனக் கொண்டான்' என்பது.

குறிப்பு : 'விண்ணென விசைத்தது' என்பது;

'துண்ணெனத் துடித்தது' என்பதும் அது.

இசை : 'ஒல்லென ஒலித்தது' என்பது.

பண்பு : 'வெள்ளென விளர்த்தது' என்பது.

எண் : 'நிலனென வளியென' என வரும்.

பெயர் : 'ஊரெனப்படுவது உறையூர்' என வரும்;

'நாடெனப்படுவது சோணாடு' என்பதும் அது.

## 254. என்றென் கிளவியு மதனோ ரற்றே.

வரலாறு :

வினை : 'கொள்ளென்று கொண்டான்' என்பது.

குறிப்பு : 'விண்ணென்று விசைத்தது' என்பது;

'துண்ணென்று துடித்தது' என்பதும் அது.

இசை :

'ஒல்லென்று ஒலிக்கும்' [ஐந்திணையைம் - 28]

என்பது.

பண்பு : 'வெள்ளென்று விளர்த்தது' என்பது.

எண் : 'நிலனென்று வளியென்று' என வரும்.

பெயர் : 'ஊரென்று சொல்லப்படுவது உறையூர்' என்பது. (கக)

## 255. விழைவின் றில்லை தன்னிடத் தியலும்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேல் தில் என்னும் இடைச்சொல் மூன்றன்பொருட்கும் உரித்தென்று போந்தார்; அவற்றுள் விழைவின்றில்லை தன்மை யிடத்திற்கே ஆவது.

வரலாறு :

'பெறுகதில் லம்ம யானே' [குறுந் - 14]

என வரும்.

எனவே, மற்றைய இரண்டும் எல்லாவிடத்துக்கும் உரிய என்றவாறும். (கஉ)

256. தெளிவி னேயுஞ் சிறப்பி னேவு
　　மளபி னெடுத்த விசைய வென்ப.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேற் கூறிப் போந்த ஏகார ஓகாரங்களின் வேறுபாடு கண்டு, ஈண்டு உணர்த்துதல் நுதலிற்று.

வரலாறு :

'நீயேஎ கொண்டாய்' 'ஓஒ பெரியன்' என வரும். ()

257. மற்றென் கிளவி வினைமாற் றசை நிலை
　　யப்பா லிரண்டென மொழிமனார் புலவர்.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேல் தத்தங் குறிப்பிற் பொருள்செய்குவன உணர்த்தினார்; இனி மற்று என்பதோர் இடைச்சொல் வினைமாற்றும் அசைநிலையு-மாய் வரும் என்பது உணர்த்துகின்றார்.

வரலாறு :

'இஃது உண்' என்றாற்கு, 'மற்று உண்பல்' என, வினைமாற்று ஆயிற்று.

யாவரோடாயினுஞ்சொல்லாடாநின்று 'மற்றோமற்று' என்னும் இடையே ; அஃது அசைநிலைக் கட்டுரை. (கச)

258. எற்றென் கிளவி யிறந்த பொருட்டே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் தத்தங் குறிப்பிற் பொருள்செய்குவனவற்றின்மேல் உணர்த்து-தல் நுதலிற்று.

உரை : எற்று என்பது இறந்தபொருள் விளங்கி நிற்கும் என்றவாறு.

வரலாறு :

'எற்றேன் னுடம்பி னெழினலம்'

என வரும்.

'எற்றேற்ற மில்லாருள் யானேற்ற மில்லாதேன்'

என்பதும் அது. இஃது இரக்கப் பொருள் மேற்று என்பது. (கரு)

**259.** மற்றைய தென்னுங் கிளவி தானே
சுட்டுநிலை யொழிய வினங்குறித் தன்றே.

பல பொத்தகம் கிடந்தவழி, ஒருவன் ஏவலாளனைப் பார்த்துப், 'பொத்தகங் கொண்டுவா' என்றால், அவன் ஒரு பொத்தகங் கொண்டுவந்தவிடத்துத் தான் கருதிய பொத்தகம் அன்றெனில், 'மற்றையது கொணு' என்னும்; என்றக்கால், இக்கொணர்ந்ததனை யொழிக்குஞ் சொல் இக் கொணர்ந்த பொத்தகம் சுட்டிற்றாகலான், கொணர்ந்-ததனை ஒழிக்குஞ் சுட்டுநிலை அதனை யொழித்து ஒழிந்த-தென்று அவ்வினத்தல்லது பிறிதொன்று குறித்தது கொல்லோ எனிற் குறியா; மற்று அப் பொத்தகத்துள் பின்னுங் குறித்தது எனப்படும். (கசு)

**260.** மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்.

வரலாறு :

'கார்மன்ற என்பவள் கண்ணுள்ளே காதலர்
தேர்மன்றத் தோன்றிய'

என்றக்கால், தெளிந்தாள் அவள் என்றவாறு. (கஎ)

**261.** தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே.

வரலாறு :

'ஏனோரோ தஞ்சம் இருபிறப்பி னோர்க்கும்
வாழ்தல் அரிது' (கஅ)

262. அந்தி லாங்க வசைநிலைக் கிளவியென்
றுயிரண் டாகு மியற்கைய வென்ப.

இதுவும் தத்தம் குறிப்பிற் பொருள் செய்குவனவற்றையும் அசைநிலையையும் உணர்த்துதல் நுதலிற்று.

வரலாறு:

இடஞ்சுட்டி வந்தது:

'வருமே, சேயிழை யந்திற் கோழூஉற் காணிய' [குறுந்-293]
என வரும்.

அசைநிலை:

'அந்தில் கச்சினன் கழலினன்' [அகம் - 76]
என வரும். (கக)

263. கொல்லே யையம்.

வரலாறு:

இது, 'குற்றி கொல்லோ, மகன் கொல்லோ, நாய் கொல்லோ, நரி கொல்லோ' என வரும். (உ0)

264. எல்லே விளக்கம்.

வரலாறு:

இது,

'எல்வளை' [புறம் - 24]
என வரும். (உக)

265. இயற்பெயர் முன்ன ராரைக் கிளவி
பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே.

உரை: இது, ஆர் என்னும் இடைச்சொல் பெயர்முன் அல்லது வாரா என்பது.

வரலாறு :

'அரசனர் வந்தார்; பார்ப்பார் வந்தார்' எனவரும்.

இனி விலங்கின்மேலும், 'யானையார் வந்தார்; நாயார் வந்தார்' என வரும்.

'பெயர்முன் ஆரைக் கிளவி பலர்க்குரி எழுத்தின் வினையொடு முடித்தல் இயல்பல' என எல்லாப் பெயரும் அடங்க மொழிமாற்றி உரைக்க. (உஉ)

**266. அசை நிலைக் கிளவி யாகுவழி யறிதல்.**

வரலாறு :

இது, 'செல்ல மன்னர் நெடுந்தகை' எனவரும். (உ௩)

**267. ஏவுங் குரையு மிசைநிறை யசைநிலை
யாயிரண் டாகு மியற்கைய வென்ப.**

உரை : ஏ - இசைநிறை; குரை - அசைநிலை என நிரனிறையாகக் கொள்க.

வரலாறு :

'ஏஎ வம்பல் மொழிந்தனம் யாமே'

ஏ - இசைநிறை யாயினவாறு.

'பல்குரைத் துன்பங்கள் சேன்று படும்' [குறள். நல்குரவு-5]

எனக் குரை அசைநிலை. (உச)

**268. மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்.**

வரலாறு :

இது,

'மாயக் கடவுட் குயர்கமா வலனே'

உயர்க என்னும் வியங்கோட்கண் மா என்னுஞ் சொல் அசைநிலையாய் வந்தது. (உரு)

**269. மியாயிக மோமதி யிகுஞ்சின் னென்னு
மாவயி னாறு முன்னிலை யசைச்சொல்.**

உரை : முன்னிலைக்கண் அசைச் சொல்லாய் வருவன இவை என்றவாறு.

வரலாறு :

மியா : 'கேண்மியா.'

இக :

'தண்டுறை யூரயாங் கண்டிக'

மோ :

'காமஞ் செப்பாது கண்டது மொழிமோ' [குறுந் - 2]

மதி :

'சென்மதி பெரும'

இகும் :

'மெல்லம் புலம்ப கண்டிகும் யாமே'

சின் :

'காப்பும் பூண்டிசிற் கடையும் போகல்' [அகம் - 7]

(உசு)

**270. அவற்றுள்
இகுமுஞ் சின்னு மேனை யிடத்தொடுந்
தகுநிலை யுடைய வென்மனார் புலவர்.**

வரலாறு :

இகும், தன்மைக்கண் வருமாறு :

'கண்டிகு மல்லமோ கொண்க' [ஐங்குறு - 121]

என வரும்.

படர்க்கை :

'புகழ்ந்திகு மல்லளோ பெரிதே'

என வரும்.

சின், தன்மைக்கண் வருமாறு :

'கண்ணும் படுமோ வென்றிசின் யானே' [நற்றிணை - 61]

என வரும்.

படர்க்கைக்கண் வருமாறு :

'யாரஃ தறிந்திசி னோரே' [குறுந் - 18]

என வரும். (உஎ)

## 271. அம்ம கேட்பிக்கும்.

வரலாறு :

'அம்ம வாழி தோழி' [ஐங்குறு - 31]

என்றவழி, அது கேளாய் வாழி தோழி என்றவாறும். ()

## 272. ஆங்க வுரையசை.

உரை : ஆங்க என்னும் இடைச் சொல்லதோர் கட்டுரைத் தொடர்பினிடை, அசைப்பொருள் படவரும் என்றவாறு.

வரலாறு :

'ஆங்கக்
குயிலு மயிலுங் காட்டிக்கோள
விவண விடுத்துப் போக்கியோள்'

என வரும். (உகூ)

## 273. ஒப்பில் போலியு மப்பொருட் டாகும்.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேல் இடைச் சொல் எழுவகைய என்று நிறுத்தவற்றுள் ஒப்பில்போலி என்னும் இடைச்சொல் உணர்த்துதல் நுதலிற்று.

ஒப்பில்போலி யாவது, ஒப்பில்லாதவழி ஒப்பித்த வாசகம் பட வருவது என்பது.

வரலாறு :

'மங்கலம் என்பதோர் ஊருண்டுபோலும் மழநாட்-டுள்' என ஒப்பில்லாதவழிப் போலும் என்னும் இடைச்-சொல் வந்தவாறு. (௩௦)

274. யாகா
பிறபிறக் கரோபோ மாதென வரூஉ
மாயேழ் சொல்லு மசைநிலைக் கிளவி.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், அசைக்கும் இடைச்சொற்களைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

வரலாறு :

'யா பன்னிருவர் உளர்போலும் மாணாக்கர் அகத்தி-யனார்க்கு' என, யா வந்தவாறு காண்க.

கா : 'உதுகா' என வரும்.

பிற: 'அதுபிற, இதுபிற, உதுபிற' எனப்பிற வந்தவாறு.

'அது பிறக்கு'

எனப் பிறக்கு வந்தவாறு.

'கோடியுவணத்தவரோ'

என அரோ வந்தவாறு.

'பிரியேன் வாழேன் போதெய்ய'

எனப் போ வந்தவாறு;

'நீர்போ நேரிகை புகன்'

என்பதும் அது.

'விளிந்தன்று மாதவத்தெளிந்தவென் னெஞ்சம்' [நற்றி-178]

என மாது வந்தவாறு. (௩௧)

**275. ஆக வாக லென்ப தென்னு**
**மாவயின் மூன்றும் பிரிவி லசை நிலை.**

வரலாறு :

'நீ இன்னை, இனையை' என்று ஒருவனை யொருவன் ஒன்று சொல்லுமிடத்து, அமையும் அமையும், 'ஆகவாக' என்னும்; அவ்விடத்து, ஆக என்னும் இடைச்சொல் பிரிவின்றி இரட்டித்து நின்றவாறு கண்டுகொள்க.

'யான் உனக்கியாதும் ஆகேனோ?' என்றக்கால், 'ஆகலாகல்' என்பது; அவ்விடத்து, ஆகல் என்னும் இடைச்சொல் பிரிவின்றி வந்தவாறு காண்க.

ஒருவனை யொருவன் ஒன்று சொன்னால், கேட்டு நின்றான் ஒருவன், 'என்பதென்பது' என்னும்; அது புகழ்ச்சி யிடத்துப் பயிற்சி உடைத்து; அறிந்து கொள்க. (௩௨)

**276. ஔஎன வரூஉ மிடைச்சொற் கிளவி** 

**276. ஔஅள பிசைக்கு மிறுதியி லுயிரே**
**யாயிய னிலையுங் காலத் தானு**
**மளபெடை நிலையுங் காலத் தானு**
**மளபெடை யின்றித் தான்வருங் காலையு**
**முளவென மொழிப** பொருள்வேறு படுதல்
**குறிப்பி னிசையா னெறிப்படத்** தோன்றும்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், ஔ என்னும் இடைச்சொல் மூன்றுவகையாற் பொருள்படும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

வரலாறு :

ஆயியல் நிலையுங் காலத்தால் வருதலாவது, மேற் கூறிய மூன்றும்போல் வருதல்.

ஒன்று உரைக்குங்கால் இரட்டித்து, 'ஔ, ஔ' என வரும்.

அளபெடை நிலையுங்காலத்தால் வந்து, அது பொருள் படுமாறு :

'ஔஉ' என வரும்.

யாதானும் ஒரு துன்புறவின்கண் அளபெடையின்றித் தான் வருமாறு :

'ஔ' என ஒரு குறிப்புப் பொருட்கண் வருவது என்றவாறு.

இம் மூன்றுபொருட் பகுதியும் குறிப்பினன் வேறு படுத்து அறிந்துகொள்க. (நடந)

**277. நன்றீற் றேயு மன்றீற் றேயு**
**மந்தீற் றோவு மன்னீற் றோவு**
**மன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளும்.**

இதுவும் சொல்லுதற் குறிப்பினல் பொருள் வேறுபடும் இடைச்சொற்களை உணர்த்துதல் நுதலிற்று.

வரலாறு :

நன்றீற்று ஏ : 'நன்றே நன்றே' என வரும்.

அன்றீற்று ஏ : 'அன்றே அன்றே' என வரும்.

அந்தீற்று ஓ : 'அந்தோ அந்தோ' என வரும்.

அன்னீற்று ஓ : 'அன்னோ அன்னோ' என வரும். (நச)

**278. எச்ச வும்மையு மெதிர்மறை யும்மையுந்**
**தத்தமுண் மயங்கு முடனிலை யிலவே.**

உரை : எச்ச வும்மையும் எதிர்மறை யும்மையும் தத்தமுள் மயங்கும் உடனிலையிலவே என்பது — தம்முள் மயங்கி உடனிற்குந் தன்மை யில என்றவாறு.

வரலாறு :

'சாத்தனும் வந்தான், கொற்றனும் வரும்' என்பது எச்சவும்மை; அதனைச் சாத்தனும் வந்தான், கொற்றனும் வரலுமுரியன் என எதிர்மறை யும்மையொடு கூட்டிச் சொல்லப்படாது என்றவாறு. (௩௫)

## 279. எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயிற் பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்.

உரை: எஞ்சுபொருட் கிளவி என்பது—எச்சவும்மை என்றவாறு; செஞ் சொல் ஆயின் என்பது — செவ்வெண்ணாயின் என்றவாறு; பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல் என்பது — காலமுன்னாகச் சொல்லார் இடமுன்னாகச் சொல்லுவார் என்றவாறு.

வரலாறு :

'அடகுபுலால் பாகு பாளிதமு முண்ணான்
கடல்போலுங் கல்வி யவன்'

என்பதனுள், அடகு புலால் பாகு என்று செவ்வெண்ணாலே எண்ணிப், பின்னைப் பாளிதமும் என்று எச்சவும்மையை இடமுன்னாக்கி வைத்து எண்ணினவாறு கண்டுகொள்க. (௩௬)

## 280. முற்றிய வும்மைத் தொகைச்சொன் மருங்கி னெச்சக் கிளவி யுரித்து மாகும்.

வரலாறு :

'பத்தும் கொடான்' என்றக்கால், எல்லாம் கொடான் என்றுமாம்.

'தொகைச்சொல்' என்றதனான், எல்லாங்கொண்டாம், கொண்டார் என்றும்; எல்லாரும் வாரார் என்றும், வருவர் என்றும் கொள்ளப்படும்.

எச்சவும்மை ஒழிவுப்பொருளை உடைத்தானதுபோல, முற்றும்மையும் ஒழிவுப் பொருள்பட வரும் என்று கொள்க. (நூஎ)

**281. ஈற்றுநின் றிசைக்கு மேயெ னிறுதி
கூற்றுவயி னோரள பாகலு முரித்தே.**

உரை : மேற் சொல்லப்பட்ட ஐந்து ஏகாரத்துள்ளும் ஈற்றசை ஏகாரம் ஓரளபாம் என்றவாறு.

வரலாறு :

'கடல்போற் றோன்றல காடிறந் தோரே' [அகம் - 1]

என வரும்.

உம்மை எதிர்மறையாகலின் குறையாது நிற்றலே பெரும்பான்மை. (நூஅ)

**282. உம்மை யெண்ணு மெனவெ னெண்ணுந்
தம்வயிற் றொகுதி கடப்பா டிலவே.**

வரலாறு :

'நிலனும் நீரும் தீயும் வளியும் வெளியும் நல்ல'

எனினும் அமையும்; தொகை கொடுத்து எண்ணினும் ஆம்.

எனவென் எண்ணிற்கும் தொகை கொடுத்தும்கொடாதும் சொல்லி உம்மையெண்போல ஒட்டிக்கொள்க. (நூகூ)

**283. எண்ணே கார மிடையிட்டுக் கொளினு
மெண்ணுக்குறித் தியலு மென்மனார் புலவர்.**

உரை : எண்ணேகாரம் இடை நின்று ஒழிந்த எண்ணுல் வந்தனவற்றையும், ஏகாரவெண்ணுல் எண்ணினவே என்றவாறு.

ஏகாரம் எண்ணிடையே நின்றது எனினும், எண்ணி வருகின்ற எண்ணேயாம் என்றுமாம் எனக் கொள்க.

வரலாறு :

'தோற்ற மிசையே நாற்றஞ் சுவையே
உறலோ டாங்கைம் புலனென மொழிப'

இதனுள், செவ்வெண் ஒடாநின்றே ஏகாரவெண் இடையே புகுந்தவாறு கண்டுகொள்க. (சo)

**284. உம்மை தொக்க வெனாவென் கிளவியு**
**மாவீ றாகிய வென்றென் கிளவியு**
**மாயிரு கிளவியு மெண்ணுவழிப் பட்டன.**

வரலாறு :

உம்மைதொக்க எனா என் கிளவி வருமாறு :

'நிலனெனா, நீரெனா, தீயெனா, காலெனா' என வரும்.

ஆ.வீறாகிய என்றேன் கிளவி :

'நிலனென்று, நீரென்று, தீயென்று, வளியென்று' என வரும். (சக)

**285. அவற்றின் வரூஉ மெண்ணி னிறுதியும்**
**பெயர்க்குறி மரபிற் செவ்வெ ணிறுதியு**
**மேயி னாகிய வெண்ணி னிறுதியும்**
**யாவயின் வரினுந் தொகையின் றியலா.**

வரலாறு :

எனா : 'சாத்தனெனா, கொற்றனெனா, பூதனெனா, அம் மூவரும் வந்தார்' என, எனா என்னும் எண்ணினிறு-திக்கண் மூவரும் எனத் தொகைகொடுத்து எண்ணின-வாறு கண்டுகொள்க.

'சாத்தன், கொற்றன், பூதன் என மூவரும் வந்தார்' என வரும் செவ்வெண்.

'சாத்தன் என்று, கொற்றன் என்று, பூதன் என்று என மூவரும் வந்தார்' என வரும் என்று எண்.

'சாத்தனே, கொற்றனே, பூதனே என மூவரும் வந்தார்' என வரும் ஏகார எண்.

தொகைபெற்று முடிந்தவாறு கண்டுகொள்க. (சஉ)

**286. உம்மை யெண்ணி னுருபுதொகல் வரையார்.**

வரலாறு :

'யானையும் தேரும் ஆளும் எறிந்தார்' என்பது, யானையையும் தேரையும் ஆளையும் எறிந்தார் என்றவாறு ; உம்மையெண்ணின்கண் உருபுதொக்கவா றாயிற்று. (சஙு)

**287. உம்முந் தாகு மிட னுமா ருண்டே.**

வரலாறு :

'நீர்க்கோழி கூப்பெயர்க் குந்து' [புறம் - 395]

என்பது.

எட்டு வகைப்பட்ட உம்மையும் ஒரும்மை எனப் படாது, வினைசெய் மருங்கிற் காலமொடு வந்தது. (சச)

**288. வினையொடு நிலையினு மெண்ணுநிலை திரியா**
**நினையல் வேண்டு மவற்றவற் றியல்பே.**

என்பது, எண்மேலே யெண்களைக் காட்டின வழியெல்லாம் பெயரொடுபடுத்தே காட்டினர் ; இனி, வினையோடு அவ்வெண்களைக் காட்டுகின்றார் :

வரலாறு :

'அறுத்துக் குறைத்துச் சுகிர்ந்து வகிர்ந்து இட்டான்' எனச் செவ்வெண் வினையான் எண்ணினவாறு, அறுத்தும் குறைத்தும் சுகிர்ந்தும் வகிர்ந்தும் இட்டான் என உம்மை யெண் வினையொடு கூட்டி எண்ணினவாறு.

பலவெண்ணும் வினைக்கு வாரா ; வருமிடத்து இத் தொடக்கத்தனவே வருவன கொள்க.

'மண்டில மழுங்க மலைநிறங் கிளர
வண்டின மலர்பாய்ந் தூத மீமிசைக்
கண்டற் கானற் குருகின மொலிப்ப' [அகம் - 260]

என, வினையொடுகூடிச் செவ்வெண் வந்தவாறு.

'நினையல்வேண்டும்' என்பது, அவ்வெண்களெல்லாம் தொகைபெற்றே நடக்கும் என்றவாறு.

'சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான், வேடன் வந்தான், அம்மூவரும் வந்தார்; அம்மூவரும் வந்தமையாற் கலியாணம் பொலிந்தது' எனத் தொகைபெற்று வந்தவாறு. (சரு)

**289. என்று மெனவு மொடுவுந் தோன்றி**
**யொன்றுவழி யுடைய வெண்ணினுட் பிரிந்தே.**

வரலாறு :

'உயர்திணைப் பெயரே யஃறிணைப் பெயரென்
றாயிரண் டென்ப' [தொல். எழுத்து. புணரியல் - 15]

என்புழி, என்று என்பதனை முன்னுங் கூட்டி யுரைக்க.

'கண்ணிமை நொடியென வவ்வே மாத்திரை'
[தொல். எழுத்து. நூன்மரபு - 7]

என்புழி, என என்பதனை முன்னுங் கூட்டி யுரைக்க.

'நிலனே நீரே தீயே வளியே
யாகா யத்தோ டைந்தே பூதம்'

என்புழி, ஒடுவினை எங்குங் கூட்டி யுரைக்க. (சசு)

**290. அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென**
**மெய்பெறக் கிளந்த வியல வாயினும்**
**வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்**
**திரிந்துவேறு படினுந் தெரிந்தனர் கொளலே.**

மேல் ஓதப்பட்ட சொற்கள் கூறப்பட்ட இலக்கணத்தவன்றிப் பிறபொருள்பட்டு வருப வுளவேனும் கொள்க,

வரலாறு :

'சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ' [அகம் - 46]

என்புழி, ஒகாரம் ஈற்றசையும் ஆயிற்று.

'கலங்கொண்டன கள்ளென்கோ
காழ்க்கொண்டன சூடென்கோ'

என, ஒகாரம் எண்ணோகாரம் ஆயிற்று.

'ஓர்கமா தோழியவர் தேர்மணிக் குரலே' [அகம் - 273]

மா முன்னிலை அசைச்சொல் ஆயிற்று, வியங்கோட்கு ஓதிய அசைச்சொல்.

'அதுமற் கொண்கன் றேரே'

என்புழி, மன் அசைச்சொல் ஆயிற்று. (சஎ)

**291. கிளந்த வல்ல வேறுபிற தோன்றினுங்
கிளந்தவற் றியலா னுணர்ந்தனர் கோளலே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இவ்வோத்திற்கெல்லாம் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

**உரை :** இது மேற்சொல்லப்பட்டன அன்றி வரும் இடைச்சொல்லும் கொள்ளப்படும் என்றவாறு.

அவை : காரம், கரம், கான், ஆனம், ஏனம், ஓனம் எனவும் ;

மாள, மன், ஆர், தெய்ய எனவும் வரும்.

புறனடை என்பது நூலுள்ளே தொகாதவற்றைப் பாதுகாத்து நூற்கு முட்டாகாமை உணர்தற்பொருட்டாக வைத்து உரைப்பது. (சஅ)

ஏழாவது இடையியல் முற்றிற்று.

எட்டாவது

## உரியியல்

---

292. உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
யிசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றிப்
பெயரினும் வினையினு மெய்தடு மாறி
யொருசொற் பல்பொருட் குரிமை தோன்றினும்
பலசொல் லொருபொருட் குரிமை தோன்றினும்
பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்த மரபிற் சென்றுநிலை மருங்கி
னெச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்.

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோ வெனின், உரிச்சொல் உணர்த்தினமையின் உரிச்சொல் ஒத்து என்னும் பெயர்த்து.

இத் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், உரிச்சொற்கெல்லாம் பொதுவாயதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: உரிச்சொற்கள் தோன்றுமிடத்து இசையும் குறிப்பும் பண்பும் பற்றிப் பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் சென்று பொருள்களை விளக்கும் என்றவாறு.

மெய் என்பது பொருள்; தடுமாறுதல் என்பது பெயர்பற்றியும் வினைபற்றியும் வரும் வரவினை நோக்கி; அவ்வாறு தடுமாறுங்கால் ஒரு சொல் பல்பொருட்கு உரிமைப்பட்டுத் தடுமாறுதலும், பலசொல் ஒருபொருட்கு உரிமைப்பட்டுத் தடுமாறுதலும் உடைய. அவை அவ்வாறு தடுமாறித் தோன்றுதல் அவற்றிற்கு இலக்கணம்; அவ்வாறு தோன்றுங்கால் பயிலாத உரிச்சொற்களைப் பயின்ற உரிச்சொல்லோடு சார்த்தி உணரப்படும். அவ்வாறு சார்த்திச் சொல்லவே எவ்வகைப்பட்ட சொல்லாயினும் பொருள் விளங்கும்.

'உறுகால்' [நற்றிணை - 300]

என்றக்கால், உறு என்பதனை வழக்கினுள்ளாப் பயிலாமையின், 'மிகுகால்' என்று சொல்லுப. மிகு என்பதூஉம் உரிச்சொல், அதனை நடையுள்ளார் பயின்றாராதலான், அங்கிகரனவற்றாற் பொருத்திச் சொல்ல அவை விளங்கித் தோன்றும் என்பது.

இசைபற்றி நிற்பனவற்றிற்கு, 'இசை சென்று நிலை மருங்கு' எனவும்,

குறிப்புப்பற்றித் தோன்றுவனவற்றிற்குத், 'தத்தங் குறிப்புச் சென்று நிலைமருங்கு' எனவும் படும் என்பது.

இசைபற்றித் தோன்றின,

'துவைத்தலும் சிதைத்தலும்' [தொல். உரியியல் - 61]

என்னுந் தொடக்கத்தன.

குறிப்புப்பற்றி வந்தன,

'கறுப்புஞ் சிவப்பும்' [தொல். உரியியல் - 75]

என்னுந் தொடக்கத்தன;

'நிறத்துரு வுரைத்தற்கு முரிய' [உரியியல்-76]

என்றாராகலின், ஆண்டுப் பண்பெனவும் வரும்.

ஒருசொல்லாகப் பலபொருட்கு உரியன,

'கடியேன் கிளவி' [உரியியல் - 86]

என்னுந் தொடக்கத்தன.

பலசொல் ஒருபொருட்கு உரியன,

'உறு தவ நனி' [உரியியல் - 3]

என்னுந் தொடக்கத்தன.

முன்,

'இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியு
மவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப' [பெயரியல் - 5]

என்புழி, நிரனிரை வாய்பாட்டதாகலான், அது நீக்கு-தற்குப், 'பெயரினும் வினையினும் மெய்தடு மாறி' என்றார் என்பது. (க)

## 293. வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா வெளிப்பட வாரா வுரிச்சொன் மேன.

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இருவகைய உரிச்சொல், வெளிப்படுவன எனவும் வெளிப்படாதன எனவும் என. அவற்றுள் வெளிப்பட்ட உரிச்சொற்களது பொருள் சொல்ல வேண்டா; அறிந்த பொருட் பெற்றி-யான் பொருட் செல்லுதல் என்பது உணர்த்தியவாறு.

அவ்வாறு வெளிப்பட்ட உரிச்சொற்களாவன: கலித்-தது, குழைத்தது என்னுந் தொடக்கத்தன.

வெளிப்பட வாராதனவற்றை விரிக்கின்றார். (உ)

**294. அவைதாம்**
**உறுதவ நனியென வரூஉ மூன்று**
**மிகுதி செய்யும் பொருள வென்ப.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், குறிப்புப்பற்றித் தோன்றும் உரிச்சொற்கள் பலவாகலான் அவற்றுப் பகுதி முற்கூறிய தொடங்கினர்.

உரை : இக்கூறப்பட்ட மூன்று உரிச் சொல்லும் மிகுதிப் பொருண்மையை விளக்கும் என்றவாறு.

வரலாறு :

'உறுகா லொற்ற வொல்கி' [நற்றிணை - 300]

என்பது, மிகுகாலொற்ற வொல்கி என்பதாம்.

'தவச்சேய் நாட்டா ராயினும்' [நற்றிணை - 115]

என்பது, மிகச்சேய நாட்டார் என்பதாம்.

'நனிசேய்த் தன்றவன் பழவிறன் மூதூர்'

என்பது, மிகச்சேய்த் தன்றவன் பழவிறன் மூதூர் என்பதாம். (ந)

**295. உருவுட் காகும் புரையுயர் பாகும்.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் குறிப்பு.

வரலாறு :

உருவக் குதிரை' [அகம் - 1]

என்றக்கால், உட்கத்தக்க குதிரை என்பதாம்.

'புரைய மன்ற புரையோர் கேண்மை' [நற்றிணை - 1]

என்பது, உயர்ந்துயர்ந்தோர் கேண்மை என்பதாம். (ச)

**296. குருவுங் கெழுவும் நிறனா கும்மே.**

வரலாறு :

'குருத்துளி பொழிந்தது'

'கேழ்கிளை ரகலத்து' [மதுரைக்காஞ்சி - 493]
என்றக்கால், அவையிரண்டினும் நிறம் சொன்னவாறு. (ரு)

## 297. செல்ல லின்ன லின்னா மையே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் குறிப்பு.

உரை : இவை இரண்டும் நோய்ப் பொருண்மைய ஆகும் என்றவாறு.

வரலாறு :

'மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்லல்' [அகம்-22]
என்புழி, நோய் என்பதாம்;

'வெயில்புறந் தரூஉ மின்ன லியக்கம்' [மலைபடுகடாம்-374]
என்றவிடத்தும் அதுவாம். (சா)

## 298. மல்லல் வளனே யேபெற் றாகும்.

வரலாறு :

'மல்லன் மாமலை'
என்றக்கால், வளனுடைய மாமலை என்பதாம்.

'ஏகலடுக்கம்' [அகம் - 52]
என்றக்கால், பெற்றிய கல்லடுக்கம் என்பதாம். (எ)

## 299. உகப்பே யுயர்த லுவப்பே யுவகை.

வரலாறு :

'நாடுகாண மேன்மே லுகமின்'
என்பது, நாடுகாணிக் கண்மே லேறினன் மேன்மேல் உயர்மின் என்பதாம்.

'உவக்குந ளாயினும் ஊடின ளாயினும்' [அகம் - 203]
என்புழி, உவந்தனளாயினும் என்பதாம். (அ)

## 300. பயப்பே பயனும்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இவை யெல்லாங் குறிப்பு.

வரலாறு :

'ஆண்பயமுந் தூக்கினேன்'

என்புழிப், பயன் கூறியவாறு. (கூ)

## 301. பசப்பு நிறனாகும்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது பண்புபற்றி வந்தது.

வரலாறு :

'பசப்பித்துச் சென்றார்'

என்புழி, நிறம் கூறியவாறு. (க0)

## 302. இயைபே புணர்ச்சி.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவுங் குறிப்பு.

வரலாறு :

'இயைந்தொழுகும்'

என்றக்கால், பொருந்தி யொழுகும் என்பதாம். (கக)

## 303. இசைப்பிசை யாகும்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இஃது இசைபற்றி வந்தது.

வரலாறு :

'இசைந்தொழுகும்'

என்றக்கால், இசையத் தோன்றிவிடும் என்பதாம். (கஉ)

**304. அலமர றெருமர லாயிரண்டுஞ் சுழற்சி.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவுங் குறிப்பு.

வரலாறு :

'அலமரலாயம்' [ஐங்குறு - 64]

என்றக்கால், சுழன்றுவரல் ஆயம் என்பதாம்.

'தெருமரலுள்ளம்'

என்பது, சுழன்று வரும் உள்ளம் என்பதாம். (கங)

**305. மழவுங் குழவு மிளமைப் பொருள.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவுங் குறிப்பு.

வரலாறு :

'குழக்கன்று கடிதியாத்தாள்'

என்றக்கால், இளங்கன்று கடிதியாத்தாள் என்றதாம்.

'மழகளிறு' [புறம் - 38]

என்றக்கால், இளங்களிறு என்றவாறும். (கச)

**306. சீர்த்தி மிகுபுகழ்.**

வரலாறு :

'வயக்கஞ்சால் சீர்த்தி'

என்றக்கால், மிக்கபுகழ் என்பதாம். (௧௫)

**307. மாலை யியல்பே.**

வரலாறு :

'இரவரன் மாலையன்' [குறிஞ்சிப்பாட்டு - 239]

என்றவழி, இரவின் வரும் இயல்பினன் என்றதாம். (கசு)

**308. கூர்ப்புங் கழிவு முள்ளது சிறக்கும்.**

வரலாறு :

'உப்புக் கூர்ந்தது'

'உப்புக் கழிந்தது'

என்பன, சிறப்புச் சொல் லாயவாறும். (கஎ)

**309. கதழ்வுந் துனைவும் விரைவின் பொருள.**

வரலாறு :

'அண்டர்,
கயிறரி யெருத்திற் கதழ்ந் துறைவன்'

என்றக்கால், விரைந்து உறைவன் என்பதாம்.

'துனைபோறை நிவக்கும் புள்ளின் மான'

என்றக்கால், விரைந்து பறக்கும் என்றவாறும். (கஅ)

**310. அதிர்வும் விதிர்ப்பு நடுக்கஞ் செய்யும்.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இவை யெல்லாங் குறிப்பு.

வரலாறு :

'அதிர்கண் முரசம்'

என்றக்கால், நடுங்குகண் முரசம் என்பதாம்.

'விதிர்ப்புற்றுக் கண்ணிமையார்'

என்றக்கால், நடுக்குற்று என்பதாம். (கசு)

**311. வார்தல் போக லொழுகன் மூன்று
நேர்பு நெடுமையுஞ் செய்யும் பொருள.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது பண்புபற்றி வந்தது.

வரலாறு :

'வார்கயிற் றொழுகை' [அகம் - 173]

என்றக்கால், நேர் கயிற்றொழுகை என்பதூஉம், நெடுங் கயிற்றொழுகை என்பதூஉமாம்.

'போகு கொடி'

'ஒழுகு கொடி'

என்புழியும், அவ்விருபொருளும் படும். (உ0)

**312. தீர்தலுந் தீர்த்தலும் விடற்பொருட் டாகும்.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவுங் குறிப்பு.

வரலாறு :

'ஊரிற் றீர்ந்தான்'

என்றக்கால், ஊரிற் பற்றுவிட்டான் என்பதாம்.

'பேய் தீர்த்தான்'

என்றக்கால், பேய் விடுவித்தான் என்பதாம். (உக)

**313. கெடவரல் பண்ணை யாயிரண்டும் விளையாட்டு.**

வரலாறு :

'கெடவர லாயம்'

என்றக்கால், விளையாட் டாயம் என்பதாம்.

'பண்ணைத் தோன்றிய வெண்ணான்கு பொருளும்' [தொல் - மெய்ப்பாட்டி - 1]

என்றக்கால், விளையாட்டுள் தோன்றியபொருள் என்பதாம்.

**314. தடவுங் கயவும் நளியும் பெருமை.**

வரலாறு :

'தடந்தோள்'

'கயவெள் ளருவி' [அகம் - 38]

'நளிமலை நாடன்' [புறம் - 150]

என வரும். (உஙு)

**315.** அவற்றுள்
தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்.

**உரை:** தட என்பது பெருமையே யன்றிக் கோட்டப் பொருளினையும் விளக்கும் என்றவாறு.

வரலாறு:

'தடமருப் பெருமை' [நற்றிணை - 120]

என வரும். (உச)

**316.** கயவென் கிளவி மென்மையுஞ் செய்யும்.

வரலாறு:

'கயந்தலை மடப்பிடி' [நற்றிணை - 137]

என வரும். (உரு)

**317.** நளியென் கிளவி செறிவு மாகும்.

**உரை:** நளி என்னும் சொல் பெருமையே யன்றிச் செறிவுப்பொருளும் படும் என்றவாறு.

வரலாறு:

'நளியிருள்'

என்றக்கால், செறியிருள் என்பதாம்.

மூன்றிடத்து உம்மையும் இறந்தது தழீஇயின. (உசு)

**318.** பழுது பயமின்றே.

வரலாறு:

'பழுதே வந்தார்'

என்றக்கால், பயமின்றியே வந்தார் என்பதாம். (உஎ)

**319.** சாயன் மென்மை.

வரலாறு:

'சாரணுடன் சாயன் மார்பு' [பதிற்றுப் - 16]

என்றக்கால், மெல்லிய மார்பு என்பதாம் (உஅ)

**320. முழுதென் கிளவி யெஞ்சாப் பொருட்டே.**

வரலாறு :

'முழுக்கறை பெய்தான்'

என்றக்கால், எஞ்சாமை பெய்தான் என்பதாம். (உகூ)

**321. வம்பு நிலையின்மை.**

வரலாறு :

'வம்ப வடுகர்' [அகம் - 375]

'வம்ப நாரை' [அகம் - 190]

என்றக்கால், நிலையில்லாமை கூறியவாறும். (௩௦)

**322. மாதர் காதல்.**

வரலாறு :

'மாதர் வண்டோடு சுரும்பிசைத்தது'

என்றக்கால், காதல் வண்டு என்பதாம். (௩௧)

**323. நம்பு மேவு நசையா கும்மே.**

வரலாறு :

'நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி' [அகம் - 198]

என்றக்கால், நச்சி என்பதாம்.

'பேரிசை நவிர மேஎ யுறையும்' [மலைபடு - 82]

என்றக்கால், நயந்து உறையும் என்பதாம். (௩௨)

**324. ஓய்த லாய்த னிழத்தல் சாஅ**
**யாவயி னான்கு முள்ளத னுணுக்கம்.**

வரலாறு :

'ஓய்கலை யொருத்தல்'

என்றக்கால், நுணுகிய கலை யொருத்தல் என்பதாம்.

'கையு மெய்யு மாய்ந் திருந்தார்'
என்றக்கால், சுருங்கி யிருந்தார் என்பதாம்.

'நிழத்த யானை மேய்புலம் படர' [மதுரைக்காஞ்சி - 303]
என்றக்கால், மெலிந்து நுணுகிய என்பதாம்.

'கயலற லெதிரக் கடும்புனற் சாஅய்' [நெடுநல் - 18]
என்றக்கால், சுருங்கி என்பதாம். (௩௩)

## 325. புலம்பே தனிமை.

வரலாறு :

'புலம்புவிட் டிருந்தார்' [மலைபடு - 49]
என்றக்கால், தனிமை துறந்திருந்தார் என்பதாம். (௩௪)

## 326. துவன்று நிறைவாகும்.

வரலாறு :

'ஆரியர் துவன்றிய பேரிசை யிமயம்' [பதிற்றுப் - 11]
என்றக்கால், நிறைந்த மூதூர் என்பதாம். (௩௫)

## 327. முரஞ்சன் முதிர்வே.

வரலாறு :

'கோடுபல முரஞ்சிய கோளி யாலம்' [மலைபடு - 268]
என்றக்கால், முதிர்ந்த ஆலம் என்பதாம். (௩௬)

## 328. வெம்மை வேண்டல்.

வரலாறு :

'நீ வெம்மையள்'
என்றக்கால், நீ வேண்டப்படுவாள் என்பதாம். (௩௭)

## 329. பொற்பே பொலிவு.

வரலாறு :

'அணிகலம் பொற்ப'

என்றக்கால், பொலிய என்பதாம். (௩௮)

## 330. வறிது சிறிதாகும்.

வரலாறு :

'வறிது நெறியோரீஇ'

என்றக்கால், சிறிது நெறி ஓரீஇ என்பதாம். (௩௯)

## 331. ஏற்ற நினைவுந் துணிவு மாகும்.

வரலாறு :

'ஏற்றத் திருந்தார்'

என்றக்கால், நினைத்திருந்தார் என்பதூஉம், துணிந்திருந்தார் என்பதூஉம் ஆம். (௪0)

## 332. பிணையும் பேணும் பெட்பின் பொருள.

உரை : பெட்டல் என்பது புறந்தருதல்.

வரலாறு :

'அரும்பிணை பயக்கற்ற வேட்ட ஞான்று'

என்றக்கால், அரும்புறந்தரு வரவிற்றாகி வேட்டபோழ்து என்பதாம்.

'பேணினே னல்லனோ மகிழ்ந' [அகம் - 16]

என்றக்கால், பெட்டேனல்லனோ மகிழ்ந என்பதாம். (௪௧)

## 333. பணையே பிழைத்தல் பெருப்பு மாகும்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இவை யெல்லாங் குறிப்புச்சொல்.

வரலாறு :

'பணைத்துப்போய் வீழ்ந்தது'

என்றக்கால், பிழைத்துப் போய் வீழ்ந்தது என்பதாம்.

'பணைத்தோள்' [அகம் - 1]

என்றக்கால், பெருந்தோள் என்பதாம். (சஉ)

## 334. படரே யுள்ளல் செலவு மாகும்.

வரலாறு :

'படர்மலி வெற்பர்'

என்றக்கால், உள்ளமலி வெற்பர் என்பதாம்.

'ஆறு படர்ந்தார்'

என்றக்கால், சென்றார் என்பதாம். (சங)

## 335. பையுளுஞ் சிறுமையும் நோயின் பொருள.

வரலாறு :

'பையுணல்யாழ்'

என்றக்கால், நோய் செய்யும் நல்யாழ் என்பதாம்.

'சிறுமை யுறுப செய்பறியலர்' [நற்றிணை - 1]

என்றக்கால், நோயுறுப செய்யார் என்பதாம். (சச)

## 336. எய்யாமை யறியாமை.

வரலாறு :

'எய்யாமையலை' [குறிஞ்சிப் - 8]

என்றக்கால், அறியாமையலை என்றவாறும். (சரு)

## 337. நன்று பெரிதாகும்.

## 338. தெவுக்கொளற் பொருட்டே.

இரண்டு சூத்திரமும் உரை நோக்கி ஒன்று யெழுதப்பட்டது.

வரலாறு :

'நன்றுமரிது துற்றனையாற் பெரும்' [அகம் - 10]

என்றக்கால், பெரிது துற்றனையால் என்பதாம்.

'நீர்தேவு நிரைத்தொழுவர்' [மதுரைக்காஞ்சி - 89]

என்றக்கால், நீர்கொள்ளும் நிரைத்தொழுவர் என்பதாம். ()

**339. தாவே வலியும் வருத்தமு மாகும்.**

வரலாறு :

'கருங்கட் டாக்கலை' [குறுந் - 69]

என்றவழி, வருந்திய கலை என்பதாம்.

'தாவி னன்பொன்' [அகம் - 212]

என்றக்கால், வலியி னன்பொன் என்பதாம்; பொன்னுக்குப் போக்குடைமை வலியது. (சஅ)

**340. தெவ்வுப் பகையாகும்.**

வரலாறு :

'தெவ்வர் தேயத்து'

என்றக்கால், பகைவர் தேயத்து என்பதாம். (சகூ)

**341. விறப்பு முறப்பும் வெறுப்புஞ் செறிவே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இவை யெல்லாங் குறிப்பு.

வரலாறு :

'விறந்த காப்போடு'

என்றக்கால், செறிந்த காப்பொடு என்பதாம்.

'உறந்த விஞ்சி யுயர்நிலை மாடம்'

என்புழி, செறிந்த இஞ்சி என்பதாம்.

'வெறுத்தார்' [புறம் - 53]

என்றக்கால், செறிந்தார் என்பதாம். (ரு0)

**342. அவற்றுள்**
**விறப்பே வெரூஉப் பொருட்டு மாகும்.**

வரலாறு :

'கோடுமுற்றி யளந்த காரோடு விறந்தே'

என்றக்கால், வெரீஇ என்பதாம். (ருக)

**343. கம்பலை சும்மை கலியே யழுங்க**
**லென்றிவை நான்கு மரவப் பொருள.**

இவை இசைபற்றி வந்தன.

வரலாறு :

'ஊர் கம்பலை யுடைத்து'

என்றக்கால், அரவமுடைத்து என்பதாம்;

'ஊர் சும்மை யுடைத்து'

என்பதும் அது ;

'கலிகெழு மூதூர்' [அகம் - 11]

'அழுங்கன் மூதூர்'

என்பனவும் ஒக்கும். (ருஉ)

**344. அவற்றுள்**
**அழுங்க லிரக்கமுங் கேடு மாகும்.**

வரலாறு :

'மகனையிழந் தழுங்கினர்'

என்றக்கால், இரங்கினர் என்பதாம்.

'செலவழுங்கினர்'

என்றக்கால், செலவு கெடுத்தார் என்பதாம்.

இவை குறிப்புப்பற்றி வந்தன. (ருங)

**345. கழுமென் கிளவி மயக்கஞ் செய்யும்.**

வரலாறு :

'கழுமியஞாட்பு' [களவழி - 11]

என்றக்கால், மயங்கிய ஞாட்பு என்பதாம். (ருச)

**346. செழுமை வளனுங் கொழுப்பு மாகும்.**

வரலாறு :

'செழுஞ் செந்நெல்'

என்றக்கால், வளஞ் செந்நெல் என்பதாம். வளம் என்பது ஆக்கம்.

'செழுந்தடி தின்ற செந்நா யேற்றை'

என்பது, கொழுந் தடி தின்ற என்பதாம்; கொழுப்பு என்பது ஊன்பற்றிய நிணம். (ருரு)

**347. விழுமஞ் சீர்மையு மிடும்பையுஞ் செய்யும்.**

வரலாறு :

'விழுமியர்'

என்றக்கால், சீரியர் என்பதாம்.

'விழுமமுற் றிருந்தார்'

என்றக்கால், இடும்பையுற் றிருந்தார் என்பதாம். (ருசு)

**348. கருவி தொகுதி.**

வரலாறு :

'கருவி வானம் கதழுறை சிதறி' [அகம் - 4]

என்றக்கால், ஈண்டு, மின்னும் முழக்கும் காற்றும் என இத்தொடக்கத்தன வாயிற்று. (ருஎ)

## 349. கமநிறைந் தியலும்.

வரலாறு :

'கமஞ்சூன் மாமழை' [திருமுருகு - 7]

என்றக்கால், நிறைந்த சூன் மாமழை என்பதாம். (௫அ)

## 350. அரியே யைம்மை.

வரலாறு :

'அரிமயிர்த் திரண்முன்கை' [புறம் - 11]

என்றக்கால், ஐம்மயிர்த் திரண் முன்கை என்றவாறும். ()

## 351. கவவகத் திடுமே.

இவை யெல்லாங் குறிப்பு.

வரலாறு :

'கோடும்பூண் கவைஇய கோல மார்பு'

என்றக்கால், கொடும் பூண் அகத்திட்ட கோல மார்பு என்பதாம். (௬0)

## 352. துவைத்தலுஞ் சிலேத்தலு மியம்மலு மிரங்கலு மிசைப்பொருட் கிளவி யென்மனார் புலவர்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இவை நான்கும் இசைபற்றி வந்தன.

வரலாறு :

'வரிவளை துவைப்ப' [புறம் - 158]

என்றக்கால், சங்கு இசைப்ப என்பதாம்.

'கலையினிரலை சிலைப்ப'

என்றக்கால், அதனது குரலிசைப்பைச் சொல்லிற்றும்;

'சிலைக்கும்'

என்பதும் அது.

'இயமர மியம்பும்'

எனவே, ஒலிக்கும் என்பதாம்.

'முரசிரங்கு முற்றம்'

என்றக்கால், இசைக்கும் என்பதாம். (சுக)

**353. அவற்றுள்**
**இரங்கல் கழிந்த பொருட்டு மாகும்.**

உம்மை இறந்தது தழீஇயிற்று.

'உடையதிழந் துயிரிரங்கி யிருந்தார்'

என்றக்கால், கழிவினை விளக்கும், ஈண்டு இரக்கம். (சுஉ)

**354. இலம்பா டொற்க மாயிரண்டும் வறுமை.**

வரலாறு :

'இலம்படு புலவர்' [மலைபடு - 576]

என்றக்கால், வறுமைப்படும் புலவர் என்பதாம்.

'ஊரை யோற்கந் தீர்க்கும்'

என்றக்கால், வறுமை தீர்க்கும் என்பதாம். (சுங)

**355. ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள.**

வரலாறு :

'தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரிய' [நற்றிணை - 143]

என்றக்கால், பரப்பிய என்பதாம்.

'புண்ணுமிழ் குருதிப் புனல் பாய்ந்து'

என்றக்கால், பரந்து என்பதாம். (சுச)

**356. கவர்வுவிருப் பாகும்.**

வரலாறு :

'கோள்வல் மாந்தரி ஞெகிழ்து கவரும்' [அகம் - 3]

என்றக்கால், விரும்பும் என்பதாம். (சுரு)

**357. சேரே திரட்சி.**

வரலாறு :

'சேர்ந்துசேறி குரங்கு

என்றக்கால், திரண்டு செறி குரங்கு என்பதாம். (சுசு)

**358. வியலென் கிளவி யகலப் பொருட்டே.**

வரலாறு :

'வியலிரு வானம்'

என்றக்கால், அகலிரு வானம் என்பதாம். (சுஎ)

**359. பேநா முருமென வருஉங் கிளவி
யாமுறை மூன்று மச்சப் பொருள.**

வரலாறு :

'மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்' [குறுந் - 87]

என்பது, அச்சமுதிர் கடவுள் என்பதாம்.

'நாம்வருந் துறைசேர்ந்து'

என்பது, அச்சமுடைய துறை போந்து என்பதாம்.

'உருமில் சுற்றம்'

என்பது, அச்சமில் சுற்றம் என்பதாம்.

இவை யெல்லாங் குறிப்பு. (சுஅ)

**360. வயவலி யாகும்.**

வரலாறு :

'வாள்வரி வேங்கை வயப்புலி'

என்பது, வலியுள்ள புலி என்பதாம். (சுகு)

**361. வாளொளி யாகும்.**

வரலாறு :

'கண்ணே,
நோக்கி நோக்கி வாளிழந் தனவே' [குறுந் - 44]

என்பது, ஒளி யிழந்தன என்பதாம். (எ0)

**362. துயவென் கிளவி யறிவின் றிரிவே.**

வரலாறு :

'அறிவு துயவுறுத்தார்'

என்பது, அறிவு திரிவுறுத்தார் என்பதாம். (எக)

**363. உயாவே யுயங்கல்.**

வரலாறு :

'பருந்திருந் துயா விளி பயிற்று
மியாவுயர் ஙனந்தலை' [அகம் - 19]

என்றக்கால், உயங்கு விளி பயிற்றி என்பதாம். (எஉ)

**364. உசாவே சூழ்ச்சி.**

வரலாறு :

'நாமுசாக் கொள்ளாமோ'

என்பது, நாம் சூழ்ந்துகொள்ளாமோ என்பதாம். இவை குறிப்பு. (எங)

**365. வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்.**

வரலாறு :

'சூழ்கண்டு வயாவினர்'

என்றவழி, வேட்கை யாயினர் என்பதாம். (எச)

366. கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள.

வரலாறு :

'கறுத்து வந்தார்'

என்பது, வெகுண்டு வந்தார் என்பதாம்.

'சிவந்து நோக்கினர்'

என்பது, வெகுண்டு நோக்கினர் என்பதாம். (எ௫)

367. நிறத்துரு வுணர்த்தற்கு முரிய வென்ப.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், அதுவே யன்றிப் பண்புப்பொருளும் படும் என்றவாறு.

'உடம்பு கறுத்தது'

'கண் சிவந்தன'

என்பன, நிறத்தின் மேலும் செல்லும். (எ௬)

368. நொசிவு நுழைவு நுணங்கு நுண்மை.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இவை பண்பு பற்றி வந்தன.

'நொசி மருங்குல்'

என்பது, நுண்மருங்குல் என்பதாம்;

'நுழை மருங்குல்'

என்பதும் அது ;

'நுணங்கு மருங்குல்'

என்பதும் அது. (எஎ)

369. புனிறென் கிளவியீன் றணிமைப் பொருட்டே.

வரலாறு :

'புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி' [அகம் - 56]

என்பது, ஈன்றணியவாய்ப் பாய்ந்தென என்பதாம். (எ௮)

### 370. நனவே களனு மகலமுஞ் செய்யும்.

வரலாறு :

'நனவுப்புகு விறலியிற் றோன்று நாடன்'

என்றால், களம்புகு விறலியிற் றோன்று நாடன் என்பதாம்.

'நனந்தலை யுலகு' [குறுந் - 6]

என்றக்கால், அகன்றலை யுலகு என்பதாம். (எகூ)

### 371. மதவே மடனும் வலியு மாகும்.

வரலாறு :

'மாதர் வாண்முக மதைஇய நோக்கே'

என்பது, மடம்பட்ட நோக்கு என்பதாம்.

'மதகளிறு'

என்றக்கால், வலிய களிறு என்பதாம். (அ0)

### 372. மிகுதியும் வனப்பு மாகலு முரித்தே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், அவையே யன்றி இவ்விருபொருளும் படும் என்றவாறு.

'மதகளிறு'

என்றக்கால், மிகுகளிறு என்பதூஉம்.

'இளம்பாண்டில்,
தேரூரச் செம்மாந் ததுபோல் மதவினள்'

என்பது, வனப்புடையள் ஆயினள் என்பதாம். (அக)

### 373. புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி.

வரலாறு :

'அரூஅ யாண ரகன்றலை நன்னாடு' [அகம் - 44]

என்றக்கால், அருத புது வருவாயை யுடைய நாடு என்பதாம். (அஉ)

**374. அமர்தன் மேவல்.**

வரலாறு :

'கூழமர்ந் துண்டாள்'

என்பது, கூழைமேவி யுண்டாள் என்பதாம். (அ௩)

**375. யாணுக் கவினும்.**

வரலாறு :

'யாணது பசலை' [நற்றிணை - 50]

என்றக்கால், வனப்பின்கண்ணது பசலை என்பதாம். (அச)

**376. பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள.**

வரலாறு :

'கடவுட் பரவினர்'

என்றக்கால், வழுத்தினர் என்பதாம்.

'கைதொழூஉப் பழிச்சி' [மதுரைக் - 694]

என்றக்கால், வழுத்தி என்பதாம். (அரு)

**377. கடியென் கிளவி**
**வரைவே கூர்மை காப்பே புதுமை**
**விரைவே விளக்க மிகுதி சிறப்பே**
**யச்ச முன்றேற் றுயீ ரைந்து**
**மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் குறிப்பு.

உரை : கடி என்பது இப் பத்துப் பொருளும் படும் என்றவாறு.

வரலாறு :

'ஊர் கடிந்தார்'

என்றக்கால், ஊரை வரைந்தார் என்பதாம்.

'வாள்வாய் கடிது'

என்றக்கால், வாள்வாய் கூரிது என்பதாம்.

'கடி கா' [களவழி - 29]

என்பது, காப்புடைய கா என்பதாம்.

'கடித் தளிர்'

என்பது, புதுத் தளிர் என்பதாம்.

'கடிது வந்தார்'

என்றக்கால், விரைந்து வந்தார் என்பதாம்.

'கடும் பகல்' [கலி - நெய் - 28]

என்றக்கால், விளங்கு பகல் என்பதாம்.

'கடும் புனல்' [குறுந் - 103]

என்றக்கால், மிக்க புனல் என்பதாம்; அது சிறந்த புனல் என்பதூஉமாம்.

'கடுங்கண் யானை'

என்றக்கால், அஞ்சத்தக்க யானை என்பதாம்.

'கடுந்து டருகுவன்' [அகம் - 110]

என்றக்கால், முன்னின்று தேற்றந்தருவன் என்பதாம். ()

## 378. ஐயமுங் கரிப்பு மாகலு முரித்தே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இவ்விரு பொருளும் படுதற்கும் உரித்து என்றவாறு.

வரலாறு :

'கடுத்தன ளல்லளோ வன்னை'

என்றக்கால், ஐயுற்றனள் என்பதாம்.

'கடிமிளகு தின்ற கல்லா மந்தி'

என்றக்கால், கரிப்பார் மிளகு தின்ற என்பதாம். (அஎ)

## 379. ஐவியப் பாகும்.

வரலாறு :

'ஐதே காமம் யானே' [நற்றிணை - 143]

என்றக்கால், வியக்கத்தக்கது என்பதாம். (அஅ)

## 380. முனைவு முனிவாகும்.

வரலாறு :

'சேற்றுநிலை முனைஇய'

என்றக்கால், சேற்றுநிலை முனிந்த என்பதாம். (அகூ)

## 381. வையே கூர்மை.

வரலாறு :

'வையிலை நெடுவேல்'

என்றக்கால், கூரிலைவேல் என்பதாம். (கூ௦)

## 382. எறுழ்வலி யாகும்.

வரலாறு :

'வாளுடை யெறுழ்த்தோள்'

என்றக்கால், வலியுடைத் தோள் என்பதாம். (கூக)

## 383. மெய்பெறக் கிளந்த வுரிச்சொ லெல்லா
## முன்னும் பின்னும் வருபவை நாடி
## யொத்த மொழியாற் புணர்த்தன ருணர்த்த
## றத்த மரபிற் றோன்றுமன் பொருளே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது புறனடை.

உரை : பொருண்மேற் சொல்லப்பட்ட உரிச்சொல் எல்லாவற்றையும் முன்னைச்சொல் பின்னைச்சொல் நோக்கி, அதற்கு இயைந்த மொழி நாடி, அவற்றொடு புணர்த்து

உணர்த்துக. அவ்வாறு உணர்த்தவே தத்தம் மரபிற் றிரியாப் பொருளவாய்த் தோன்றும்; அவ்வாறு தெரிந்து உணராக்கால் கொள்ளாதாம் கருதியபொருள் என்பது.

யாதோ கொள்ளாத வாறெனின்,

'கடியுடை வியனகர்' [புறம் - 95]

என்றக்கால், கடியென்பது கூர்மையும் விரைவும் படுமால் என்று, நகரத்துக்கண் அவை யேற்றற்க; காப்புடை நகர் என்று கொள்க, அதற்கு ஒத்த மொழியாகலின் என்பது. (௩௨)

**384. கூறிய கிளவிப் பொருணிலை யல்லது வேறுபிற தோன்றினு மவற்றொடு கொளலே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் புறனடை.

உரை : சொல்லிப் போந்த உரிச்சொற்கள் அவ்வுரிய-வெனப்பட்ட பொருளின ஆகாது வேறுவேறு பட்ட பொருளினவாய்த் தோன்றினும் அச் சொல்லப்பட்ட பொருளொடு படுத்துப் பொருள்படுமாறு அறிந்துகொள்க என்பதாம்.

'புரைப்பட்ட'

என்புழிப்,புரை என்பது ஈண்டுப் பிள்வுப்பொருண்மையை விளக்கிற்றாகலின், இதனையும் உயர்வுப்பொருண்மையொடு புணர்த்து இருபொருளும் அச்சொற்குப் பொருள் என்று கொள்க என்பதாம். இனிக்,

'கண்கதழ வெழுதினார்'

என்புழி, ஆண்டு விரைந்து எழுதினார் என்று விரைவிற் பொருள் கொள்ளற்க; சிறப்ப எழுதினார் என்று கொள்க. பிறவும் அன்ன. (௩௩)

385. பொருட்குப்பொரு டெரியி னதுவரம் பின்றே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் புறனடை.

உரை: மேற்கூறப்பட்ட உரிச்சொல்லுள் உள்-வன்றே, அப்பொருட்கும் இப்பொருட்கும் உரியவென்று ஓதப்பட்டன. அவை,

'உறு தவ் நனி' [தொல். உரிச் - 3]

என்னுந் தொடக்கத்தன.

மற்று, அவற்றை மிகுதிப் பொருள என்றார். அது-பற்றி மிகுதி யென்னை? என்றாற்கு, ஒன்றுவிடப் பெரிதாக என்பவால் எனின், அதனைக் கேட்டு ஒழியான்; பெரிது எனப்படுவது என்னை ? என்றான்; எனச், சால்வாதல் என்றான்; என்பதனானும் ஒழியான், சாலவாதல் எனப்-படுவது என்னை ? என்றான்; என, எத்துணையும் இறங்-குதல் என்றான்; என, அத்துணையும் என்னை ? என்று இவ்வாறு பிரித்துச் சொற்களால் தெரிபு கூறுமேல் அது வேண்டா என் விலக்கின்வாறு. (கூச)

386. பொருட்குத் திரிபில்லை யுணர்த்த வல்லின்.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது மேற் சூத்திரத்திற்குப் புறனடை.

உரை: உரிச்சொல் பிறிதலது, அது பொருள் உண-ருமாறு வல்லார்க்குப் பிறசொற் கொண்ர்ந்து பொருள் உணர்த்தல் வேண்டா; திரிபின்றி அச் சொல்லினானே உணரப்படும் என்றவாறு.

என்னை, 'உறு' என்ற பதம் மிகுதிப் பொருட்டு என்றக்கால், அம் மிகுதியையும் அதனானே யுணரலாம்; உணருமாறு வல்லார்க்குப் பிறசொற் கொணர்ந்து உரைத்-தல் வேண்டா என்பது. (கூரு)

**387. உணர்ச்சி வாயி லுணர்வோர் வலித்தே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் புறனடை.

யாஞ் சொல்லிய சொல்வாயிலே பற்றி யுணர்த்துக, அத்துணையால் உணர்வார்க்கு அதுவே உணர்ச்சி வாயிலாம்; அல்லாக்கால் அவ்வுணர்வோரை வலித்தாமாற்றால் உணர்த்துக என்பதாம்.

என்னை,

'பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள' [தொல். உரிச் - 85]

என்பதனால் உணராத மடவோரை மற்றொரு வாய்பாட்டால் உணர்த்துக. அல்லாக்கால், மேல் நோக்கிச் சில மலர்கொடு தூவிக்காட்ட வுணருமேல் அஃதே உணர்ச்சி வாயிலாக அறிக என்பது. (கூகூ)

**388. மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் புறனடை.

உரை: மொழிப்பொருள்கள் என்பன அச்சொல்லப்பட்ட பொருள்கள் அப்பொருட்கட்டே என்றவாறும். ()

**389. எழுத்துப்பிரிந் திசைத்த லிவணியல் பின்றே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், புறனடை போல்வதோர் விதி கூறுதல் நுதலிற்று.

உரை: எழுத்துக்கள் பிரிந்திசைக்கப்படா.

உரிச்சொல் என்றவை பிறிதிலக்கணமும் உடைய என்பது போந்ததாம். என்னை பிறிதிலக்கணமெனின்,

'தம்மீறு திரிதலும் பிறிதவ ணிலையலும்'

உடைய இவையும் என்பது.

யாதோவெனின்,

கடியென் கிளவி,

'கடும்புனல்' [குறுந் - 103]

என்றாயிற்று.

நம்பு எனப்பட்டது,

'நம்பி'

என்றாயிற்று. பிறவும் அன்ன.

இனி,

'உருகெழு தோற்றம்'

என்புழி, உரு என்பதூஉம் கெழூஉ என்பதும் உரிச்சொல். (கூஅ)

390. அன்ன பிறவுங் கிளந்த வல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉ
முரிச்சொ லெல்லாம் பொருட்குறை கூட்ட
வியன்ற மருங்கி னினைத்தென வறியும்
வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்
தோம்படை யாணையிற் கிளந்தவற் றியலாற்
பாங்குற வுணர்த லென்மனார் புலவர்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் ஓர் புறனடை.

உரை : அச் சொல்லிப்போந்த உரிச் சொற்களன்றி அவைபோல்வன பிறவும் உலகத்துப் பலவாற்றானும் பரந்து வரும் உரிச்சொல் எல்லாவற்றையும் இசையும் குறிப்பும் பண்பும் என்னும் மூன்று வகைப்பட்ட

பொருளேயுஞ் சார்த்தி யுணர்த்துதற் குறைகூட்ட அம் மூன்று பொருண்மைக்கண்ணும் அவை யித்துணேயே என்று வரையறுக்கும் வரையறை யின்மையின் முன்னர் உரிச்சொற்கு ஓதப்பட்ட இலக்கணத்திற் பிழையாமல் ஓம்படை யாணேயிற் கிளந்தவற் றியலான் உணர்க என்றவாறு.

'ஓம்படை யாணே' என்பது பாதுகாவல்பற்றிய ஆணே.

'அருமை, இருமை, கருமை, சேண்மை என்னுந் தொடக்கத்தனவற்றைப் பிறநூலார்,

'இருமை பெருமையுங் கருமையுஞ் செய்யும்'

என்றும்,

'தோன்றேன் கிளவி தோழிற்பயில் வாகும்'

என்றும் எடுத்தோதுப' என்பதும் அது. (கூகூ)

எட்டாவது உரியியல் முற்றிற்று.

ஒன்பதாவது

## எச்சவியல்

---

391. இயற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வடசொலென
றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே.

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோ வெனின், எல்லா வோத்தினுள்ளும் எஞ்சிய பொருள்களை யுணர்த்தினமை-யின் எச்சவியல் என்னும் பெயர்த்து.

இனி, இத் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இத்துணைப்பட்ட சொல்லினாற் செய்யுள் செய்யப்பெறும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை : இயற்சொல்லும் திரிசொல்லும் திசைச்சொல்-லும் வடசொல்லும் என நான்கும் செய்யுள் செய்தற்-குரிய சொல்லாதல் உடைய என்றவாறு.

இயற்சொல் என்பது தமிழ் வழங்கு நாட்டு விகார-மின்றித் தமிழியற்கை யிலக்கணப்பாடு செவ்வனுடைய சொல்; அவை முன்னர் உணர்த்துப.

திரிசொல் என்பது செய்யுளின்ப நோக்கி அவ்வியற் சொற்களை அவ்வாய்பாடு திரித்து வேறு வாய்பாட்ட-வாக்குஞ் செய்யுளுடைய சொல்.

என்னை,

'சேரிச் சொல்லின் முட்டுற லஞ்சிச்
செய்யுட்குப் புலவர் செய்துகொண் டன்றே'

என்பது * புறச் சூத்திரம்.

அவைதாம் வழக்கினுள் இன்மை காரணம் அமைதல் என்பவாகலின், அவையும் முன்னர் உணர்த்துப.

திசைச்சொல் என்பது செந்தமிழ் நாட்டை அடை-யும் புடையுங் கிடந்த திசைநாட்டார் வழங்குஞ் சொல்; அவையும் முன்னர் உணர்த்துப.

வடசொல் என்பது ஆரியச் சொற்போலுஞ் சொல்; அவை முன்னர் விரித்துரைப்ப.

பெயர், வினை, இடை, உரி எனப்பட்ட நான்கு சொல்லுமே இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வட-சொல் எனப்பட்டன; பிறவில்லை.

திரிசொல் செய்யுட்கே உரிய. ஒழிந்த மூன்றும் வழக்கிற்குரியவாகிச் செய்யுட்கும் புகும் என்றவாறு. (க)

392. அவற்றுள்
இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாஅமை யிசைக்குஞ் சொல்லே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேல் நிறுத்த முறையானே இயற்சொல்லை யின்னவென்று இலக்கண முறைமையாற் பகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

---

* 'பரிமாணச் சூத்திரம்' பிரதிபேதம்.

உரை: மேற் சொல்லப்பட்ட நான்கு சொல்லுள்ளும் இயற்சொல் என்று கூறப்படுவன செந்தமிழ் நிலத்தார் வழங்கும் வழக்கத்திற்குப் பொருந்தித் தத்தம் பொருளின் வழாமல் நடக்குஞ்சொல் என்றவாறு.

அவை: சோறு, கூழ், பால், பாளிதம் என்னுந் தொடக்கத்தன.

செந்தமிழ் நிலம் என்பது வையையாற்றின் வடக்கு, மருதயாற்றின் தெற்கு, கருவூரின் கிழக்கு, மருவூரின் மேற்கு. மற்று, இவற்றைத் தம் பொருள் வழாஅமை யிசைக்கும் என்பது என்னை? ஒழிந்தன தம் பொருள் வழுவுமோ எனின், ஆற்றன்று, நாயை ஞமலி என்ப பூழி நாட்டார், என்றக்கால் அச் சொல் எல்லா நாட்டாரும் பட்டாங்குணரார்; நாய் என்பதனையாயின் எவ்வெத்திசை நாட்டாரும் உணர்ப என்பது. (உ)

## 393. ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும் வேறுபொருள் குறித்த வோருசோல் லாகியு மிருபாற் றென்ப திரிசொற் கிளவி.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், முறையானே திரிசொல் இவை என்று இலக்கணத்தாற் பகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ஒரு பொருளைக் கருதிப் பலசொல்லான் வருதலும், பலபொருளைக் கருதி ஒருசொல்லான் வருதலும் என இருகூற்றனவாகும் திரிசொற்கள் என்றவாறு.

ஒரு பொருளைக் குறித்த வேறு சொல்லாகி வருவன, அடுக்கல், பிறங்கல், விண்டு, ஓங்கல் என இவை.

வேறு பொருள் குறித்த ஒருசொல், உந்தி என்பது; ஆற்றிடைக்குறையும், கொப்பூழும், தேர்த்தட்டும், யாழகத்தஉறுப்பும் (மனஞெழிலும்) என இவை யெல்லாம் விளங்கி நிற்கும்.

இனி, கிள்ளை, மஞ்ஞை என்னுந் தொடக்கத்தன ஒருகூறு நிற்ப ஒருகூறு திரிந்தன; உந்தி, அடுக்கல் என்னுந் தொடக்கத்தன முழுவதூஉம் வேறுபடத் திரிந்தன. பிறவும் அன்ன. (௩)

## 394. செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தினுந் தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே திசைச்சொல் இவை என இலக்கணத்தால் பகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை : செந்தமிழ் நாட்டை அடையும் புடையுங் கிடந்த பன்னிரு நிலத்தார்தங் குறிப்பினையே இலக்கணமாகவுடைய, திசைச்சொற் கிளவிகள் என்றவாறு.

வரலாறு :

தாயைத் தள்ளை என்ப குடநாட்டார்.

நாயை ஞமலி என்ப பூழிநாட்டார்.

பிறவும் அன்ன.

சேந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலமாவன :

1. பொதுங்கர்நாடு
2. தென்பாண்டிநாடு
3. ஒளிநாடு
4. குட்டநாடு
5. பன்றிநாடு
6. கற்காநாடு
7. சீதநாடு
8. பூழிநாடு
9. மலைநாடு
10. அருவாநாடு
11. அருவாவடதலைநாடு
12. குடநாடு *

என இவை.

* சில பிரதிகளில் இது வெற்றிடமாக விடப்பட்டுளது.

'தங்குறிப்பினவே' என்றது அவை ஒருவாய்பாட்டவே யல்ல ; தத்தம் மரபினும் பின் வேறு வேறு வாய்பாட்ட என்றற்கும், அவர் எவ்வாறு குறித்து வழங்கினுரோ அஃதே அவற்றிற்கு இலக்கணம் என்றற்கும் என்பது.(௪)

**395. வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ**
**யெழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே.**

இச்சூத்திரம் நிறுத்த முறையானே வடசொல் இவை என்றவற்றிற்கு இலக்கணத்தான் அறிய உணர்த்துதல் நுதலிற்று.

உரை : வடசொற் கிளவி என்று சொல்லப்படுவது ஆரியத்திற்கே உரிய எழுத்தினை ஒரீஇ இருதிறத்தார்க்கும் பொதுவாய எழுத்தினை யுறுப்பாக வுடையவாகுஞ் சொல் என்றவாறு.

அவை, உலகம் குங்குமம் நற்குணம் என்னுந் தொடக்கத்தன.

குங்குமம் என்றவிடத்து இருசார்க்கும் பொது எழுத்தினுன் வருதலுடைமையும் ஆரியத்தானும் தமி-ழானும் ஒருபொருட்கே பெயராகி வழங்கி வருதலுடை-மையும் அறிக. (ரு)

**396. சிதைந்தன வரினு மியைந்தன வரையார்.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் வட சொற்கிளவி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : இருசார் எழுத்திற்கும் ஒத்த வழக்கினுன் வாராது சிதைந்து வந்தனவாயினும் பொருந்தி வந்தன வரையப்படா வடசொல் லாதற்கு என்பது.

அவை,

'நிதியங் துஞ்சும்' [அகம் - 227]

எனவும்,

'தசநான் கெய்திய பணைமருள் நோன்ருள்' [நெடுநல் - 115]

எனவும் வரும். (சு)

397. அந்நாற் சொல்லுந் தொடுக்குங் காலை
வலிக்கும்வழி வலித்தலு மெலிக்கும்வழி மெலித்தலும்
விரிக்கும்வழிவிரித்தலுந் தொகுக்கும்வழித்தொகுத்தலு
நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும் [ம்
நாட்டல் வலிய வென்மனார் புலவர்.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், அந் நான்கு வகைச் சொல்லானும் செய்யுட் செய்யுமிடத்து இவ்வறு வகைப்பட்ட விகாரமும்படச் செய்யுட் செய்யப்பெறுப என்பது உணர்த்தியவாறு.

உரை: நாட்டல் வலிய என்றது — ஒருவன் நாட்டுதல் வன்மை யிலக்கணத்தினை அவை உடைய என்றவாறு.

வலிக்கும்வழி வலித்தல் :

குறுந்தாட் கோழி என்பதனைக்,

'குறுத்தாட் கோழி'

என வலித்தல்.

மெலிக்கும்வழி மெலித்தல் :

தட்டை எனற்பாலதனை,

'தண்டை'

என மெலித்தல்.

விரிக்கும்வழி விரித்தல் :

தண்டுறைவன் எனற்பாலதனைத்,

'தண்ணந் துறைவன்' [குறுந் - 296]

என விரித்தல்.

தொகுக்கும்வழித் தொகுத்தல் :

மழவரை யோட்டிய எனற்பாலதனை,

'மழவரோட்டிய' [அகம் - 1]

எனத் தொகுத்தல்.

நீட்டும்வழி நீட்டல் :

பசிலை எனற்பாலதனைப்,

'பாசிலை' [புறம் - 54]

என நீட்டல்.

குறுக்கும்வழிக் குறுக்கல் :

உண்டார்ந்து என்பதனை,

'உண்டருந்து'

எனக் குறுக்கல்.

பத்து வகை விகாரத்துள் அறுவகை விகாரம் ஈண்டுக் கூறினார். இனமில்லதனை இனமுள்ளது போலச் சொல்லுதலும், இனமுள்ளதனை இனமில்லது போலச் சொல்லுதலும்,

'இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை' [தொல். கிளவியாக் - 18]

என்பதனுட் சொல்லிப்போந்தாம்.

இனி, இடைச்சொற் போக்கல், புடைச்சொற் புகுத்தல் என இரண்டும்,

'நிரனிறை சுண்ண மடிமறி மொழிமாற்று' [தொல். எச்ச-8]

எனப்பட்டு அடங்கும். (எ)

398. நிரனிறை சுண்ண மடிமறி மொழிமாற்
றவைநான் கென்ப மொழிபுண ரியல்பே.

என்பது, நிரனிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று என நான்கு வகையான் மொழிகள் தம்முள் புணருஞ் செய்யுளகத்து என்பது உணர்த்தியவாறு.

அவையாமாறு அவற்றவற்றுச் சிறப்புச் சூத்திரங்க-ளால் அறிக. (அ)

399. அவற்றுள்
நிரனிறை தானே
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிரனிறைப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : இச் சொல்லப்பட்டவற்றுள் நிரனிறை யென்று சொல்லப்படுவதியாதோவெனின், வினையினும் பெயரினும் ஆராயத் தோன்றிச் சொல் வேறு வேறு நிற்பப் பொருள் வேறு வேறு நின்று உணரப்படும் என்றவாறு.

அவற்றுள் வினையிற் றோன்றியது :

'உடலு முடைந்தோடு மூழ்மலரும் பார்க்குங்
கடலிருளாம் பல்பாம் பென்னக்
கேடலருஞ்சீர்த் திங்க * டிருமுகமாய்ச் சேர்ந்து'

என்பது, உடலும் உடைந்தோடும் பார்க்கும் மலரும் என்ற வினைச்சொற்கள் தம்முள் பொருளியைபு இன்றி வேறு நின்றன. இனிக் கடல் இருள் ஆம்பல் பாம்பு என நின்ற பெயர்ச் சொல்லும் அவ்வாறே நின்றமை யறிக.

---

* 'டிருமுகமாச் சேத்து' பிரதிபேதம்.

அவை தம்முள் பொருளியையுமாறு :

உடலுங் கடல், உடைந்தோடும் இருள், மலரும் ஆம்பல், பார்க்கும் பாம்பு எனக் கூட்டுக.

இனிப் பெயர் நிரனிறை வருமாறு :

'கோடிகுவளை கோட்டைநுசுப் புண்கண் மேனி'

என வரும்.

இனி, அவை பொருள்கொள்ளுங்கால், கொடி நுசுப்பு, குவளை உண்கண், கொட்டை மேனி என வரும்.

'நினையத் தோன்றும்' என்றதனான், மொழிமாற்றுப் போல நிற்கும் நிரனிறையும் உள என்பது.

'களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றும்'

என வரும். களிறும் கந்தும் முறையானே கலனும் கூம்பும் எனற்பால ; அவ்வாறு கூறாது, 'கூம்பும் கலனும்' என்றமையான், மயக்க நிரனிறை யாயிற்று என்பது. (கூ)

**400. சுண்ணந் தானே
பட்டாங் கமைந்த வீரடி யெண்சீ
ரொட்டுவழி யறிந்து துணித்தன ரியற்றல்.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே சுண்ணம் என்னும் பொருளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : சுண்ணம் எனப்படுப இரண்டடியால் எட்டுச் சீராற் பொருந்துமாறு அறிந்து துணிந்து இயற்ற வரும் என்றவாறு.

வரலாறு :

'சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை'

என வரும்.

இதனை ஒட்டுமாறு :

மொழிகளை, 'சுரை மிதப்ப, அம்மி யாழ, யானைக்கு நிலை, முயற்கு நீத்து' எனத் துணித்து இயற்றுக.

'பட்டாங் கமைந்த' என்பது, இயைபுடைய செய்யுள் நடைக்கொத்த அடியாகல்வேண்டும் என்றற்கு என்பது.()

**401. அடிமறிச் செய்தி யடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே.**

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், அடிமறிப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : அடிமறி என்று சொல்லப்படுவது சீர் கிடந்துழியே கிடப்ப, அடிகள் முதலும் இடையும் கடையும் படச் சொல்லிக் கண்டுகொள்க. (கக)

**402. பொருடெரி மருங்கி
னீற்றடி யிறுசீ ரெருத்துவயிற் றிரியுந்
தோற்றமும் வரையா ரடிமறி யான.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

உரை : அடிமறிப் பொருள்கோள், ஆராயுமிடத்து, ஈற்றடியின் இறுதிச்சீர் எருத்தத்துச் சீராய்க் கிடந்தும் வரையப்படாது என்றவாறு.

வரலாறு :

'சார ருடை நீவா லாறே
வார லெனினே யானஞ் சுவலே'

என்புழி, அஞ்சுவல் யான் என இறுதிச் சீர் எருத்துவயிற் றிரிந்தவாறு கண்டுகொள்க. இவ்வாறு எங்கும் மாற்றுக. (கஉ)

**403. மொழிமாற் றியற்கை**
**சொன்னிலை மாற்றிப் பொருளெதி ரியைய**
**முன்னும் பின்னுங் கோள்வழிக் கோளாஅல்.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், ஒழிந்து நின்ற மொழிமாற்றுப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : மொழிமாற்றினது தன்மையாவது, நின்ற சொல்லை மொழிமாற்றி, முன்னும் பின்னும் கொள்ளு- மிடம் அறிந்து கொள்க என்றவாறு.

வரலாறு :

'குன்றத்து மேல குவளை குளத்துள
செங்கோடு வேரி மலர்'

என வரும். இதனைக், குவளை குளத்துள, செங்கோடு வேரிமலர் குன்றத்துள என மொழிமாற்றுக.

மற்றுச், சுண்ணத்தோடு இதனிடை வேற்றுமை யென்னை யெனின், சுண்ணம் ஈரடி எண்சீருள் அவ்வாறு செய்யப்படும்; இதற்கு அன்னதோர் வரையறை யில்லை என்றவாறும். (கங)

**404. தநநு எஎனு மவைமுத லாகிய**
**கிளைநுதற் பெயரும் பிரிப்பப் பிரியா.**

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், ஐயமறுத்தல் நுதலிற்று.

உரை : த - ந - நு - எ எனச் சொல்லப்பட்ட நான்கு எழுத்தினையும் முதலாகவும், ன - ள - ர என்னும் மூன்று எழுத்தினையும் ஈறாகவும் உடையவாகிய தொடர்ச்சிக் கிழமை கருதிவரும் பெயரவற்றைப் பிரித்து இடையறுத்து உணரலாங்கொல்லோ எனின், அவை பிரிப்பப் பிரியா, நின்றவாற்றானே நின்று பொருள்படினன்றி என்பது.

வரலாறு: தமன் - தமள் - தமர்; நமன் - நமள் - நமர்; நுமன் - நுமள் - நுமர்; எமன் - எமள் - எமர் என வரும்.

உம்மையாற் பிறவும் பிரிப்பப் பிரியாதன உள: அவை, தாய் ஞாய் யாய் என வரும். வில்லி, வாளி என்பனவும் பிறவும் அவ்வாறு வருவன பிரிப்பப் பிரியா என்று கொள்க. இவை ஒட்டுச் சொற் பொருளொடு நிற்பன என்றும், இவற்றை ஒருசொல் அன்று என்றும் மயங்கற்க. ஒரு சொல்லே என்பது கருத்து. (கச)

**405. இசை நிறை யசைநிலை பொருளொடு புணர்தலென்**
**றவைமூன் றென்ப வொருசொல் லடுக்கே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் வழக்கிற்கும் செய்யுட்கும் பொதுவாயதோர் முடிபு கூறுதல் நுதலிற்று.

உரை: ஒருசொல் பலகால் அடுக்கி மூன்று காரணமும்படச் சொல்லப்படும் என்றவாறு.

இசைநிறை எனவே, அது செய்யுள் இலக்கணம் என்பது போந்தது.

வரலாறு:

'ஏஎஎ வம்பன் மொழிந்தனள்'

என வரும்.

ஒழிந்தன இரண்டும் வழக்கினுள் அடுத்துவரும்.

அசைநிலை:

'ஒக்குமொக்கும்'

எனவும்,

'மற்றோ மற்றோ'

எனவும் வரும்.

பொருளோடு புணர்தல் :

பாம்பு பாம்பு, கள்ளர் கள்ளர், படை படை, தீத்தீ எனவரும். அவற்றை இணைத்தா லடுக்கிவரும் என்பதனை முன்னர்ச் சொல்லுதும். (கரு)

**406. வேற்றுமைத் தொகையே யுவமத் தொகையே**
**வினையின் றொகையே பண்பின் றொகையே**
**யும்மைத் தொகையே யன்மொழித் தொகையென்**
**றவ்வா றென்ப தொகைமொழி நிலையே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், தொகைச்சொற்களைப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

பெயரும் முறையும் தொகையும் அதுவே. வேற்றுமைத் தொகையை முன்வைத்தார் அப்பகுதிப் படுமாகலான்; அன்மொழித் தொகையைப்பின்வைத்தார் அஃது எல்லாவற்றையும் பற்றிப் பிறக்குமாகலான். (கசு)

**407. அவற்றுள்**
**வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே வேற்றுமைத் தொகையது இலக்கணம் கூறுதல் நுதலிற்று.

உரை: வேற்றுமையுருபு தொக்குநின்ற தொகைச் சொற்கள் அவ்வுருபு இருந்தாங்கே பொருள்படும் என்றவாறு.

அவையாவன :

நிலங் கடந்தான், தாய் மூவர், கருப்பு வேலி, வரை வீழருவி, யானைக் கோடு, குன்றக் கூகை என இவை.

இவற்றையும் அவ் வுருபு விரிந்தாங்கே பொருள் படுமாறு அறிந்துகொள்க. அத் தொகுதிக்கண் உருபுகள் பலவகையும் புலப்படாதே நின்றன என்ப ஒரு சாரார்; ஒரு சாரார் இல்லை என்ப. (கஎ)

## 408. உவமத் தொகையே யுவம வியல.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறை-யானே உவமத்தொகை யுணர்த்துதல் நுதலிற்று.

உரை: உவமத் தொகைக்கண் அவ் வுருபு தொக்கு நின்றாலும் அவ் வுருபு விரிந்தாங்கே பொருள்படும் என்ற-வாறு.

உவமம் தொகுங்கால் வினை, பயன், மெய், உரு என்ற நான்கும்பற்றித் தொகும்.

வினையுவமம் : புலிப் பாய்த்துள் என்பது.

பயவுவமம் : மழை வண்கை என்பது.

மெய்யுவமம் : துடி நடு என்பது.

உருவுவமம் : முத்த முறுவல் என்பது.

'முத்துப் போலும் முறுவல்' என்று உவம வுருபு விரிந்து நின்றாங்கே அவ்வுருபு தொக்கவில்லைமைக்கண்ணும் பொருள் ஒக்கும் என்பது.

மற்று, இவ் வுவமத்தொகை யென்று காட்டின வெல்லாம் வேற்றுமை யுருபுபற்றி யன்றி வாரா.

என்னை,

'துடி நடு'

என்றவிடத்து, துடியை ஒக்கும் நடு, துடி நடு என்று இரண்டனுருபுபற்றி வருமாகலின், உவமத்தொகை என்-றது என்னையெனின், அதற்கு ஒரு சாரார் சொல்லுவது :

துடி நடு என்புழி, உவமவுருபும் வேற்றுமையுருபும் என இரண்டும் தொக்கவேனும், துடி போலும் நடு எனத் தொகைக்கு உவமப்பொருளே சிறைப்புடைத்தாகலின் அது தொகை யென்பது ; ஐகாரவுருபு அவ்வுவம வுருபினை நோக்கி வந்தது என்ப ; என்னை, துடியை நடுவாகக் கொள்ளாதாகலின் என்பது. இனி, அதற்கு மெய்யுரை வல்லோர்வாய்க் கேட்டுணர்க. (கஅ)

## 409. வினையின் றொகுதி காலத் தியலும்.

உரை : வினைச்சொல் தொகுங்கால், காலந்தோன்றத் தொகும் என்றவாறு.

'காலத்தியலும்' என்றது எக்காலும் காலமுடையவாய் இயலும் என்றவாறு.

வரலாறு : கொல் யானை என்பது கொன்ற யானை ; கொல் யானை — கொல்லாநின்ற யானை ; கொல் யானை — கொல்லும் யானை என மூன்று காலத்திற்கும் அதுவே வாய்பாடு ; பிறிதில்லை.

மற்றுக், கொல்யானை என்றானேல், நிகழ் காலமும் அறியலாம் ; கொல்லிய ஓடுவதனைக் கண்டு, 'கொல் யானை' என்றானேல், எதிர்காலம் என்பது அறியலாம். பிறவும் அன்ன. (கக)

## 410. வண்ணத்தின் வடிவி னளவிற் சுவையினென் றன்ன பிறவு மதன்குண நுதலி யின்ன திதுவென வரூஉ மியற்கை யென்ன கிளவியும் பண்பின் றொகையே.

உரை : பண்பு தொகுமிடத்து இந் நான்கும்பற்றித் தொகும் என்பது கருத்து.

வண்ணம்பற்றித் தொக்கது :

கருங் குதிரை என்பது ; இது விரியுங்காலை, கரியது குதிரை என விரியும்.

கரியதும் அதுவே, குதிரையும் அதுவே ; கருமை யுடைமையிற் குதிரை கரியது எனப்பட்டது. இன்னது இது என நிற்றல் அதற்கு இலக்கணம்.

இன்னது என்பது கரியது என்றல் ; இது என்பது குதிரை என்றல்.

இனி, வடிவுபற்றித் தொகுத்தல் :

வட்டப் பலகை என்பது ; அது விரியுங்கால், வட்ட மாகியது பலகை என விரியும். ஆண்டும் இன்னது இது என்னுங் குணம் நுதலி நிற்கும்.

இனி, அளவுபற்றித் தொக்கது :

குறுங் கோல் என்பது ; அது விரியுங்கால், குறியது கோல் என விரியும். ஆண்டும் இன்னது இது என நிற்கும்.

இனிச் சுவைபற்றித் தொக்கது :

தீங் கரும்பு என்பது ; அது விரியுங்கால், தீவியது கரும்பு என விரியும். ஆண்டும் இன்னது இது என்னும் குணம் நுதலிற்று.

இனி, 'அன்ன பிறவும்' என்றதனால், தண்ணீர், நறும்பூ, நன்னுதல், பருநூல், மெல்லிலை, நல்லாடை என எத்துணையுளமன், அப்பொருள் குணம் ; அக்குணம் நுதலி இன்னது இது என வருமவை யெல்லாம் பண்புத் தொகையே யென்று கொள்க என்பதாம்.

இனி, 'என்ன கிளவியும்' என்றதனால், கேழற்பன்றி, வேழக்கரும்பு, சகரக்கிளவி, அகரமுதல, மாமரம் என இவையுங் கொள்க. இவை ஒரு பொருட்கண் இருபெயர்

பட வரும். இவற்றுக்கண்ணும் இன்னது இது என நிற்றல் ஒக்கும். கேழல் எனப்பட்டதுவும் அதுவே. பிறவும் அன்ன.

மற்று, வேற்றுமைத் தொகையும் உவமத் தொகையும், வேற்றுமை யுருபும் உவம வுருபும் தொக்கமையால் தொகை யென்றல் அமையும்; ஒழிந்த வினைத்தொகையும் அவ்வாறு தொக்கு நின்றிலவால் எனின், அவ்வாறு தொகுதலே யன்று தொகையாவது.

கொல் யானை என்புழிக், கொல்லும் என்னும் வினைச் சொல் ஒருகூறு நிற்ப, ஒருகூறு தொக்கமையின் வினைத் தொகை ஆயிற்று.

கருங் குதிரை என்புழிக், கரியது என்னும் பண்புப் பெயர் ஒருகூறு நிற்ப ஒருகூறு தொக்கமையின் பண்புத் தொகை ஆயிற்று. (உ0)

**411. இருபெயர் பலபெய ரளவின் பெயரே**
**யெண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி**
**யெண்ணின் பெயரோ டவ்வறு கிளவியுங்**
**கண்ணிய நிலைத்தே யும்மைத் தொகையே.**

என்பது, இவ்வாறிடத்தும் உம்மை தொகற்பாலது என்று உணர்த்தியவாறு.

இருபெயர்க்கண் தொக்கது:

உவாப் பதினான்கு என்பது; அது விரியுங்கால், உவாவும் பதினான்கும் என விரியும்.

பலபெயர்க்கண் தொக்கது:

புலி விற் கெண்டை என்பது; அது விரியுங்கால், புலியும் வில்லும் கெண்டையும் என விரியும்.

அளவுபற்றித் தொக்கது :

தூணிப் பதக்கு என்பது ; அது விரியுங்கால், தூணியும் பதக்கும் என விரியும்.

எண்ணியற்பெயர்பற்றித் தொக்கது :

பதினைவர் என்பது ; அது விரியுங்கால், பதின்மரும் ஐவரும் என விரியும்.

நிறைப்பெயர்பற்றித் தொக்கது :

தொடியரை என்பது ; அது விரியுங்கால், தொடியும் அரையும் என விரியும்.

எண்ணின்பெயர்பற்றித் தொக்கது :

பதினொன்று என்பது ; அது, பத்தும் ஒன்றும் என விரியும்.

மற்றும், 'பலபெயர்' என அமையாதே, 'இருபெயர்' என வேண்டியது என்னை, இரண்டையும் பல என்பவால் எனின், அற்றன்று ; இரண்டனையும் பன்மை யென்று வேண்டான் இவ்வாசிரியன் என்பது. ஆயின், மேல்,

'ஒன்றறி சொல்லே பலவறி சொல்' [தொல். கிளவி - 3]

என்புழி, இரண்டையும் பல என்று வேண்டினனெனின், அது விகாரம் ; என்னை, இரண்டும் இரண்டிறந்த பன்மையும், 'வந்தன, போயின' என, ஒருபன்மைச் சொல்லே யேற்குமாகலின், ஆண்டு இரண்டினைப் பலவற்றுள் அடக்கிக் கூறினர் என்பது. (உக)

412. பண்புதொக வரூஉங் கிளவி யானு
மும்மை தொக்க பெயர்வயி னானும்

வேற்றுமை தொக்க பெயர்வயி னானு
மீற்றுநின் றியலு மன்மொழித் தொகையே.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேல் நிறுத்த முறையானே ஒழிந்துநின்ற அன்மொழித்தொகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : அக் கூறப்பட்ட மூன்று தொகைச் சொல்லீற்றுக்கண்ணே நின்று நடக்கும் அன்மொழித் தொகை என்றவாறு.

பண்புத்தொகைப் புறத்துப் பிறந்தது :

வெள்ளாடை என்பது ; அதனைப் படுத்தலோசையாற் சொல்ல, வெண்மைமேலும் ஆடைமேலுங் கிடவாது, அவ்வாடை யுடுத்தாள்மேல் கிடக்கும் என்பது; அந்நிறை மொழி யோசையன்றிப் பிறிதோர் மொழி யோசைபட்டுப் பொருள்கொள்ளு மாகலான், அம் மொழி அன்மொழி யாயிற்று என்பது.

அன்மொழித்தொகை யாயக்காலும் வெளியதாடை என்றே விரியும் ; பிறிதில்லை.

உம்மைத்தொகைபற்றிப் பிறந்தது :

தகர ஞாழல் என்பது ; அது விரியுங்கால், தகரமும் ஞாழலும் என விரியும். அன்னதன் றொகைக்கண் ஓசை வேறுபடச் சொல்லத் தகரத்தின்மேலும் ஞாழலின்மேலும் கிடவாது, அவை யுடையாள்மேல் கிடக்கும்.

இனி, வேற்றுமைத்தோகை பற்றிப் பிறந்தது :

பொற்றாலி என்பது ; அது விரியுங்கால், பொன்னானிய தாலி, பொற்றாலி என்பதாம். பிறிதானும் விரியும் ; பின்னர், அத்தொகை பொன்மேலும் தாலிமேலும் கிடவாது, பொற்றாலியுடையாள்மேல் நிற்கும், ஓசை

வேறுபாட்டான் என்பது. இம் மூன்று தொகையும்-பற்றிப் பிறத்தலின் ஓர் மிகுதிக்குறை யில்லை, ஒக்கும் என்றவாறு.

மற்றுத் தொகையதிகாரத்தின் முன்வைக்கப்பட்ட-தூஉம் சிறப்புடையதூஉம் வேற்றுமைத்தொகையாதலின், ஈண்டு இதனை முற்கூறாது, பண்புத்தொகை முற்கூறியது என்னை யென்னின், அதனாற் பிறவும் உள கொள்ளப்-படுவன; அவையாவையோ எனின், ஒழிந்துநின்ற உவமத் தொகையும் வினைத்தொகையும் பற்றிப் பிறக்கும் அன்-மொழித்தொகை என்பது.

**உவமத்தொகை பற்றிப் பிறந்தது :**

அறற்கூந்தல் என்பது ; அது விரியுங்கால், அறல் போலுங் கூந்தல் என விரியும்.

**வினைத்தொகை பற்றிப் பிறந்தது :**

திரிதாடி என்பது ; அது விரியுங்கால், திரித்த தாடி என விரியும் ; அது தொக்குழி திரிவின்மேலும் தாடியின் மேலும் கிடவாது, திரித்ததாடி யுடையான்மேல் நிற்கும். இவை இரண்டும் வழக்குப் பயிற்சி ; அவைபோல அக் காலத்து இன்மையின், இலேசுபற்றி யெடுத்துக் கொண்-டார் என்பது. (உஉ)

413\. அவைதாம்

முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலு
மிருமொழி மேலு மொருங்குட னிலையலு
மம்மொழி நிலையா தன்மொழி நிலையலு
மந்நான் கென்ப பொருணிலை மரபே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் அத் தொகைக்கண்ணே கிடந்ததோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : தொகுவன இருவகை மொழிகளான், அவ் விருவகை மொழியும் இருபொருளின்பின் றொக்கவிடத்து அவற்றைச் சொல்லுவான், அத்தொகைக்கண் முன்னதன் பொருளுணர்தலுற்றுச் சொல்லுதல், பின்னதன் பொருளுணர்தலுற்றுச் சொல்லுதல், இரண்டுடன் பொருளுணர்தலுற்றுச் சொல்லுதல், இரண்டின்மேலும் நில்லாது பிறிதோர் பொருளுணர்தலுற்றுச் சொல்லுதல் என நால்வகை யிலக்கணத்தாற் பொருளுணர நிற்கும் என்றவாறு.

அவற்றுள், முன்மொழிப் பொருளுணர நின்றது, 'வேங்கைப்பூ' என்பது.

முன்மொழி பின்மொழி யாதல், இடமும் காலமும் என இருவகையால் உணரப்படும். அவற்றுள் இடத்தான் முன்மொழிப் பொருளாயிற்று ; காலவகை நோக்கிப் பின்மொழிப் பொருளாம்.

வேங்கை என்பதும் பொருள் இல்லாததன்றுமன் ; அப் பொருளுடன் அறிய லுற்ற பூவினை, அதனைச் சிறப்பிப்பான் வந்தது வேங்கை என்னுஞ் சொல் என்பது.

இருமொழிப் பொருள் உணர நின்றது உவாப் பதினான்கு என்பது. பிறவும் உம்மைத் தொகையான் வருவனவெல்லாம் இருமொழிப் பொருள்பட நிற்கும் என உணர்க.

அம் மொழிநிலையாது அன்மொழிப் பொருட்பட நின்றன, முன் அன்மொழித் தொகைப்படக் காட்டினவெல்லாம் என்பது.

அவை, வெள்ளாடை என்னுந் தொடக்கத்தன.

மற்று இன்னுழிப் பொருள்நிற்கும் எனின், ஒழிந்துழி யெல்லாம் பொருளில்லையாமாகாதே, ஆகவே,

'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' [தொல்.பெயரி-1]

என்பதனொடு மலைக்கும்பிற எனின், மலையாது; என்னை, மற்றையுழிப் பொருள் இல்லை என்பது அன்று; அவன் உணர்தலுறவுநோக்கி இது சொல்லினார் என்பது. (உங)

## 414. எல்லாத் தொகையு மொருசொன் னடைய.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் ஒட்டுச் சொற்கண்ணே கிடந்ததோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: அறுவகைத் தொகைச்சொல்லும் எழுவாய் வேற்றுமை யியல்பாம் என்று ஈண்டு எய்துவித்தார் என்பது.

மற்று, ஒட்டுச் சொற்களை, 'ஒருசொல் நடையன' எனப் போந்த இலேசு என்னை யெனின், அவை பல சொன்மைப்படப் பொருளிசையா; ஒருசொல் விழுக்காடு படத் திரண்டிசைக்கும் என்பது கருத்து.

அஃதினை, யானைக்கோடு வேங்கைப்பூ என்பனவற்றான் அறிக. கற்சுனைக் குவளையிதழ் என்பதும் அது.(உச)

## 415. உயர்திணை மருங்கி னும்மைத் தொகையே பலர்சொன் னடைத்தென மொழிமனார் புலவர்.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், உம்மைத் தொகையுள் ஒருசாரனவற்றுக்கண் படுவதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: உயர்திணை மருங்கின் உம்மைத் தொகைச் சொல்லுக்கு இறுதி பலரைச் சொல்லுஞ் சொன்னடைத்தாக என்று சொல்லுப ஆசிரியர் என்றவாறு.

வரலாறு : கபிலபரணர் என வரும்.

இவ்வாறு அத்தொகைச்சொல் லிறுதி பலர்சொன்னடைத்தன்றிக் கபிலன் பரணன் என னகரவீறாய் நிற்பின், அது, 'வந்தான், போயினான்' என்னும் ஒருவினையேற்பினல்லது, 'வந்தார், போயினார்' என்னும் பன்மைவினை ஏலா.

இனிப், 'பலர் சொன்னடைத்து' எனவே அவ்விருவர் மேலும் வினையேற்கும்; அதனான் இது சொல்லினார் என்பது.

மற்றுத் தொகைச் சொற்கள் தொகுவது தொக்கு நின்றக்கால், தம்மீறு கருதின பொருட்கேற்கும் முடிவினை நின்றாங்கே நின்று கொள்ளும்; இதுவாயின் இறுதி நின்றாங்கே நிற்பப் பொருட்கேற்ப முடிபு ஏலாமையான், இறுதிபோதல் வேண்டிற்று என்பது. (உரு)

**416.** **வாரா மரபின வரக்கூ றுதலு**
**மென்னா மரபின வெனக்கூ றுதலு**
**மன்னவை யெல்லா மவற்றவற் றியலா**
**னின்ன வென்னுங் குறிப்புரை யாகும்.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேல் தொகை யதிகாரங் கூறினான்; அவை யெல்லாம்விட்டு, இனி ஒரு சொன்மரபு வழூஉக்காத்தல் நுதலிற்று.

உரை : இயங்காதவற்றை இயங்குவதுபோலச்சொல்லுதலும், சொன்னிகழாதவற்றைச் சொன்னிகழ்த்துவன போலச் சொல்லுதலும், அவ்வப் பொருளியல்பு பற்றி அவை அன்ன செய்கையுடையவற்றைப்போலச் சொல்லுற்றான்; அது மனக் குறிப்பினான் ஆய்ந்து, அவற்றது உரை அன்று என்பது கொள்க.

'அன்னவை எல்லாம்' என்பது, அவ்வாராமரபினவும் பல்வகைய, ஒரோவொன்றேயல்ல என்றற்கு என்பது.

வாராமரபின வரக்கூறுதல் வருமாறு :

மலை வந்து கிடந்தது, நெறி வந்து கிடந்தது என வரும்; மலைக்கும் நெறிக்கும் அன்ன செய்கை யின்மை-கலின் என்பது.

இனி, என்னுமரபின எனக்கூறுதல் வருமாறு :

நிலம் வல்லென்றது, இலை பச்சென்றது எனவும், செங்காணுராய் எனவும் வரும்.

விலங்கும் மரனும் புள்ளும் உள்ளநோய் உற்றாற்கு மனக்குறைக்கு மறுதலைமாற்றம் கூறுவன போலுங் குறிப்பினவாகப் புலப்படுதலால் இது சொல்லப்பட்டது என்பது. (உசு)

**417. இசைபடு பொருளே நான்குவரம் பாகும்.**

**418. விரைசொல் லடுக்கே மூன்றுவரம் பாகும்.**

இவை இரண்டு சூத்திரமும் உரையியைபு நோக்கி யுட-னெழுதப்பட்டது.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேல், இசை-நிறை, அசைநிலை, பொருளொடுபுணர்தல் என்றவை மூன்-றென்ப ஒருசொல் அடுக்கு; என்புழி மூன்று வகையான் அடுக்கிவரப்பெறும் என்றவை எல்லையின்மையான், அவை யித்துணை யென்னும் வரையறை கூறினார் ஈண்டு என்பது.

உரை : அம் மூன்றனுள் இசைநிறைத்தற்கு அடுக்-கப்படும் பொருள் நான்கு வரம்பாகும் என்றவாறு.

இரண்டும் அடுக்கும், மூன்றும் அடுக்கும், நான்கும் அடுக்கும், நான்கிறந்து அடுக்கா என்பது கருத்து.

அது,

'பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ'

என வரும்.

இது, நான்கு அடுக்கின வந்தது. இசைநிறை யெனவே, அது செய்யுட்கென்பது முடிந்தது.

இனி, அம் மூன்றுடன் பொருளொடு புணர்தலை விரைசொல்லடுக்கு என்பது; அதுதான் மூன்று வரம்பு இறவாது என்பது. 'பாம்பு, பாம்பு, பாம்பு' 'தீத் தீத் தீ' என வரும்; இரண்டு மூன்றிறவாது.

மற்று, அசைநிலை யினைத்தால் அடுக்கும் என்பது எற்றாற் பெறுதும் எனின், மூன்றடுக்கும் பொருளொடு புணர்தலை முற்கூறற் பாலார், என்னை, மூன்று நான்கு என்னும் எண்ணுமுறைமை நோக்கி அவ்வாறு சொல்லாது மயக்கங் கூறியவதனான், மூன்றின் கீழ்க்குமுதல் இரண்டல்லது இல்லையென்றே; அவ்விரண்டெண்ணின் நான்காகப்படும் அசைநிலை என்பது கொள்க என்றவாறு.

**வரலாறு**: 'மற்றோ மற்றோ' 'அஃதே அஃதே' என வரும்.

இரண்டிறவாது என்பதனை இலேசினாற் கொண்டார், இடைச்சொல்லடுக்காதலின் என்பது. ஒழிந்த, நால்வகைச் சொல்லும் அடுக்கும். (உஎ - உஅ)

**419. கண்டீ ரென்றா கொண்டீ ரென்றா**
**சென்ற தென்றா போயிற் றென்றா**
**வன்றி யனைத்தும் வினாவொடு சிவணி**
**நின்றவழி யிசைக்குங் கிளவி யென்ப.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இவை வினையிய லொழித்துநின்ற ஒழிபு கட்டுரை யெடுத்தது.

வினைச்சொற்கள், இங்ஙனம், வினவொடுபட்டு நின்ற-வழியாயக்கால் அசைச்சொல்லாய்நிற்கும் என்பதுகருத்து.

வரலாறு :

'கண்டீரோ, கண்டீரோ'

'கொண்டீரோ, கொண்டீரோ'

'சென்றதே, சென்றதே'

'போயிற்றே, போயிற்றே'

என வினவொடுபட்டவழி அடுக்கி அசைநிலையாய் நிற்கும். அவ்வினவொடு சிவணுக்கால் வினைச்சொல்லேயாம் என்பது. 'அன்றியனைத்தும்' என்பது, அவையிற்றைத் தொகை கொடுத்துக் கூறினவாறு.

'வினவொடு சிவணி' என்பது, ஆ ஓ என்னும் வினக்களைக் கடையாத்து நின்றவழி என்றவாறு. (௨௯)

**420. கேட்டை யென்று நின்றை யென்று**
**காத்தை யென்று கண்டை யென்று**
**வன்றி யனைத்து முன்னிலை யல்வழி**
**முன்னுறக் கிளந்த வியல்பா கும்மே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இவை முன்னைய நான்கும்போல வினவொடுபடாது வாளாதே நின்றுழி, இவையும் அசைச்சொல்லாய் நிற்கும் என்பது கருத்து.

முன்னின்றவற்று நிலைமையல்வழி யென்பார், 'முன்-னிலை யல்வழி' என்றார் என்பது.

வரலாறு :

'கேட்டை, கேட்டை'

'நின்றை, நின்றை'

'காத்தை, காத்தை'

'கண்டை, கண்டை'

என வரும். இவையும் கட்டுரைக்கண் வருமிடம் அறிந்து கொள்க.

இனி, இவை வினவொடு பட்டுழியாயக்கால் அசைநிலையாகா என்பது. (௩௦)

**421. இறப்பி னிகழ்வி னெதிர்வி னென்றச்
சிறப்புடை மரபி னம்முக் காலமுந்
தன்மை முன்னிலை படர்க்கை யென்னு
மம்மூ விடத்தான் வினையினுங் குறிப்பினு
மெய்ம்மை யானு மிவ்விரண் டாகு
மவ்வா றென்ப முற்றியன் மொழியே.**

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இவை வினையியலுள் ஓதப்பட்டன சில சொற்கள், முற்றுச்சொல் என்னும் குறியெய்துதல் நுதலிற்று.

அதனாற் பயந்தது என்னை யெனின், அச் சொற்கு முன்பு முடிபுகூறி, ஈண்டுக் குறியிட்டான் என்பது பயன் என்பது.

இதன் பொழிப்பு: இறந்தகாலம் எதிர்காலம் நிகழ்காலம் என்னும் மூன்றுகாலமும் உடையவாய்த், தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் மூன்றிடத்தும் வினையும் வினைக்குறிப்பும் பற்றி, அம் மூன்றிடங்கடோறும் வினையும் வினைக்குறிப்பும் என இரண்டாம் அவ்வாறுகூற்றுச் சொற்களை முற்றுச்சொல் என்று கூறுப ஆசிரியர் என்றவாறு.

'அவ் வாறு' என்றது, தன்மை இரண்டுகுப்பையவாயும், முன்னிலை இரண்டுகுப்பையவாயும், படர்க்கை இரண்டுகுப்பையவாயும் வருதல் நோக்கி என்பது.

வரலாறு: 'உண்டேன், கரியென்' எனவும்; 'உண்டாய், கரியை' எனவும்; 'உண்டான், கரியன்' எனவும் வரும். பிறவும் அன்ன.

'முற்றுச்சொல்' என்றது, செய்கையும் பாலும் காலமும் செயப்படுபொருளும் தோன்றிநிற்றலின் முற்றுச் சொல் என்பாரும், மற்றோர்சொல் நோக்காது முடிந்து நிற்றலின் முற்றுச்சொல் என்பாரும், எக்கால் அவை தம் எச்சம்பெற்று நின்றன அக்கால் பின் யாதும் நோக்காவாய்ச், செப்புமூயிற்றுப்போல, அமைந்து மாறுதலின் முற்றுச்சொல் என்பாரும் என இப்பகுதியர் ஆசிரியர் என்பது. (நுக)

**422. எவ்வயின் வினையு மவ்விய னிலையும்.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது முற்றுச் சொல்லொழித்து ஒழிந்த பெயரெச்ச வினையெச்சங்கட்கு ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : மேற் கூறப்பட்ட முற்றுச்சொல்லே யன்றிப் பெயரெச்சமும் மூன்றுகாலமும் மூன்றிடமும் உடையவாய் வினையும் வினைக்குறிப்பும்பற்றி வரும் என்பான், 'எவ்வயின் வினையும் அவ்வியனிலையும்' என்றார் என்பது.

மற்று,

'வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலக் காலமொடு தோன்றும்' [தொல். வினை-1]

என்புழி, எல்லா வினைச்சொல்லும் மூன்று காலத்திற்கும் உரிய என்பபட்டது.

இனி,

'எஞ்சிய கிளவி யிடத்தொடு சிவணி
யைம்பாற்கு முரிய' [தொல். வினை - 26]

என்புழி, எவ்விடத்திற்கும் உரிமையுங் கூறப்பட்டது பிறவெனின், மேல் அங்ஙனங் கூறினாரேனும், அது விலக்குப்பட்டது ; ஈண்டுப் போதந்து முற்றுச் சொல்லையே விதந்து மூன்றிடத்திற்கும் உரிய என்றமையான், அது நோக்கி யீண்டு இது கூறினார் என்பது. (நுஉ)

**423. அவைதாந்**
**தத்தங் கிளவி யடுக்குந வரினு**
**மெத்திறத் தானும் பெயர்முடி பினவே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது முற்றுச் சொல் என்று மேற்கூறப்பட்டனவற்றிற்கு முடிபுகூறுதல் நுதலிற்று.

உரை : மேற் சொல்லப்பட்ட முற்றுச் சொற்கடாம் எத்துணைச் சொல்லையும் அடுக்கிப் பலவாய்வரினும் பெயர் கொண்டு முடிதல் இலக்கணத்தன என்றவாறு.

வரலாறு : 'உண்டான், தின்றான், ஓடினான், பாடினான் சாத்தன்' என வரும் ; இது வினை.

'நல்லறிவுடையன், செவ்வியன், சான்றோர்மகன்' எனவும் வரும் ; இது வினைக்குறிப்பு.

மற்று, 'எத்திறத்தானும்' என்றது என்னை யெனின், உண்டான் சாத்தன் என்பது பெயரை முன்னடுத்து, சாத்தன் உண்டான் என்பது பெயரைப் பின்னடுத்து வரும் என்பது அறிவித்தற்கு, 'எத்திறத்தானும்' என்றார் என்பது. பிறவுஞ் சொல்லுப ; முன்னுமுரிய முற்றுச் சொல்லென என்பது. (௩௩)

**424. பிரிநிலை வினையே பெயரே யொழியிசை**
**யெதிர்மறை யும்மை யெனவே சொல்லே**
**குறிப்பே யிசையே யாயீ ரைந்து**
**நெறிப்படத் தோன்று மெஞ்சுபொருட் கிளவி.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேல் வினையியலுள்ளும் இடைச்சொல் லுள்ளும் முடிபு கூறப்படாது நின்ற எச்சங்கட்கு முடிபு உணர்த்துவான் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை: எல்லாவற்றையும் எச்சம் என்பதனைக் குறைத்துப் பின்னைப் பெயரெஞ்சு கிளவி யென்றார் இறுதி விளக்காக, பிரிநிலையெச்சம் முதலாகக் கூறப்பட்ட பத்து வகை யெச்சங்களும் முன்பு முடிவு கூறப்படாது நின்றன வேனும், இனி நெறிப்படத் தோன்றும் அவை என்றவாறு. (௩௪)

425. அவற்றுள்
பிரிநிலை யெச்சம் பிரிநிலை முடிபின.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே பிரிநிலையெச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: பிரிநிலையென்ப இருவகைய, ஏகாரப் பிரிநிலையும் ஓகாரப் பிரிநிலையும் என; அவை பிரிக்கப்பட்ட பொருடன்னையே கொண்டுமுடிக என்றவாறு.

வரலாறு: 'அவனே கொண்டான்' 'அவனோ கொண்டான்' என வரும். அவனே யெனப் பிரிநிலையெச்சம் ஏகாரந்தானின்றுமன், அவனே யெனப் பிரிக்கப்பட்டானையே கொண்டுமுடிதல்; இவை அவற்றுக்கு முடிபாவன என்றவாறு. (௩௫)

426. வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பு
நினையத் தோன்றிய முடிபா கும்மே
யாவயிற் குறிப்பே யாக்கமொடு வருமே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே வினையெச்சத்திற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

உரை. வினையெச்சம் முடியுங்கால் வினையும் வினைக்குறிப்புங் கொண்டு முடியும்; அவ்விடத்துக் குறிப்புவினைச்சொல் ஆக்கச்சொல்லொடு வரும் என்றவாறு.

வரலாறு: 'உழுது வந்தான்' என்பது, வினையெச்சம் தெரிநிலை வினைகொண்டு முடிந்தது. 'மருந்து உண்டு நல்லனாயினான்' என்பது, வினையெச்சம் வினைக்குறிப்புக் கொண்டு முடிந்தது; அவ்விடத்து வினைக்குறிப்பு ஆக்கமொடு வந்தவாறு கண்டுகொள்க.

இனி, 'நினையத் தோன்றிய' என்றதனான், 'உழுது வருதல்' 'உழுது வந்தான்' எனத் தொழிற்பெயரானும் முடியும் என்றவாறு.

மற்று, இச் சூத்திரத்தால் வினையெச்சத்திற்கு முடிபு கூறவேண்டியது என்னை? வினையியலுள்,

'முதனிலை மூன்றும் வினைமுதல் முடிபின' [தொல். வினை-31]

என்று மொழிந்தனவற்றுக்கு,

'ஏனை யெச்சம் வினைமுத லானும்
ஆன்வந் தியையும் வினைநிலை யானும்' [தொல். வினை-33]

முடியுமென்று கூறியதே அமையும் பிறவெனின், அதற்கு விடை, ஆண்டு, வினைமுதலானும் முடியுமென்புழிப் பெயர் வினைமுதலானும் முடியும் என்பது பட்டது; என்னை, வினை வினைமுதலென்றும், பெயர் வினைமுதல் என்றும் பகராது, பொதுவகையாற் கூறினாராகலின் இச் சூத்திரம் வேண்டும்; இது கூறுக்கால், உழுது சாத்தன் எனப் பெயர் முதல் வினைமுதலானும் முடிவான் செல்லும் என்பது. அன்றியும், வினையெச்சத்திற்கு வினைக்குறிப்பு முடிபாங்கால், ஆக்கமொடுவருதல் எடுத்தோத வேண்டும் என்பது.

## 427. பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே பெயரெச்சத்திற்கு முடிபுகூறுதல் நுதலிற்று.

உரை: பெயரெச்சம் பெயர்கொண்டு முடியும் என்றவாறு.

வரலாறு: 'உண்ணுஞ் சாத்தன்' 'உண்ட சாத்தன்' என வரும். உண்ணும், உண்ட என்பன பெயரெச்சம்; மற்று இது கூறவேண்டிய தென்னை?

'நிலனும் பொருளுங் காலமுங் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையும்' [தொல். வினை - 35]

பெயர்கொண்டு முடிதல் கூறப்பட்டது பிறவெனின், அதற்கு விடை, ஆண்டு வினைமுதற் கிளவியும் வினையும் எனவே, வினைச்சொல்லும் முடியும் என்பது பட்டது என்றது. வினைமுதற்கிளவி என்றக்கால் வினை வினைமுதலும் வினைமுதலாகலானும், இனி வினை யென்றக்கால் வினைப் பெயரேயன்றி வினைச்சொல்லுமாகலானும் இச்சூத்திரம் வேண்டும் என்பது. (௩௭)

## 428. ஒழியிசை யெச்ச மொழியிசை முடிபின.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே ஒழியிசையெச்சம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ஒழியிசை யெச்சமாவன மூன்று, அவை, மன்னை ஒழியிசையும், தில்லை ஒழியிசையும், ஒகார ஒழியிசையும் என; அவை மூன்றும், ஒழியிசைப் பொருள் கொண்டு முடியும் என்றவாறு.

வரலாறு:

'கூரியதோர் வாண்மன்'

வாய் கோடிற்று, இற்றது எனப் பின்னும் வாள்மேலே முடிபு சென்றது.

இனி,

'வருகதில் கொண்கன்'

என, வருக எனப்பட்டானும் அவனே, கொண்கன் எனப்பட்டானும் அவனே; அதனால், அதுவும் அப்பொருள்கொண்டு முடிந்தது.

இனிக்,

'கோளலோ 'கோண்டான்'

என்புழிக், கொளலோ எனப்பட்டானையே கொண்டான் என்பது. அதனால், அதுவும் அவ் வொழியிசைப் பொருள்கொண்டு முடிந்தது. (நஅ)

## 429. எதிர்மறை யெச்ச மெதிர்மறை முடிபின.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறை-யானே எதிர்மறையெச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: எதிர்மறை யெச்சம் என்பன இரண்டு, ஓகார எதிர்மறையும் உம்மை யெதிர்மறையும் என; அவை, அவைதம் எதிர்மறைப் பொருள்கொண்டு முடியும் என்றவாறு.

வரலாறு: 'யானோ கொண்டேன்' என்பது; யானோ-வன்றே கொண்டேன் என்றாலும், அதனால் அப்பொருள் கொண்டு முடிந்தது எனப்படும். 'நீயே கொண்டாய்' என்றற்கு எதிர்மறுத்தவாறு, 'யான் கொண்டிலென்' என என்பது.

இனி, உம்மையெதிர்மறை, 'வரலும் உரியன்' என்பது. ஆண்டு, 'வரலும்' எனப்பட்ட உம்மை யெதிர்மறை, உரியன் எனப் பின்னும் அவனையே கொண்டுமுடிந்தது. வாரா-மையும் உரியன் என்பதற்கு எதிர்மறை, அவை ஒன்-றொன்றனை நோக்க எதிர்மறை யென்றவாறாயிற்று. (நகூ)

## 430. உம்மை யெச்ச மிருவீற் றானுந்
## தன்வினை யொன்றிய முடிபா கும்மே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது முறையானே உம்மையெச்சத்திற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

உரை : உம்மை யெச்சம் என்பது எச்சவும்மை யாயிற்று ; 'இருவீற்றானும்' என்றது, தானும் தன்னாற் றழுவப்பட்டதுவுமான இரண்டனையும் ஆயிற்று ; அவை யிரண்டும் ஒன்றிய வினையே கொண்டுமுடியும் என்றவாறு.

வரலாறு: 'சாத்தனும்வந்தான்' என்றக்கால், பின்னைக் கொற்றனும் வந்தான் என்றானும், கொற்றனும் வரும் என்பதானும் ஒன்றியவினையேகொண்டு முடிக என்பது ; 'சாத்தனும் வந்தான்' என்றக்கால், 'கொற்றனும் போயி-னான்' என்றுவிடின் அமையாது என்பதாம். (சo)

431. தன்மேற் செஞ்சொல் வரூஉங் காலை
நிகழுங் காலமொடு வாராக் காலமு
மிறந்த காலமொடு வாராக் காலமு
மயங்குதல் வரையார் முறைநிலை யான.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இஃது அவ்வெச்ச வும்மையது மயக்கங் கூறுதல் நுதலிற்று.

உரை : தன் என்பது எச்ச வும்மை; செஞ்சொல் என்பது உம்மையில் சொல் ; எச்சவும்மைச் சொல்லின்-மேல் உம்மையில்சொல் வந்தக்கால் நிகழ்காலமும் எதிர் காலமும் மயங்கும், இறந்தகாலமும் எதிர்காலமும் மயங்-கப்படும் முறை யிலக்கணமாகலான் என்பது.

வரலாறு : 'கூழுண்ணாநின்றான், சோறும் உண்பன்' என வரும்.

'கூழுண்ணாநின்றான்' என்பது செஞ்சொல்; 'சோறும் உண்பன்' என்னும் உம்மைச் சொல்லின்மேல் வந்தது.

உண்ணாநின்றான் என்னும் நிகழ்காலம் தன்னிகழ்-காலமே கொள்ளாது, 'சோறும் உண்பன்' என்னும் எதிர்-காலங் கொண்டமையின் வழுவாயிற்றாயினும், அமைக என்பது.

இறந்தவும் எதிர்வும் மயங்குமாறு : 'கூழுண்டான் சோறுமுண்பான்' என வரும்.

இனி, 'முறை நிலையான' என்றதனுன், இறந்ததனெடு நிகழாநின்றதூஉம் மயங்கும்; எதிர்வதனேடு இறந்ததுவும் மயங்கும் என்றவாறு.

வரலாறு : 'கூழுண்டான், சோறும் உண்ணுநின்றுன்' என வரும்; 'சோறுண்பான், கூழுமுண்டான்' எனவரும்; பரிமாறிக் கொள்க. (சக)

## 432. எனவெ னெச்சம் வினையொடு முடிமே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், நிறுத்த முறை-யானே எனவென் னெச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : எனவென நின்ற எச்சம் பெயர்கொண்டு முடியாது வினைகொண்டு முடியும் என்றவாறு.

வரலாறு : 'கொள்ளெனக் கொண்டான்' என வரும். பிறவும் அன்ன.

தன்வினையையோ பிறவினையையோ எனின், இன்ன வினையென்பதில்லை, ஏற்ற வினையான் முடியும் என்பது.()

## 433. எஞ்சிய மூன்று மேல்வந்து முடிக்கு மெஞ்சுபொருட் கிளவி யிலவென மொழிப.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், ஒழிந்து நின்ற எச்சங்கடிறத்துப் படுவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : எஞ்சிய மூன்றும் என்பன, அவை மூன்றும்; முந்தையவற்றைப்போலத் தம்மை யின்னவந்து முடிப்பன என்று காட்டப்படும் எச்சச்சொல் இல்லை என்றவாறு.

மூன்றும் மேல்வந்து முடிக்கும் எச்சச்சொல் இல என, ஒன்று உடைத்தென்பதாம். அஃதியாதோவெனின் சொல்லெச்சம்; அதனை முன்னர்ச் சொல்லுதும். (சங)

**434.** அவைதாம்
தத்தங் குறிப்பி னெச்சஞ் செப்பும்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது 'குறிப்பே இசையே' (தொல். சொல். எச்சவி - 34) யென்று கூறப்பட்ட இரண்டெச்சமும் தங்குறிப்பிற்பற்றிய எச்சத்தானே முடிபு கூறப்படும், பிறிதில்லை என்பது.

வரலாறு: 'விண்ணென விசைத்தது' குறிப்பெச்சம்; அது தன் குறிப்பினையே கொண்டு முடிந்தது.

விண்ணென்றதே விசைத்தது எனப்பட்டது. அதனால் தத்தங்குறிப்பின் எச்சத்தானே முடிந்தது என்பது.

இனி, இசையெச்சம், ஒல்லென வொலித்தது. இடைச் சொல்லோத்துள் அறுபகுதிய என்று ஓதப்பட்ட என விகற்பித்து இரண்டு முடிபு கூறப்பட்டதென்பது. மற்று ஆண்டுச் சொல்லெச்சம் என்பதில்லையால் எனின், விடை,

'எனவே னெச்சம் வினையொடு முடிமே'
[தொல். சொல். எச்சவி - 42]

என்று முடித்தார். வினையென வினை பின்னுந் தன்கண்ணதே சொல்லெச்சம், அதுகொண்டு முடிதல் இவ்வாய்பாடு, அவ் வேற்றுமை நோக்கி வேறு சொல்லெச்சம் என வேண்டினார் என்பது.

முன்னர் மூன்றுமேல் வந்து முடிக்கும் எஞ்சு பொருட்கிளவியில என, ஒன்று உடைத்து என்பது பட்டுநின்றது; அஃதியாதோ சொல்லெச்சம் என்பது.

இனி, அதற்கு முடிபு கூறுகின்றார். (சச)

**435. சொல்லெ னெச்ச முன்னும் பின்னுஞ்
சொல்லள வல்ல தெஞ்சுத லிலவே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், சொல்லெச்சத்திற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

உரை: சொல்லெனெச்சம் முன்னுயினும் பின்னுயினும் சொல்லென்னுஞ் சொற்கொண்டு முடிதலல்லது பிறிதில்லை என்றவாறு.

வரலாறு: 'பசித்தேன் பழஞ்சோறு தா என நின்றாள்' என்பதாம்.

மற்றுத் தா என நின்றாள் பிறளேயெனின், தா எனச் சொல்லிநின்றாள் என்பதாம். அவற்றுட் சொல்லி என்றானும் சொல்ல என்றானும் ஆக, இரண்டனுள் ஒன்றனுன் முடியும் அது என்பது.

'முன்னும்' என்றது, தா எனச் சொல்லி நின்றாள் என்று கொணர்ந்து முடிப்பின், அது பின் முடிவுபட நின்றதாம் என்பது. (சரு)

**436. அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது 'தகுதியும் வழக்கும்' (தொல். சொல். கிளவி - 17) என்பதனுட் கூறப்படாது ஒழிந்து நின்றதோர் மரபுவழூஉக் காத்தல் நுதலிற்று.

உரை: நன்மக்களுட் கூறப்படாத சொல்லைக் கிடந்தவாறே சொல்லற்க; பிறிது வாய்பாட்டான் மறைத்துச் சொல்லுக என்றவாறு.

வரலாறு: 'கான்மே னீர்பெய்தும்' 'வாய்பூசி வருதும்' என வரும். (சசு)

**437. மறைக்குங் காலை மரீஇய தொரால்.**

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இறந்தது காத்தது.

உரை : மேல் அவைக்குரியவல்லனவற்றை மறைத்தே சொல்லுக என்றார், இனி அவைதாம் மரீஇயடிப்பட்டவழி-யாயக்கால் மறைக்கவேண்டுவதன்று ; அவை யொழித்து ஒழிந்தன மறைத்தே சொல்லுக என்றது என்பது.

இனி, அவ்வாறு மரீஇவந்தன :

'ஆட்டுப் பிழுக்கை', 'ஆப்பீ' என வரும். (சஎ)

**438. ஈதா கொடுவெனக் கிளக்கு மூன்று
மிரவின் கிளவி யாகிட னுடைத்தே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் கிளவி-யாக்கத்துக் கூறப்படாது ஒழிந்துநின்றதோர் மரபிலக்-கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : இக் கூறப்பட்ட மூன்றும் இரப்போர் சொல்லுதற்குரிய என்றவாறு.

ஒருவரை யொருவர் இரக்குங்கால் இம் மூன்றனுள் ஒன்றுசொல்லி யிரப்பது என்றவாறு. (சஅ)

**439. அவற்று
ளீயென் கிளவி யிழிந்தோன் கூற்றே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேற் கூறப்பட்ட மூன்றனுள், ஈ என்னுஞ்சொல் இரக்கப்படுவோரை இழிந்-தோர் கூறி யிரக்குஞ்சொல் என்றவாறு.

வரலாறு : 'உடுக்கை ஈ', 'மருந்து ஈ' எனவரும். (சக)

**440. தாவென் கிளவி யொப்போன் கூற்றே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இரக்கப்படுவானை ஒப்பான் இரக்குங்கால் தா என்னுஞ் சொற் சொல்லி இரக்கும் என்பது உணர்த்தியவாறு.

வரலாறு: 'சோறு தா', 'ஆடை தா' எனவரும். (௫0)

**441. கொடுவென் கிளவி யுயர்ந்தோன் கூற்றே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், கொடு என்னுஞ் சொல் உயர்ந்தோனுற் கூறப்படுஞ் சொல் என்றவாறு.

வரலாறு: 'இவற்கு ஊண் கொடு, ஆடை கொடு' என வரும். (௫க)

**442. கொடுவென் கிளவி படர்க்கை யாயினுந்
தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பிற்
தன்னிடத் தியலு மென்மனுர் புலவர்.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேற் சூத்திரத்துக்குப் புறனடையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: கொடு என்றது தன்மைக்கு ஏற்றதன்று, படர்க்கைக்கு உரியதோர் சொல்லாயிற்று; உயர்ந்தோன் இழிந்தோனை யிரக்குங்கால், தமனொருவனைக் காட்டி, இவற்குக்கொடு, என்பது; ஆண்டுப் படர்க்கையிடத்திற்கு உரித்தாகக் கூறினுமன்; ஆயினும், அது தன்மையிடத்தே யியல்பு காட்டப் படர்க்கையிடத்தாற்கு உரித்தாகாது அவ்விரக்கப்படு பொருளும் அக்கொடு என்ற சொல்லும் என்பது.

தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பில் தன்னைக் கொடு என்றது வாய்பாடென்றதேனும் அது தனக்கே சொல்லியவாறு.

உம்மையாற் பிறகிளவியும் படர்க்கையாயினும் தன்னைப் பிறன்போற் கூறுங்குறிப்பிற் றன்னிடத்து இயலும் என்றவாறு; ஆண்டு இரவின்கிளவி பல்வழி யென்பது. ‘அங்ஙனஞ் சொல்லுவானே பெருஞ்சாத்தன் தந்தை, சொல்லப்படுவாளோ பெருஞ் சாத்தன் தாய்’ என்னும் தன்னைப் பிறன் போல்வானும்; அது தன்னிடத்து இயலும் என்றவாறு. (ருஉ)

443. பெயர்நிலைக் கிளவியி னாஅ குநவுஞ்
சினைநிலைக் கிளவியி னாஅ குநவுந்
தொன்னெறி மொழிவயி னாஅ குநவு
மெய்ந்நிலை மயக்கி னாஅ குநவு
மந்திரப் பொருள்வயி னாஅ குநவு
மன்றி யனைத்துங் கடப்பா டிலவே.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், ஒருசார் வழுக் காத்தல் நுதலிற்று.

**உரை :** இவை மேற் கூறப்பட்ட இலக்கணத்தினை யன்றி யாகாமையில என்றவாறு.

‘பெயர்நிலைக்கிளவியின்’ என்பது, ஈண்டு உயர்திணைப் பெயரை யுாயிற்று. அவ்வுயர்திணைப்பெயர் உயர்திணைப் பெயர்மேல் வழங்கப்படுதலின்றியும் அமையுமென்றவாறு. நம்பி என்னும் உயர்திணைப்பெயர் ஒரு யானை மேலானும், ஒரு கோழி மேலானும், பிறவற்றின் மேலானும் நிற்கும். நங்கை என்ப ஒரு கிளியையும் என்பது.

இனிச், சினைநிலைக் கிளவியினாவன கடப்பாடின்றி வருமாறு:

‘வெண்கோற்றப் படைத்தலைவன்.’

‘வெள்ளேறக் காவிதி’

என்பன.

இவற்றை முன்னர்க் கிளவியாக்கத்துச் சிறப்புப்பெயர் நின்றவழி இயற்பெயர் வைத்துக்கூறுப என்றார்; இனிச் சினைச் சொற்கணுயின் அது வேண்டுவதன்று என்பது கருத்து.

'தொன்னெறி மொழிவயி னுஅ குநவும்' என்பது முற்றுச்சொல்; அவற்றையும் இவ்வாறே சொல்லப்படுத-லின் இப்பொருள என்றோர் கடப்பாடில என்றார்.

வரலாறு: 'ஆற்றுட் செத்த வெருமை ஊர்க்குயவற் கிழுத்தல் கடன்' எனவும், 'யாட்டுளா னின்னுரை தாரான்' எனவும் வரும். பிறவும் அன்ன.

'மெய்ந்நிலை மயக்கி னுஅ குநவும்' என்பது, மேல்,

'தகுதியும் வழக்குந் தழீஇயின வொழுகும்'
[தொல். சொல். கிளவி - 17]

என்புழி, மங்கல மரபினும் குழூவின்வந்த குறிநிலை வழக்கினும் கூறப்படுமென்றானன்றே, இனி, அவை அவ்வாறன்றித் தத்தம் இலக்கணத்தானுஞ் சொல்லப்படும் என்றவாறு.

வரலாறு: சுடுகாட்டை நன்காடு என்னாது சுடுகாடு என்றும், செத்தாரைத் துஞ்சினர் என்னாது செத்தார் என்றும் கூறவும் அமையும் என்றவாறு.

இனி, 'மந்திரப் பொருள்வயி னுஅகுநவும்' என்பது:

'நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப'
[தொல். பொருள். செய்யு - 171]

அவை, கூறப்பட்ட எழுவகை வழூவிற்றீர்ந்து வருக என்ற கடப்பாடில என்றவாறு.

அவை,

'திரிதிரி சுவாகா கன்று கோண்டு
கறவையும் வத்திக்க சுவாகா'

என்றாற்போல வரும்.

இச் சூத்திரத்திற்குப் பிறிதுமோர் பொருள் உரைப்பாரும் உளர். இதுவும் மெய்யுரை போலும் என்பது. ()

**444. செய்யா யென்னு முன்னிலை வினைச்சொல்**
**செய்யென் கிளவி யாகிட னுடைத்தே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது வினையியலுள் ஒழிந்துநின்ற ஒழிபு உணர்த்துதல் நுதலிற்று.

**உரை :** செய்யாய் என நின்ற முன்னிலை வினைச்சொல் செய் யென்னுஞ் சொல்லும் ஆமிடன் உடைத்து என்றவாறு.

'இந்நாள் எம்மில்லத்து உண்ணாய்' என்பது ; அது செய்யாய் என்பது, அதுசெய் இனி என்றுமாம். (௫௪)

**445. முன்னிலை முன்ன ரீயு மேயு**
**மந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே.**

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இடைச்சொல்லோத்தினுள் ஒழிந்து நின்ற ஒழிபு உணர்த்துதல் நுதலிற்று.

**உரை :** முன்னிலைக்கண்ணுன ஈகார ஏகார இடைச்சொற்கள் முன்னிலைக்குப் பொருந்திய மெய்யை யூர்ந்து வரும் என்றவாறு.

வரலாறு :

'சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே' [அகம் - 46]

எனவும்,

'அட்டி லோலை தொட்டனை நின்மே' [நற்றிணை - 300]

எனவும், இவை யிரண்டும் தத்தங் குறிப்பிற் பொருள் செய்யும் இடைச்சொல் என்பது ; ஈண்டு எப்பொருளை விளக்கி நின்றனவோ எனின், புறத்துறவு நீர்மைப் பொருள்பட வந்த என்றவாறு. (௫௫)

**446. கடிசொல் லில்லைக் காலத்துப் படினே.**

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேற் கூறப்பட்ட அவற்றுக்கெல்லாம் பொதுவாயதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

வரலாறு : அழான், புழான் என்பன ; அக்காலத்து அவை யுண்மையான் ஆசிரியன் ஓதி முடிபு கூறப்பட்டன.

இனிச், சுட்டுச்சினை நீடிய ஐகாரவீற்றுப் பெயர் (தொல். எழுத்து. தொகைமரபு - 17) உறழ்ந்து முடிக என்றான் ஆசிரியன், அக் காலத்து அவை யுண்மையான் ; இப்பொழுது அவற்றிற்கு உதாரணமில்லை. பிறவும் அன்ன.

இனி, ஆசிரியனால் ஆகா என ஓதப்பட்டன தோன்றுவ உள ; அவை, ஞெண்டு என்றும், நீர்கண்டக என்றும், சம்பு சள்ளை என்றும் வரும். (ருசு)

**447. குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி யறிதல்**
**குறைத்தன வாயினு நிறைப்பெய ரியல.**

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், செய்யுட்கு ஆவதோர் முடிபு கூறுதல் நுதலிற்று.

உரை : முன் செய்யுளீட்டம் தன்மையானே கடியப்படுமென்றே யறியக்கிடந்தது ; இனி, அவற்றை முழுவதூஉங் கிடை கடாவாது குறைத்துக் கடாவப்படுதலும் உடைய ஒரோவழி, அங்ஙனங் குறைக்கப்பட்டதேனுங் குறையாது நின்றவிடத் தியலுமாறே புலப்பட்டு இயலுஞ் செவிக்கு என்றவாறு.

இனி, அவை குறைக்குமிடத்துத், தலைக்குறைத்தலும் இடைக்குறைத்தலும் கடைக்குறைத்தலும் என மூன்று வகையாற் குறைக்கப்படும் என்பது.

அவற்றுள் தலைக்குறைத்தது :

'மரையிதழ் புரையு மஞ்சேஞ் சீறடி'

என்பது ; ஆண்டுத் தாமரை எனற்பாலார் மரை என்று தலைக்குறைத்தார் என்பது.

இடைக் குறைத்தல் என்பது :

'வேரிநி ணோதி வெருக்கண் டன்ன'

என்பது ; ஆண்டு, ஓந்தி எனற்பாலார் ஓதி என்று இடைக்குறைத்தார் என்பது.

இனிக் கடைக்குறைத்தல் என்பது :

'நீலுண் டுகிலிகை கடுப்ப'

என்பது ; நீலமுண் டுகிலிகை எனற்பாலார், நீலுண்டுகி-லிகை என்றார் என்பது.

'குறைக்கும்வழி யறிதல்' என்பது, குறைக்கைக்குத் தகக் குறைக்கப்படுவது என்றற்கு என்பது.

'நிறைப்பெயரியல' எனவே, இவ்விகாரம் பெயர்க்-கண்ணதே யென்பது பெற்றாம்.

மற்றுச்,

'சென்றா ரன்பில தோழி'

என, அன்பிலர் எனற்பாலார், அன்பில என்றார் ; எனவே, வினைச்சொல்லுங் குறைக்கப்பட்டதெனின், 'நிறைப்பெய-ரியல' என்றது, பெயர்ச்சொல் என்றவாறு. அக் குறைக்-கப் பெறுவன அம் மூன்றிடத்துள் எவ்விடத்துங் குறைக்-கப் பெறினும் பெறுக.

பெற்றன குறையாதபோது நின்ற தத்தம் நிறைபு நிலைப்பெயரவேயாக வுணரப்படும் என்பார், 'நிறைப்பெய ரியல' என்றார் என்பது ; இதுவும் ஒரு கருத்து. (ருஎ)

**448. இடைச்சொல் லெல்லாம் வேற்றுமைச் சொல்லே.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இடைச்சொல் எனப்பட்டன அவற்றுக்கட் படுவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : முன்னர் வேற்றுமை யோத்தினுள் ஐ ஒடு கு இன் அது கண் என்னும் உருபுகளையன்றே வேற்றுமைச் சொல்லென்று உணர்த்தியது ; இனி அவையன்றி ஒழிந்த இடைச்சொற்களையும் வேற்றுமைச்சொல் என அமையும் என்றவாறு.

என்னை, அவையும் தாமாக நில்லா, பெயரும் தொழிலும் அடைந்து நின்றும் அவற்றையே பொருள்வேற்றுமைப் படுக்குமாகலின் என்பது. (ருஅ)

**449. உரிச்சொன் மருங்கினு முரியவை யுரிய.**

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், உரிச்சொற்கடிறத்துப்படுவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: இடைச்சொல் லெல்லாம் வேற்றுமைச் சொல்லாதற்கு எவ்வாறுரியவாயினமன், அவ்வுரிமை உரிச்சொற்கண்ணும் எய்தும் என்றவாறு.

உம்மை இறந்தது தழீஇற்று. உரிச்சொல் லெல்லாம் வேற்றுமைச்சொல் என்றது மேற்கூறிய இடைச்சொல்லேபோல உரிச்சொல்லும் தாமாக நில்லா, பெயரும் வினையும் அடைந்து பொருள்வேறுபடுதலுடைய, அது நோக்கி யென்பது. இருதலையாக அவற்றை வேற்றுமைச் சொல் என்றவாறு. (ருகூ)

**450. வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், முன்னர் வினையியலுள் வினையெச்சம் என்று ஓதப்பட்டனவற்றுக்கண் ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : வினையெச்சம் என்று கூறப்பட்டன செய்யுட் கட்டாம்வந்து முடிபு கொண்டதன் றன்மைப்பாலேகில்லா; நின்றுற் பொருளிசையாவாதலால், ஓர் எச்சந்திரிந்து ஓர் எச்சமாகியும் நிற்கும் இலக்கணத்தினையுடைய என்றவாறு.

வரலாறு : ஞாயிறு பட்டு வந்தான், ஞாயிறு பட வந்தான் என்பதுமன் ஆகற்பாலது.

பட என்பது செயவெனெச்சம் ; அது திரிந்து பட்டு என்னுஞ் செய்தெனெச்சமாகி நின்றதென்பது.

'கோழிகூவிப் புலர்ந்தது'

என்பதூஉம் செயவெனெச்சஞ் செய்தெனெச்சமாகித் திரிந்து நின்றது என்பது.

அங்ஙனம் நின்றவேனும், அவற்றைச் செயவெனெச்சமாக வுணர்ந்துகொளல் வேண்டும், அல்லாக்காற் சொன்முடிபு எய்தாது. என்னை, 'ஞாயிறு பட்டு' என்றக்கால், வந்தான் என்றலும் முடியற்பாலது. பின்னும் ஞாயிற்றின்மேல் வினைகொண்டு முடியற்பாற்று,

'முதனிலை மூன்றும் வினைமுதல் முடியும்'
[தொல். சொல். வினை - 31]

என்று உரைத்தாராகலின் என்பது. கோழி கூவப் புலர்ந்தது என்பதற்கும் அஃது ஒக்கும்.

இனி,

'மோயின ளுயிர்த்த காலை' [அகம் - 5]

என்புழி, மோந்து என்னும் வினையெச்சம், மோயினள் என முற்றுச்சொல் வாய்பாட்டாற் றிரிந்து நின்றதேனும், வினையெச்சமே யாகல்வேண்டும். பிறவும் அன்ன.

பிற என்றதனால்,

'ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்' [குறள். வான்சிறப்பு - 4]

என்பது, குன்றியக்கால் என்னும் வினையெச்சம் குன்றிக்கால் என நின்றது. (சுo)

## 451. உரையிடத் தியலு முடனிலை யறிதல்.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், உலகத்து மாறு-கொண்டு வேறுபட்டியலுஞ் சொற்களவை அமைக என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை : கட்டுரை யுரைக்குமிடத்து நடக்கும் ஒருங்கு நிலையும் என்றவாறு.

ஒன்று உரைக்கு மிடத்து இயைபில்லாத இரண்டு சொல் ஒருபொருட்கண் நிற்பச் சொல்லுதலுண்டு, உண்டேனும் அஃது அமைக என்றவாறு.

வரலாறு : 'இந்நாழிக்கு இந்நாழி சிறிது பெரிது' என்பது ; சிறிதென்ற சொல்லும் பெரிதென்ற சொல்லும் தம்முண் மாறுகோளுடைய' அந்நாழி மேலே நின்றன-வேனும் அமையும் என்பது. என்னை அமையுமாறெனின், சிறிது என்று நின்றதன் சிறுமையே பெரிதென்பான் சொல்லினனல்லன், அந் நாழிக்கு இந்நாழி பெரிய துணை மிகுதியில்லை, பெருமை சிறிதெண்ணிய சொல்லினன் ; அமையும் என்பது. (சுக)

## 452. முன்னத்தி னுணருங் கிளவியு முளவே யின்ன வென்னுஞ் சொன்முறை யான.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் சொற்-கண்ணதோர் பொருள்படுதல் வேற்றுமை யுணர்த்துதல் நுதலிற்று.

உரை : சொல்லினவிடத்துச் சொற்கிடந்தவாறே குறிப்பினாற்கொண்டு உணரப்படும் பொருளும்உள ; சொற்-களதியாண்டாயினுப் மற்று இன்னவென்று தன்மை வேறுபாடு சொல்லுதன் முறைக்கண் என்றவாறு.

வரலாறு :

'செஞ்செவி வெள்ளொக்கலர்'

எனவும்,

'குழைகொண்டு கோழியெறியும் வாழக்கையர்'

எனவும் வரும்.

செஞ்செவி வெள்ளொக்கலர் என்றால், உதிரஞ் சொரி-யுஞ் செவியர், வெளிய சுற்றத்தார் என்பது அன்று; செவி-யெல்லாஞ் சாலச்செம்பொன் அணிந்து, முட்டில் செல்வத்-தாக்கினையுடையர் என்றவாறு.

'குழைகொண்டு கோழி யெறியும்' என்றக்காலும், கோழியெறிதலென்று உணரற்பாலது, முட்டில் செல்வத்-தார் என்பது உணரற்பாற்று. (சுஉ)

## 453. ஒருபொரு ளிருசொற் பிரிவில வரையார்.

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் மரபு-வழுக் காத்தது.

உரை : ஒரு பொருண்மேற் கிடந்த இருசொற் பிரி-வின்றிநின்றன வரையப்படாது என்றவாறு.

வரலாறு :

'வையைக் கிழவன் வயங்குதார் மாணகலந்
தையலா யின்றுநீ நல்குதி நல்காயேற்
கூடலார் கோவோடு நீயும் படுதியோ
நாடறியக் கவ்வை யொருங்கு'

வையைக்கு இறை யெனப்பட்டானும், கோ எனப்பட்டா-னும் அவனுதலால், அவ்விருசொல்லும் ஒரு பொருட்கண்-மேலே நின்றன ; பிறபொருட்குப் பிரியா, அங்ஙனம் நிற்பன அமையும் என்பதாம்.

இனிப், 'பிரிவில வரையப்படா' எனவே, பிரிவுடை-யன வரையப்படும் என்பதாம்; அஃதியாதோ வெனின்,

'கோய்தளிர்த் தண்டலைக் கூற்றப் பெருஞ்சேந்தன்
வைகலு மேறும் வயக்களிறே — கைதொழுதேன்
காலேக வண்ணனைக் கண்ணுரக் காணவேஞ்
சாலேகஞ் சால நட'

இதனுள், 'கூற்றப்பெருஞ் சேந்தன்' என்றார், பின்னைக் 'காலேக வண்ணன்' என்றார்; அவை யிரண்டு சொல்லும் பிரிவுடைய, அதனன் அமையா; யாவோ பிரிவெனின், 'காலேகவண்ணம்' என்பது சாந்து, கூற்றப்பெருஞ் சேந்-தற்கே யுரித்தாய் நிற்பதொன்றன்று. 'காலேகவண்ணம்' என்னுஞ் சாந்து பூசினர்க் கெல்லாங் காலேகவண்ணர் என்று பெயராம், அதனற் பிரிவுடைத்து; ஆதலால், அமையாது என்பது.

மேற் கிளவியாக்கத்து,

'இயற்பெயர்க் கிளவியுஞ் சுட்டுப்பெயர்க் கிளவியும்'
என்றும், [தொல். சொல். கிளவி - 38]

'சிறப்பி னகிய பெயர்நிலைக் கிளவிக்கு'
என்றும், [தொல். சொல். கிளவி - 41]

'ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி'
[தொல். சொல். கிளவி - 42]
என்றும் ஒருபொருண்மேல் இருபெயர் வழுவும், பல பெயர் வழுவும் கூறிப் போந்தான்; அவற்றோடி தனிடை வேற்றுமை தெரிந்துகொள்க. (சுரு)

## 454. ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி பன்மைக் காகு மிடனுமா ருண்டே.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் பால்வழு அமைக்கின்றது.

உரை : ஒருமை சுட்டி நின்ற பெயர்ச் சொல்லும் பன்மைகொண்டு முடியும் இடனும் உடைத்து என்றவாறு.

வரலாறு :

'அங்கலுழ் மாமே யகுதை தந்தை
யண்ணல் யானை யடுபோர்ச் சோழர்'

என வரும்.

இதனுள், 'தந்தை' எனநின்ற ஒருமை முறைப்பெயர், 'சோழர்' என்னும் பன்மைகொண்டு முடிந்தமையின், வழூஉவேயெனினும் அமையும் என்பது;

'யானேம் மூர்புகுவல்'

என்பதும் அது. (சுச)

**455. முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி பன்மையொடு முடியினும் வரைநிலை யின்றே யாற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இது செய்யுட்கு உரியதோர் முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: முன்னிலை சுட்டிய வொருமைச்சொல் பன்மை-கொண்டு முடியினும் வரைந்து மாற்றப்படாது ஆற்றுப்-படைச் செய்யுளிடத்து, அதனை ஆண்டுப் போற்றியுணர்க என்றவாறு.

'கலம்பெறு கண்ணுள ரொக்கற் றலைவ' [மலைபடுகடாம்-50]

என்புழித், 'தலைவ' என்பது ஒருமைப் பெயர்; அது, பின்னை,

'ஒருவி ரொருவி ரோம்பினிர் கழிமின்' [மலைபடுகடாம்-218]

எனப் பன்மைகொண்டு முடிந்தது. முடிந்ததே யெனி-னும் அமைக என்பது; மற்று இதுவும் ஒருமைப்பெயர் பன்மைகொண்டு முடிதலொக்குமாகலின், முன்னர்,

'ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி' [தொல்.சொல்.எச்ச-64] என்னுஞ் சூத்திரத்துள் அடங்கும் பிறவெனின், அற்றன்று, முன் செய்யுளைநோக்கிச் சொல்லினார் அல்லர்; இனிச் செய்யுள் நோக்கிச் சொல்லினார். எங்ஙனம்? முன்னிலையொருமை பன்மைகொண்டு முடிதல் ஆற்றுப்படைச் செய்யுட்கு முன்னிலைக் கட்டுரை பயின்றமையினும் மேலதனைக்கொண்டும் அச்செய்யுள் விதியுடைத்தொன்றாதலானும் அதனை யமைக்க வேண்டும், அதனாற் சொல்லினார் அதற்கே வரைந்து என்பது.

மற்று, ஆற்றுப்படை மருங்கினானே யமையாது போற்றல் வேண்டும் என்பதனாற் பிறவும் உள் ஈண்டுப் போற்றி யுணரப்படுவன என்பது.

'நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளு
மென்னையே குறித்த நோக்கமொடு'

என்புழித், தானும் அன்னாருள்ளாராகலின் பல்லேமுள்ளேம் எனற்பாற்றுமன், ஆயினும் அஃது அமைக என்பது.

இனி,

'ஏவ லிளையர் தாய்வயிறு கரிக்கும்'

எனற்பாற்றுமன், ஆயினும் அமைக என்பது. மற்று இளையர் பல்லாரையுமுடைய தாயைச் சொல்லிற்றாகப் பெறாதோ எனின், அற்றன்று, ஆண்டா பூசலாட்களாகலான் அவர்க்கெல்லாம் ஒருதாயாதலின்மைபின்று என்பது. இனி, ஒரு சாரார்,

'கறையணி மிடற்றினை'

என்னும் முன்னிலை யொருமை, கறையணி மிடற்றினவை என்னும் அஃறிணைப் படர்க்கைப் பன்மையானும் முடிந்ததென்று காட்டுப. இனிக், 'கறையணி மிடற்றினவை' என்றது, அத்தேவனார் கூளிகளை என்ப ஒரு திறத்தார்; அற்றன்று. பின்னையனையை யாதலின் அத் தேவனார்

தம்மே லேறுமாகலின் அமைக்க வேண்டுமென்பர் முன்னை யுரைப்பார்; பிறவுமிவ்வாறு வருவன போற்றி யுணரப்படும் என்றவாறு. (சுரு)

**456. செய்யுள் மருங்கினும் வழக்கியன் மருங்கினு**
**மெய்பெறக் கிளந்த கிளவி யெல்லாம்**
**பல்வேறு செய்தி னூனெறி பிழையாது**
**சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல்.**

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இவ்வதிகாரத்து எடுத்தோத்தே இலேசேயன்றி இவ்வாற்றான் முடியாது நின்றனவற்றுக் கெல்லாம் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை : செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் முன்னரே முடிபு கூறப்படாது நின்ற சொற்கள் இவை என்று தெரிந்து அவற்றை உத்திவகை இலக்கணத்தோடு படுத்திக் காட்டுக என்றவாறு.

வரலாறு :

'திணைத்தா ளன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீ ராரல் பார்க்குங்
குருகு முண்டுதா மணந்த ஞான்றே' [குறுந் - 25]

என்புழிச், 'சிறுபசுங்கால' என்று பன்மையாற் கூறிப், பின்னைக், 'குருகுமுண்டு' என்று ஒருமையாற் கூறுதல் வழுவாயிற்று ; ஆயினும் அமைக என்பது.

'இரண்டனுட் கூர்ங்கோட்ட காட்டுவல்'

என்புழிக், கூர்ங்கோட்டது எனற்பாற்று. என்னை, இரண்டனுள் ஒன்றூற் பின்னை ஒன்றேயாகலின் என்பது. ஆயினும் அமைக என்பது.

இனி, வழக்கினுள் எம்முளவனல்லன் நும்முளவ-னல்லன் என்னும்.

பிறவும் இவ்வாறு இடவழுப்பட வருவன அமைத்-துக்கொள்க.

இனி, ஒரு சாரார், சம்பு சள்ளை சத்தி என்பன ஈண்டுக் காட்டுவாரும் உளர்.

பிறவும் முடியாது நின்றனவெல்லாம் இதுவே விதி-யோத்தாக முடித்துக்கொள்க என்பது. (கூகூ)

ஒன்பதாவது எச்சவியல் முற்றிற்று.

---

## சொல்லதிகாரமும் உண்மைப்பொருளும்

## வரலாறும் முடிந்தன.

## சொல்:

வேற்றுமை யெட்டுத் திணையிரண்டு பாலைந்து
மாற்றுதற் கொத்த வழுவேழும் — ஆறெட்டும்
ஏற்றமுக் காலம் இடமூன்றோ டிரிடத்தும்
ஆற்ற வருவதாஞ் சொல்.

# சொல்லதிகாரம்:

## சூத்திரம் நுதலிய பொருள்

(எண் சூத்திர எண்)

சூத்திரம் முதலிய பொருள்

முற்றிற்று.

# சொல்லதிகாரம்:

## உரையிற் காணும் அரும்பொருள்

(எண் பக்க எண்)

## உரையிற் காணும் அரும்பொருள்

முற்றிற்று.

# சொல்லதிகாரம்:

## வரலாற்றுக் கட்டுரைச் சொற்றொடர்

(எண் பக்க எண்)

வரலாற்றுக் கட்டுரைச் சொற்றொடர்

முற்றிற்று.

# சொல்லதிகாரம்:

## வரலாற்றுச் செய்யுள் மேற்கோள்

[ * இக்குறி இடப்பெற்றவை இடம் விளங்காதவை ; † இக் குறி இடப்பெற்றவை மேற்கோட் சூத்திரங்கள் ; முன்னர் குறிக்காமல் விடப்பெற்ற இடங்களும், பின்னர் விளங்கிய இடங்களும் ஆங்காங்கே இருதலை நகவளைவில் குறிக்கப்பட் டுள்ளன.]

(எண் பக்க எண்)

## வரலாற்றுச் செய்யுள் மேற்கோள்

*முற்றிற்று.*

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 15 | அஃறிணை யென்மனார் அவ ரல என்னாது, பிற | 'அஃறிணை யென்மனார் அவரல' என்னாது, 'பிற' |
| 3 | 32 | மன்னும | மன்னும் |
| 5 | 18 | மேல் அஃறிணை | மேல், 'அஃறிணை' |
| 9 | 12 | என்பது | என்பது, |
| 13 | 23 | அவ்வழி | அவ் வழீஇ |
| 15 | 4 | நல்லன் ? | நல்லன்' |
| 15 | 9 | முறையே | முறை |
| 17 | 5 | தெழுதரு | தெழிதரு, |
| 20 | 13 | உரித்து | உரித்து, |
| 22 | 19 | வேண்டாவாகல் | வேண்டாவாகலால் |
| 24 | 16 | 'புனறரு | எனவும், 'புனறரு |
| 27 | 16 | யென்பது | என்பது |
| 28 | 10 | புறநடை | புறனடை |
| 33 | 21 | (சஈ) | |
| 33 | 26 | | (சஈ) |
| 34 | 15 | கூறிற்றிலர் | கூறிற்றிலர், |
| 35 | 18 | பிரித்துசசொல் | பிரித்துச்சொல் |
| 44 | 11 | முடியாத | முடியாத, |
| 45 | 5 | முன்னர்த்தாம் | முன்னத்தான் |
| 48 | 11 | இயைபு | இயைபு. |
| 54 | 22 | உதாரணப | உதாரணப் |
| 63 | 14 | அகலம்' | கலம்' |
| 68 | 14 | என்பது ; | என்பது, |
| 68 | 14 | சார்பாவது | சார்பாவது ; |
| 69 | 7 | கிழமையாம் | கிழமையவாம் |
| 80 | 7 | பொருட்டாகலின், | பொருட்டாகலின். |
| 81 | 15 | யாசிரியற்கு' | யாசிரியர்க்கு' |
| 81 | 16 | யற்க்' | யர்க்க' |
| 83 | 8 | றேன்றுதன்மேற் | றேன்றுதன் மேற் |
| 87 | 4 | நின்ற தாடை | நின்றது ஆடை |
| 90 | 10 | அவை | அவை, |
| 90 | 25 | செங்கான் | செங்கால் |
| 91 | 25 | எய்துவித்தல், | எய்துவித்தல் |
| 92 | 3 | உயிர்திணைக்கண் | உயர்திணைக்கண் |
| 96 | 11 | சொல்லாமையான் | செல்லாமையான் |
| 104 | 17 | புலவர். | புலவர் என்றவாறு. |
| 105 | 1 | இயல்] | |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 110 | 15 | மத்துணை | மத்திணை |
| 112 | 5 | என்பது. | என்பன. |
| 114 | 7 | ஆகிய | ஆகிய, |
| 115 | 9 | * மக, | மக, |
| 118 | 8 | யானை வந்து | யானை வந்தது |
| 118 | 14 | மொருவற்கு | மொருவர்க்கு |
| 121 | 17 | லாற்றி' | லாற்றின்' |
| 122 | 22 | இருதிணைக்குமுரிய | இருதிணைக்குமுரிய, |
| 131 | 21 | குறிப்புச் சொல் | வினைக்குறிப்புச்சொல் |
| 134 | 14 | பிறவும் | 'பிறவும்' |
| 137 | 22 | பயிறல்ல | பயறல்ல |
| 137 | 24 | பயிறுள | பயறுள |
| 138 | 12 | வாயென் கிளவி | வாயெண்கிளவி |
| 138 | 15 | நுதற்றே | நுதலிற்றே |
| 139 | 5 | மொருவற்கு மொன்றகும். | மொருவர்க்கு மொன்றற்கு [ம். |
| 139 | 23 | பின்னென | மின்னென |
| 141 | 3 | யவ்வையின் | யவ்வயின் |
| 141 | 3 | காலத்து | காலத்துச் |
| 141 | 18 | உரிய | உரிய, |
| 142 | 5 | வழியிடைத் | வழியிடத் |
| 142 | 12 | செய்யும் | செய்யூ |
| 143 | 14 | வினையெச்சமாய்க் | வினையெச்சமாயக் |
| 144 | 14 | வந்தென | வந்தேன் |
| 146 | 9 | உண்ணும | உண்ணும் |
| 152 | 15 | என்று மன்னுகற்பாலது. | என்றுமன் ஆகற்பாலது |
| 152 | 24 | வினையினை | வினுவினை |
| 153 | 4 | நோவுபடும் | நேர்வுபடும் |
| 153 | 6 | நோவுபடும் | நேர்வுபடும் |
| 159 | 26 | வராலறு : | வரலாறு : |
| 161 | 20 | பெயரொ | பெயரோ |
| 164 | 19 | பின்னுங் | ஒன்றே பின்னுங் |
| 165 | 8 | 'வருமே, சேயிழையந்திற் | 'வருமேசேயிழையந்திற், |
| 168 | 19 | போக்கியோள்' | போகியோள்' |
| 175 | 12 | கூப்பெயர்க் | கூஉய்ப்பெயர்க் |
| 177 | 21 | மன், ஆர், | மன், மார், ஆர், |
| 180 | 19 | எனவும் | வும் |
| 180 | 20 | எனவும் | வும் |
| 181 | 21 | உருவக் குதிரை' | 'உருவக் குதிரை', |
| 185 | 10 | க்தழ்ந் துறைவன்' | கதழுந்துறைவன்' |
| 185 | 11 | விரைந்து உறைவன் | விரையுந் துறைவன் |
| 191 | 10 | உள்ளமலி | உள்ளல்மலி |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 195 | 16 | மியம்மலு | மியம்பலு |
| 195 | 25 | 'சிலைக்கும்' | 'ஏறு சிலைக்கும்' |
| 197 | 4 | குரங்கு | குறங்கு |
| 197 | 5 | குரங்கு | குறங்கு |
| 200 | 18 | என்பதஉம். | என்பதாம். |
| 207 | 13 | கெழூஉ என்பம்து | கெழூ என்பதூஉம் |
| 209 | 3 | வடசொலென | வடசொலென் |
| 220 | 17 | இசை நிரை | இசை நிறை |
| 221 | 6 | வுவமத் | யுவமத் |
| 223 | 4 | சிறைப்புடைத் | சிறப்புடைத் |
| 230 | 17 | யானைக்கோடு | யானைக்கோடு, |
| 231 | 5 | ஒருவினை | ஒருமைவினை |
| 233 | 14 | நோக்கி | நோக்கி ; |
| 233 | 16 | இல்லையென்றே; | இல்லையன்றே |
| 236 | 17 | என்றார் | என்றான் |
| 237 | 13 | செவ்வியன், | செவ்வியன் |
| 238 | 3 | யென்றார் | யென்றார், |
| 238 | 4 | விளக்காக, | விளக்காக. |
| 239 | 13 | என்று மொழிந்தன | என்றும், ஒழிந்தன |
| 239 | 16 | முடியுமென்று | முடியுமென்றுங் |
| 239 | 22 | முதல் வினைமுதலானும் | வினைமுதலானும் |
| 243 | 22 | ஒழித்து | ஒழிந்து |
| 244 | 16 | ஓதப்பட்ட என | ஓதப்பட்ட, 'என' |
| 244 | 25 | மூன்றுமேல் வந்து | மூன்று மேல்வந்து |
| 246 | 10 | ஆப்பீ' | 'ஆப்பி' |
| 247 | 14 | தன்னிடத் | றன்னிடத் |
| 247 | 21 | கூறினுமன் ; | கூறினன்மன் ; |
| 247 | 22 | உரித்தாகாது | உரித்தாகாது, |
| 250 | 22 | யாரே | யாரோ |
| 251 | 13 | ஞெண்டு | ஞண்டு |
| 251 | 14 | சம்பு சள்ளை | சம்பு, சள்ளை |
| 253 | 20 | தழீஇற்று. | தழீஇயிற்று. |
| 254 | 18 | முடியும்' | முடிபின' |
| 256 | 5 | வாழக்கையர்' | வாழ்க்கையர்' |
| 256 | 20 | கிழவன் | இறைவன் |
| 257 | 7 | சாலநட' | சாரநட' |
| 259 | 12 | போற்றல் வேண்டும் | 'போற்றல் வேண்டும்' |
| 259 | 22 | ஆண்டா | ஆண்டு ஆண் |
| 260 | 26 | ஒன்றாற் | என்றாற் |